அன்றாடம் அணியும் ஆடைகளுக்கு

# அத்தனை வெண்மையும் பொலிவும்

# அளிப்பது ஸன்லைட்




அன்றாடத் துணிகளுக்கா அத்தனை புதுமைமிகு தூய்மை? அத்தனை வெண்மையும் பொலிவும்? 'ஆம், ஆம்' என்கிறது ஸன்லைட் சலவை. இல்லத்திலே சலவை செய்ய எல்லாத் துணிகளுக்கும் ஏற்றது...

**ஸன்லைட் — நுரைவளமுள்ள தூய்மையான சோப்.**

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

S. 33-X52 TM

# கல்கி

சுபகிருது. கார்த்திகை 17 — டிசம்பர் 2உ 1962


## பொருளடக்கம்



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.





மலர் 22

தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

இதழ் 18

# போர் நிறுத்தம்

பாதுகாப்பு மந்திரியாக ஸ்ரீ சாவன் அவர்களும், சேநாதிபதியாக ஸ்ரீ சௌத்ரி அவர்களும் பதவி ஏற்றவுடனேயே சீனர்கள் போரை நிறுத்தியுள்ளனர். இந்தியாவுடன் இது குறித்து எவ்வித உடன்படிக்கையும் செய்து கொள்ளாமல், தாங்களாகவே தாக்குவதை நிறுத்தியுள்ளனர்.

சீனர்களின் போர் நிறுத்தம் நல்லெண்ணத்தில் விளைந்ததா, நம்பகமானதா என்பது ஒருபுறம் இருந்தாலும், இது காரணமாக இந்தியப் படையினரும் யுத்தத்தை நிறுத்த நேர்ந்திருப்பதில் மனமகிழ்ச்சி தரும் ஓர் அம்சமுண்டு. எதிராளியின் செயலை எதிர்பாராது ஒருவர் சமாதான நடவடிக்கை எடுத்தால் (அது போலியாகவே இருப்பினும் கூட) அந்த எதிராளியும் தானாகவே சமாதானமாகிறார் என்பதைக் கண்டு விட்டோம். சந்தேகாஸ்பதமான ஒருதலைப்பட்ச நடவடிக்கையே நல்ல விளைவுகளை அளிக்ுமானால் எல்லா நல்ல விஷயங்களிலும் அந்தரங்க சுத்தமாக ஒருதலைப்பட்ச நடவடிக்கை எடுப்பது எவ்வளவு நற்பலனளிக்கும் என்பது இதிலிருந்து தெரிகிறது. வல்லரசுகள் கவனிக்க.

சீனா மெய்யாகவே சமாதானத்தை விரும்புகிறது என்று நம்பச் சற்றும் இடமில்லை. தங்களது துருப்புக்களையும், தளவாடங்களையும் குவித்துக் கொள்வதற்கு அவகாசம் வேண்டி யிருப்பதால்தான் இப்போது சீனா யுத்தத்தை நிறுத்தியுள்ளதோ என்று தோன்றுகிறது. அல்லது, இந்தியாவில் கம்யூனிஸ்ட்களுக்குப் பெருந்த ஆதரவில்லை; தொழிற் சங்கங்களும், தொழிலாளர் பெருமக்களும் சுதேச பக்தியில் வேறெவருக்கும் சளைத்துவிடவில்லை என்பதைக் கண்டு ஏமாற்றமடைந்து சீனா சண்டையை நிறுத்தி யிருக்கக் கூடும். அல்லது, தான் சமாதானத்தை விரும்பிச் செயல் பட்டபோதிலும் இந்தியா அதற்கு இணங்கவில்லை என்பதாக இந்தியாவுக்கு அவப்பெயர் வாங்கி வைக்கவே அது போரை நிறுத்தி யிருக்கலாம். எல்லாவற்றையும் விட முக்கியமாக, மேல் நாடுகள் சற்றும் தயங்காமல் இந்தியாவுக்குத் தாராளமாக ராணுவ உதவி அளிப்பதைக் கண்டு சீனா யுத்தத்தை நிறுத்த எண்ணியிருக்கலாம்.

எவ்வாறாயினும் இதயபூர்வமாக நிகழாத இந்தப் போர் நிறுத்தத்தைக் கண்டு நாம் நமது போர் முயற்சிகளைச் சற்றும் தளரவிடலாகாது. பாரத மக்களின் நாட்டுப்பற்று விம்மி எழுந்து உணர்ச்சிப் பிரவாகமாகப் பொங்குவதைக் கண்டு, அந்த உற்சாகத்தைக் குலைக்கவே சீனா போர்நிறுத்த வேஷம் போட்டிருக்குமானால், அப்படி வேஷம் போட்டது எவ்வளவு மடமையாகும் என்பதை அது உணருமாறு நாம் செய்ய வேண்டும். முன்பு சீனா பஞ்சசீல கோஷமிட்டபோதும், தோழனாக வேஷமிட்ட போதும் நம்பி மோசம் போனதெல்லாம் போதும்.

சீனா போர் நிறுத்த காலத்தில் தனது ராணுவ பலத்தைப் பெருக்கிக் கொள்ளுமானால் நாமும் அதே இடைவெளியில் அதைவிடத் தீவிரமாக நமது பலத்தை விருத்தியாக்கிக்கொள்ள வேண்டும். போர்க் கருவிகளையும், வீரர்களுக்குத் தேவைப்படும் உடை, உணவு முதலியனவற்றையும் தக்கபடி திரட்டி வைத்துக் கொள்ள வேண்டும். லடாக் முதலிய பகுதிகளில் நம் அன்புக்குரிய வீர சகோதரர்கள் போதிய உடையும், ஆயுதமுமின்றித் தவித்து எதிரியின் குண்டுகளுக்குக் கோரமான முறையில் இரையானதைக் கண்டு நாம் ரத்தக் கண்ணீர் சிந்தியது போல் இனி நிகழ விடக்கூடாது. எண்ணிக்கையிலும், ஆயுத வசதியிலும் அதிக பலம் பெற்ற சீனப் படைகளிடம் உயிரைப் பலி கொடுப்பதற்கென்றே இந்திய மண்ணின் செல்வங்களை அனுப்பி வைக்கலாகாது. நம் பலத்தை அதிகரித்துக் கொள்ள வேண்டும். எதிரி நம்மைத் தாக்குவதும், நாம்

"நான் அவர்களோடு சேர்ந்துவிடவில்லை"

ராணுவ உதவி

கம்யூனிஸம்

அமெரிக்கா

பிரிட்டன்

PK

தற்காப்பு செய்து கொள்வதோடு நிற்பதும் போதாது. நாம் முன்னேறி எதிரியைத் தாக்கி அவர்கள் பின்வாங்கும்படி செய்ய வேண்டும்.

இந்த அளவுக்கு நமது ராணுவம் பலம் பெற வேண்டுமானால் அதற்கு மேல்நாடுகளுடன் கூட்டு சேர வேண்டியது மிகமிக அவசியமாகும். 'மேல்நாடுகளே இவ்வாறு நம்மைக் கூட்டு சேருமாறு கூப்பிடவில்லையே; நாம் ஏன் நடுநிலைமைக் கொள்கையைக் கைவிட வேண்டும்?' என்று கேட்பது அசட்டுத்தனமாகும். ஆபத்திலுள்ள ஒரு நாட்டுக்கு உதவ வரும்போது நிபந்தனை விதிப்பது இலட்சணமாகாது என்பதால் மேல்நாடுகள் பெருந்தன்மையாக நடந்து கொள்வதாகவே கருத வேண்டும். இன்றைய நெருக்கடியில் நாம் அவர்களுடன் கூட்டு சேருவது நமக்குத்தான் அவசியமாகும் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். கம்யூனிஸ்டு முகாமைச் சேர்ந்த ஒரு பெரும் நாடு நம் மீது படையெடுத்துள்ளது; இன்னொரு பெரும் நாடோ இதைக் கண்டிக்காமல் பேசாமல் இருக்கிறது. இன்னமும் மேல் நாடுகளுடன் சேர நாம் தயங்குவதில் பொருளேது?

முன்பு பின்பற்றிய கொள்கையிலிருந்து வளைந்து கொடுப்பதா என்று தயங்க வேண்டாம். வளைகிற வில் மீண்டும் நிமிரும்போது மேலும் சக்தி பெறுவது போல் இப்போது வளைந்து கொடுப்பதால் பிறகு நாம் அதிக சக்தியுடன் நிமிர்ந்து நிற்க முடியும். நட்புடனும், விவேகத்துடனும், முன் யோசனையுடனும் நம்முடன் இணைய வரும் நாடுகளிடம் அதே நட்பையும், விவேகத்தையும், முன் யோசனையையும் காட்டி இணைப்பை இறுக்கமாக்கிக் கொள்ள வேண்டும். இது ஆயுத பலத்தை மட்டும் பெருக்கிக் கொள்ளும் காரியமல்ல. அன்பையும், அறிவையும், ஆத்மபலத்தையும் பரஸ்பரம் கொடுத்து உதவிக் கொள்ளும் அமைப்பு இது. ஆயுத அடிப்படையில் மட்டுமின்றித் தர்மத்தின் அடிப்படையில் உலக நாடுகள் ஒன்று சேர்ந்து எதிர்த்தால் அப்போது எதிரியின் தோல்வி மேலும் நிச்சயமாகும். தர்மத்தின் சக்தியை நம்பினாலும் நம்பாவிட்டாலும் அது தனது ஆட்சியை நடத்தத்தான் செய்யும். தர்மம் என்பது சாசுவதமான ஓர் இயற்கைத் தத்துவம்; தோன்றி மாறும் கோட்பாடு அல்ல. கம்யூனிஸக் கோட்பாடாயினும் சரி, மண்ணாசை வெறியாயினும் சரி தர்மத்துக்குத் தலைவணங்கித்தான் ஆக வேண்டும். எனவே நாம் தர்ம ரீதியில் உலக நாடுகளின் கருத்தைத் திரட்ட வேண்டும். சீனா ஐ. நா. வில் அங்கம் வகிக்காவிடினும், கொரியா விவகாரத்தில் செய்தது போல் ஐ. நா. சபையைக் கொண்டு சீனாவை நல்வழிக்குக் கொண்டுவர முடியுமா, அதிலும் ருஷியா தடைசெய்யுமா என்பதையும் பார்க்க வேண்டும். அது எப்படியாயினும் மேல் நாடுகள் நமக்குத் துணை நிற்கின்றன என்பதை எதிரி அறியுமாறு செய்ய வேண்டும். அப்போதுதான் உண்மையான போர் நிறுத்தம் ஏற்படும்.

# என்ன சேதி?

## கம்யூனிஸ்ட் அடைப்பு

சென்னை அரசாங்கத்துக்கு இந்தக் கெட்ட பெயர் வந்திருக்க வேண்டிய அவசியமில்லை. கம்யூனிஸ்ட் தோழர் கல்யாணசுந்தரம் அவர்களைப் பாதுகாப்புக் குழு கூட்டத்துக்கு வருமாறு தமிழக அரசாங்கம் அழைப்பு அனுப்பி விட்டு, அந்த அழைப்பை அவர் ஏற்றுச் சென்னை எழும்பூர் ஸ்டேஷனில் வந்திறங்கினால் அவரைச் சிறைக்கூடத்துக்கு அழைத்துப் போக வேண்டிய துர்க்கதி சென்னை அரசாங்கத்துக்கு ஏற்பட்டிருக்க வேண்டியதே யில்லை. தமிழக சுதந்திரக் கட்சியின் தலைவர் திரு சா. கணேசன் கம்யூனிஸ்ட் தோழர் இருக்கும் பாதுகாப்புக் குழுவில் சேர மறுத்த போதே அரசாங்கம் கம்யூனிஸ்ட் தோழரைச் சேர்ப்பதைப் பற்றித் தீவிரமாக யோசித்துக் கைவிட்டிருக்க வேண்டும்.

## ஓர் அரிய பண்பு

வெற்றி அடைந்தபோது மகிழ்ச்சியை வெளியில் காட்டிக்கொள்ளாமல் இருப்பது எளிதல்ல. அமெரிக்க மக்களும், பத்திரிகைகளும் ஜனாதிபதி கென்னடியும் அந்தச் சிரம சாத்தியமான காரியத்தைச் சாதித்து விட்டனர். க்யூபா விவகாரத்தில் அமெரிக்கா ஒரு மகத்தான வெற்றி பெற்றது. அதை அமெரிக்கா மிகவாகக் கொண்டாடினால் குருஷேவுக்கு அவர் நாட்டிலும் கம்யூனிஸ்ட் உலகிலும் செல்வாக்குக் குறைந்து விடும்; அதனால் இந்த வெற்றியைப் பற்றி அளவாகக் குறிப்பிடும்படி ஜனாதிபதி கென்னடியிடமிருந்து பத்திரிகைகளுக்கு யோசனை வந்தது. அதற்குக் கட்டுப்பட்டு அமெரிக்கப் பத்திரிகை உலகமும் பொதுமக்களும் நடந்து கொண்டதைக் கண்டு உலகம் பாராட்டி மகிழ்கிறது.

# அதிகாரிகளுக்குள் ஒரு மணி

தமிழ் நாட்டின் தொழில் சரித்திரத்தையே மாற்றி அமைக்கக் கூடிய நெய்வேலி பழுப்பு நிலக்கரித் திட்டத்தின் காரண புருஷர்களில் முக்கியமானவர் ஸ்ரீ டி. எம். எஸ். மணி அவர்கள். உழைப்புக்கும், திறமைக்கும், மதியூகத்துக்கும் பெயர்பெற்ற ஐ. ஸி. எஸ். அதிகாரி ஒருவர் நாட்டின் முன்னேற்றத்துக்கு எவ்வளவு பேருதவி புரிய முடியும் என்பதை நிரூபித்து விட்டார் ஸ்ரீ மணி அவர்கள். தம் உடல் நலம் குறைவதையும் பொருட்படுத்தாமல் இந்தத் திட்டத்துக்காக அவர் அரும்பாடு பட்டதை அவர் மறைவுக்குப் பின் இன்று எண்ணும் போதும் உள்ளம் உருகுகிறது.



பிரபல வழக்கறிஞர் ஸ்ரீ டி. வி. முத்துகிருஷ்ணய்யரின் குமாரரான மணி முப்பதாண்டுகளுக்கு மேலாக ஸிவில் ஸர்விஸில் சிறப்பாகப் பணி புரிந்தவராவார்.

1937-ம் ஆண்டிலும், பதினைந்தாண்டுகளுக்குப்பின் 1952லும் ராஜாஜி முதன் மந்திரியாக இருந்தபோது அவருக்குக் கீழ் பணி புரிந்து அவரால் மெச்சப்பட்டவர் ஸ்ரீ மணி அவர்கள்.

இது அவரது நேர்மைக்கும், நிர்வாகத் திறனுக்கும் அத்தாட்சியாகும். நாடு முழுவதற்குமான மத்திய சர்க்காரில் அவரது சேவை பயனுனபின் நெய்வேலித் திட்டத்தின் பிரதான நிர்வாக அதிகாரியாகவும் பின்னர் மானேஜிங் டைரக்டராகவும் நியமிக்கப்பட்டார். பிறகு டைரக்டர்கள் குழுவின் தலைவரானார். ஐம்பத்துநாலாவது வயதில் திடீரென்று மரணமுற்றபோது அவர் டைரக்டர்களின் தலைவராக மட்டுமின்றி, நெய்வேலி 'டவுன் ஷிப்' என்ற குடும்பத்தின் தலைவராகவும் விளங்கினார். அவர் அயராது உழைத்து உருவாக்கிய அதே நகரத்தில் அவரது உடலம் தகனம் செய்யப்பட்டபோது அந்தப் பெரும் குடும்பத்தினர் அவ்வளவுபேரும் கண்ணீர் பெருக்கினர். ஸ்ரீ மணி அவர்களின் மறைவால் வருந்தும் அவரது உறவினர் அன்று தங்கள் துக்கத்தை எவ்வளவு பேர்கள் பகிர்ந்து கொள்கின்றனர் என்று கண்டிருப்பார்கள்.

ஸ்ரீ டி. எம். எஸ். மணி அவர்களுக்கு நெய்வேலித் திட்டம் என்றென்றும் ஒரு நினைவுச் சின்னமாகத் திகழும்.

# ஜெர்மன் ஜனாதிபதி லூப்கெய்

ஜெர்மனிக்கும் பாரத நாட்டுக்கும் நீண்ட காலமாக நெருங்கிய தொடர்பு இருந்து வந்துள்ளது. நமது வேதங்கள், உபநிடதங்கள், இலக்கியங்கள், தமிழ் இலக்கியங்கள் ஆகியவற்றின் சிறப்பை உணர்ந்து மேனாட்டினருக்கும், ஏன், நம் நாட்டினருக்கும் அறிமுகப் படுத்தியவர்கள் அவர்கள்தானே! சாகுந்தலத்தைப் பற்றி ஜெர்மனியின் மகாகவி காதே கூறியவற்றை யாரால் மறக்க முடியும்? அன்று ஏற்பட்ட தொடர்பு இன்று வரை பல துறைகளில் பரிமளிப்பதைப் பார்க்கிறோம். ரூர்கேலா எஃகுத் தொழிற்சாலை ஜெர்மானிய நட்புக்கு ஓர் அரிய சின்னமாக விளங்குகிறது.

சென்னைக்கு விஜயம் செய்யும் மேற்கு ஜெர்மனியின் ஜனாதிபதி டாக்டர் ஹென்ரிவிச் லூப்கெய் தம்பதிகளைத் தமிழக மக்களின் சார்பாக மனமார்ந்த நல்வாழ்த்துக் கூறி வரவேற்கிறோம்.

டாக்டர் லூப்கெய் அடக்கம் நிறைந்த பண்பாளர் என்ற பெயர் எடுத்தவர். அவருக்கு விவசாயத்தில் அளவு கடந்த ஈடுபாடு. இரண்டாவது யுத்தத்துக்குப் பிறகு, அவர் ஜெர்மனியில் விவசாய மந்திரியாக இருந்து, உணவு உற்பத்தியில் பெருவாரியான முன்னேற்றத்தை ஏற்படுத்தி விட்டார்.

டாக்டர் லூப்கெய் ஜனாதிபதியான பின்பு ஜனாதிபதிக்குரிய படாடோபங்களையும் ஆடம்பரங்களையும் குறைத்து விட்டாராம். ஏன், ஜனாதிபதியான நாளிலிருந்து, பான் நகரத்திலிருக்கும் ஜனாதிபதியின் மாளிகையில்கூடத் தங்குவதில்லையாம். தமது பழைய இல்லத்திலேயே வசித்து வருகிறாராம். எப்போதாயினும் முக்கியமான விழா நாட்களில் மட்டும் அந்த மாளிகைக்குச் செல்கிறாராம் அவர்.

எளிமையும், நெஞ்சுறுதியும் கொண்ட லூப்கெய் ஹிட்லரின் எதேச்சாதிகாரக் கொடுமைக்குப் பணிய மறுத்தார். தமது கருத்துக்களை மாற்றிக் கொள்ள மறுத்தார். அதனால் அவர் பட்ட துன்பங்கள் பலப் பல. இருபது மாதங்கள் ஜெர்மனியில் சிறை வாசம்கூடச் செய்ய நேர்ந்தது.

ஜெர்மானிய ஜனாதிபதியின் மனைவி ஸ்ரீமதி வில்ஹெல்மினே லூப்கெய் தமது கணவரின் காரியம் யாவினும் கைகொடுக்கும் மாதரசியாக விளங்குகிறார். இவரை மணப்பதற்கு முன்பு கல்வித் துறையில் பணியாற்றிவந்தார் இவ்வம்மையார். பிரஞ்சு, ஸ்பானிஷ், இதாலி, ஆங்கிலம், ருஷ்யமொழி ஆகிய பல பாஷைகள் இவருக்குத் தெரியும்.

இன்று ஜெர்மனியின் பாதிப் பகுதி கம்யூனிஸ்ட் ருஷ்யாவின் ஆட்சிக்குட்பட்டு அல்லலுற்று வருகிறது. நம் நாட்டிலோ கம்யூனிஸ்ட் சீனா வட எல்லையை விழுங்க முயல்கிறது. இதை எதிர்த்துப் போராடும் நம் உணர்ச்சிகளை டாக்டர் லூப்கெய் எளிதில் புரிந்து கொள்வார். தமது நாட்டு மக்களைப் போலவே ஜனநாயகத்துக்காக, மக்கள் உரிமைக்காகப் போராடும் இந்தியர்களைக் கண்டு அவரும் ஆறுதல் பெறுவார்! நமது முயற்சிகளுக்கு அவருடைய ஆதரவும் அனுதாபமும் நிச்சயம் கிடைக்கும்.



# நாடு காக்கும் வீரர்கள்

[ நமது யுத்தமுனை நிருபர் ]



சீனர்களின் படையெடுப்பால் இந்தியாவின் சரித்திரத்தில் இதற்கு முன் கண்டிராத ஒரு புது நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இவ்வளவு காலமாக நம் பாரத பூமியை இமயமலை காத்துக் கொண்டு வந்தது போக இப்போது நாம் இமய மலையைக் காக்க வேண்டியதாகிவிட்டது!

இதன் விளைவாக மேற்கே லடாக்கும், கிழக்கே, 'நேபா' என்ற வட கிழக்கு எல்லை ஏஜன்ஸி பிரதேசமும் இன்றைய தினம் ராணுவ மயமாகக் காட்சியளிக்கின்றன.

உண்மையில், சீனர்கள் இந்தப்பகுதியில் காலடி வைக்க வேண்டிய அவசியமே இடையாது. இந்தியாவுக்கும் சீனாவுக்கும் இடையே உள்ள மக்மாகன் எல்லைக் கோட்டைத் தாண்டி இவர்கள் பல மைல் தூரம் உள்ளே ஊடுருவி வந்திருப்பது இந்திய வீரர்களுக்கு மிகுந்த ஆத்திரத்தை உண்டாக்கியிருக்கிறது. சீனர்களை எப்படியும் அந்த எல்லை வரை துரத்தியடிக்க வேண்டுமென்று இந்திய ஜவான்கள் துடிதுடிக்கிறார்கள். இந்தியப் படை வீரர்களை 'ஜவான்கள்' என்று செல்லமாக அழைப்பது இங்கே வழக்கம். பாரதத்தின் நாலா பக்கங்களைச் சேர்ந்த படைவீரர்களும் இங்கே காணப்படுகிறார்கள்.

நேபா போர்முனையில் இப்போது (நவம்பர் 22ந் தேதி) சீனத் துருப்புகள் 'ஃபுட்ஹில்ஸ்' என்ற நகரத்துக்குச் சில மைல் தூரம் வடக்கே இருக்கின்றன. அதற்குத் தெற்கே அவர்கள் வரவில்லை. அங்கே ஆயுத சகிதமாக நின்று கொண்டிருக்கிறார்கள். சீனா வெளியிட்ட போர் நிறுத்த உத்தரவின் விளைவாக, சீனர்கள் அங்கங்கேயே இருந்தபடி தாக்குதல் நடத்தாமலும் இந்தியப் படைகள் மீது சுடாமலும் இருந்துவருகிறார்கள். சீனர்களின் தாக்குதல் ஓய்ந்திருப்பதால் இந்தியப் படைகளும் எதிர்த்துத் தாக்காமல் இருக்கின்றன. இந்தக் கெடுபிடி நிலைமை எந்த நிமிஷத்திலும் உக்கிரமாகி வெடித்து விடக் கூடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ஆனால் இந்திய ஜவான்களுடைய எண்ணமெல்லாம் ஒன்றே ஒன்றுதான். செப்டம்பர் 8-ந் தேதி சீனர்கள் திடீரென்று படையெடுத்துத்தாக்கஆரம்பித்ததற்கு முன்னால் அவர்கள் எந்த இடத்தில் இருந்தார்களோ அந்த இடம் வரையில் அவர்களைத் துரத்தியடிக்க வேண்டும் என்பதே அது. சீனர்கள் தாமாக வாபஸாகி விட்டால் இந்திய ஜவான்கள் எதிர்த்துத் தாக்காமலே அங்கு சென்று அடைவார்கள். இல்லாவிட்டால் எதிர்த் தாக்குதல் நடத்த வேண்டியதுதான் என்ற முடிவுடன் எந்த நிமிஷத்திலும் அதற்குத் தயாராக இருக்கிறார்கள். புதிய ஜவான்களும் ஆயுதங்களும் விமானங்களில் இந்தப் பகுதிகளுக்கு வந்த வண்ணமாயிருக்கின்றன.

லடாக்கில் புகுந்த சீனர்கள் தாம் பாத்தியதை கொண்டாடும் இடம் வரை பிடித்து ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்தப் பகுதியை என்றென்றும் சீனர் வசமாக்கி விடவேண்டும் என்ற எண்ணம் அவர்களுக்கு இருப்பதாகத் தோன்றுகிறது. ஆகையால் தான் அவசரம் அவசரமாக இப் பகுதியில் சாலைகளையும் மற்ற மராமத்து வேலைகளையும் செய்யத் தொடங்கி யிருக்கிறார்கள். லடாக் பகுதியை ஸ்திரப்படுத்திக் கொள்வதே அவர்களுடைய பிரதானமான நோக்கம்.

நேபா பிரதேசம் ஐந்து பகுதிகளைக் கொண்டது. அவை காமெங், சுபன்ஸிரி, ஸியாங், திரப், லோஹித் என்பன. காமெங் டிவிஷனில் இருநூறு மைல் தூரமும், லோஹித் டிவிஷனில் நூறு மைல் தூரமும் மக்மாகன் கோட்டிலிருந்து இந்தியாவுக்குள் சீனர்கள் ஊடுருவியுள்ளனர். மற்ற மூன்று பகுதிகளில் சீனர்கள் இவ்வளவு தூரம் ஊடுருவவில்லை. இருந்தாலும் இந்திய எல்லையைக் கடந்து முப்பதுமுதல் ஐம்பது மைல் வரை சில இடங்களில் புகுந்திருக்கிறார்கள்.

நேபா பகுதியில் உள்ள நம் காவல் நிலையங்களை நேரில் பார்க்கிறபோதுதான் நம் படை வீரர்கள் எவ்வளவு திறமையோடு, உயிரைத் திருணமாக மதித்துப் போராடுகிறார்கள் என்பது தெரியும்.

சீனர்கள் பல ஆண்டு காலமாகவே இப் பிரதேசத்தின் மீது பாய வேண்டுமென்று திட்டமிட்டு இதற்கென்றே படைகளைத் திரட்டி வைத்திருக்கிறார்கள் என்பது நன்ருகப் புரிகிறது. இல்லாவிடில், திடீரென்று புற்றீசல்கள் மாதிரி சீனத் துருப்புகள் இங்கே வந்திருக்க முடியாது. ஏராளமான பீரங்கிகளும் மற்ற ஆயுதங்களும் நெடுங் காலமாகவே சேகரிக்கப்பட்டுத் திடீரென்று அவை இப்பகுதிக்குள் பிரயோகிக்கப் பட்டிருக்கின்



# உயிர் போனபின் சிகிச்சை!



றன. ஆள் பலத்துக்குப் பஞ்சமில்லை என்ற எண்ணத்துடன்தான் அவர்கள் பெருவாரியான ஆட்களைப் பலியிட்டுக் கொண்டே முன்னேறுவதெனத் துணிந்து விட்டனர் என்பது நன்றாக இங்கே புலப்படுகிறது. உயிர்ச் சேதம் சீனர்களுக்குத்தான் அதிகம் என்பதை யாருமே மறுக்கவில்லை. ஒவ்வொரு காவல் நிலையத்திலிருந்தும் பகுதியிலிருந்தும் பாரத வீரர்கள் வெளியேறும்படி ஏற்பட்டபோதெல்லாம் பெருவாரியான சேதத்தைச் சீனருக்கு விளைவித்து விட்டுத்தான் நகர்ந்திருக்கிறார்கள். ஹிட்லரின் மின்னல் வேகத் தாக்குதல் முறையைக் கையாண்ட சீனர்கள் மின்னல்பூச்சிகளைப் போன்று நம் துருப்புக்களை சேதமடைய வழி செய்துவிட்டார்கள்.

பாரதப் படையினருக்குள்ள சங்கடங்களோ ஏராளமானவை. முதலாவதாகப் பாரதப்படைகள் போர்முனை எல்லைகளுக்குப் போய்ச் சேருவதென்பது அவ்வளவு சுலபமல்ல. ஆயிரக்கணக்கான மைல் தூரம் காடு முரடான காடுகளையும், பத்தாயிரம் அடிக்குமேல் உள்ள பனி மலைகளையும் கடந்து செல்ல வேண்டும். குளிரோ ரொம்பக் கடுமையானது. அடிக்கடி கைகால்கள் மரத்துப் போகும். நம் கைதானு என்றுகூடத் தெரியாது. விரல்கள் சொன்னபடி கேட்க மாட்டா. கடுங் குளிரில் பழக்கப் பட்டிருந்தாலொழிய சமாளிக்கமுடியாதபடி போய்விடும்.

இந்தியத் துருப்புகளுக்கு ஆயுதங்கள், உணவு, உடை முதலான ஒவ்வொன்றையும் விமான மார்க்கமாகக் கொண்டு வந்து மேலேயிருந்து போட வேண்டியதா யிருக்கிறது. இந்திய விமானப் படை வீரர்கள் பல விதமான தொல்லைகளையும், சங்கடங்களையும் சமாளித்து, மரணத்துக்குத் துணிந்து மலைச் சிகரங்களுக்கு ஊடே புகுந்து அந்த சப்ளைகளைக் குறி தவறாமல் போடவேண்டும். இத்தனை சங்கடங்களிருந்தும், அக்கிரமக்கார கம்யூனிஸ்ட் சீனாவின் எண்ணத்தில் இடி விழும்படி செய்யப் பாரத மக்கள் திரண்டெழுந்து விட்டனர்; வயல்களிலும், தொழிற்சாலைகளிலும் உற்பத்தியைப் பெருக்கி, போர் முனைகளில் உள்ள வீரர்களின் கையைப் பலப்படுத்த வேண்டும் என்ற எண்ணம் உண்டாகியிருக்கிறது: இந்த உணர்ச்சி பாரத மக்கள் அனைவருக்கும் ஒரு வெறிபோல் ஏற்பட்டுள்ளது என்பதை அறிந்து நம் ஜவான்கள் பெருமகிழ்ச்சியும், தெம்பும் அடைந்திருக்கின்றனர். இது மட்டுமல்ல. கம்யூனிஸ்ட் சீனாவின் இந்தச் சண்டாளத் தனமான போக்கைக் கண்டு அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ், கனடா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளெல்லாம் "இந்தியர்களே, உங்களுக்கு எந்த விதமான உதவி வேண்டுமோ, தருகிறோம். ஆயுதம் வேண்டுமா, இதோ பிடியுங்கள். இனமா, இரவலா, தவணைக் கடனா என்பதைப் பற்றியெல்லாம் அப்புறம் பேசிக் கொள்வோம்" என்று உதவுகின்றனவே! இது மாதிரியான தகவல்களினால் புதிய தெம்பு பிறந்திருக்கிறது.

நியாயமும், உலகநாடுகளின் நல்லெண்ணமும், நம் ஜவான்களின் வீரமும், எல்லாவற்றுக்கும் மேலாக இந்தப் பாரத புண்ணிய பூமியின் புண்ணியபலனும் நமக்குப் பக்க பலமாக இருக்கும் போது, சீனர்களின் நாடு பிடிக்கும் ஆசை பலிக்கப் போவதில்லை.



# நாட்டின் பாதுகாப்புக்கு

உங்கள்

# சேமிப்பு தேவை

**புதிய 12 ஆண்டு நேஷனல் டிபென்ஸ் சர்டிபிகேட்டுகளை வாங்குங்கள்**

அதிக வட்டி விகிதம்: ஆண்டுக்கு $6\frac{1}{4}\%$ சாதாரண வட்டி அல்லது
$4\frac{3}{4}\%$ கூட்டு வட்டி. வட்டிக்கு வருமான வரி இல்லை

ரூ. 5, 10, 50, 100, 500, 1,000, 5,000 மற்றும்
25,000 ரூபாய் மதிப்புகளில் வழங்கப்படுகிறது

பத்திரங்கள் வாங்கி 12 ஆண்டுகளுக்குப் பின் முதிர்வடைந்தவுடன்
பத்திரத்தின் மதிப்புடன் 75% பிரீமியத்துடன் திருப்பித் தரப்படும்

முதலீடு செய்யக் கூடிய அதிகபட்சத் தொகை
தனி நபர் ரூ. 25,000 இருவர் கூட்டாக ரூ. 50,000

சேமிப்புப் பாங்க் அலுவல் நடத்தும் எல்லா தபால் நிலையங்களிலும் சர்டிபிகேட்டுகள் விற்பனைக்குக் கிடைக்கும்

**புதிய 12 ஆண்டு நேஷனல் டிபென்ஸ்
சர்டிபிகேட்டுகளில் முதலீடு செய்யுங்கள்**

இந்தியாவின் பாதுகாப்பு சக்தியைப் பலப்படுத்துங்கள்



**தேசீய சேமிப்பு நிறுவனம்**

DA 62/569



# மாதர் மன்றம்

மங்களம்மாள், "என்ன! இன்றைக்கு ஆபீசுக்குப் போகவில்லையோ!" என்று கேட்டாள். 'என்ன!' என்று அவள் குறிப்பிட்டது தனது கணவர் கனகசபேசய்யரைத்தான்.

கனகசபேசய்யர் ஏதோ ஒரு சொந்த வியாபாரம் நடத்திக் கொண்டிருந்தார். நல்ல வருமானம்தான். ஆனாலும் அவருக்குக் காலை பத்து மணிக்கு ஆபீஸ் போக வேண்டும், ஐந்து மணிக்கு வர வேண்டும் என்ற கட்டுத்திட்டம் கிடையாது! சில நாட்கள் சீக்கிரம் போவார்; சில நாட்கள் நேரம் கழித்துப் போவார். ஆனால் அவர் சம்சாரம் பேசிய குறித்த கேள்வியைக் கேட்டவுடனே அவருக்கு விஷயம் புரிந்து விட்டது. "ஏன், நான் வீட்டை விட்டுப் போனவுடனே இங்கே மீட்டிங்கு நடத்த ஏற்பாடாகியிருக்கிறதோ?" என்று விஷமப் புன்னகையுடன் கேட்டார்.

"மீட்டிங்குன்னு இல்லே. நம்ம போஸ்ட்மாஸ்டர் அகமுடையாள் மங்கையர்க்கரசி அம்மா, நம்ம சுலோசனா, சுபத்ரா, மீனு இவாளெல்லாம் இன்னிக்குப் பதினொரு மணிக்கு வரதாச் சொல்லியிருக்கா. அவர்கள் எல்லாரும் வந்தால் உங்களுக்கு இடைஞ்சலா இருக்குமேன்னுதான் கேட்டேன்!" என்றாள் மங்களம்.

"நான் இங்கே குத்துக் கல்லாக உட்கார்ந்திருந்தா உங்களுக்கு இடைஞ்சலாயிருக்கும்; அதை எனக்கு இடைஞ்சலாக இருக்கும் என்று சொல்லி, என் தலையிலே ஏன் பழியைப் போடறே? இதோ நான் ஆபீசுக்குப் புறப்பட்டுடறேன்!" என்று சொல்லிக் கொண்டே தம் நாற்காலியை விட்டு எழுந்திருந்தார். எழுந்தவர், "ஆமாம், இன்றைய மீட்டிங்கிலே என்ன முக்கிய தீர்மானங்கள் போடப் போறதாக இருக்கேள்?" என்றார்.

"சீனாக்காரன் வந்திருக்கானே, நம்ம தேசத்திலே படையெடுத்து! அதைப் பத்திப் பேசறதுக்கு....!"

"சீனாக்காரன் வந்திருக்கான் என்று அவனோடு சண்டை போட நீங்கள் படையிலே சேர்ந்து விடுவீர்கள் போலிருக்கே!"

"படையிலே சேர்ந்தால் தான் ஒத்தாசை புரியறதா அர்த்தமா? இங்கிருந்தே நம்ம படைகளுக்கு ஸ்வெட்டர்களும், பனிக் குல்லாய்களும் தைத்துக் கொடுத்து ஒத்தாசை பண்ணலாமே? நீங்கள் இன்னிக்குத் திரும்பி வரும்போது வுல்லன் நூல் வாங்கிண்டு வாங்கோ! உங்க பங்கும் அதில் கொஞ்சம் சேரட்டும்!" என்றாள் மங்களம்மாள்.

"'மேலிடத்து' உத்தரவு வந்துவிட்டது? சரி! சாயங்காலம் ஆபீஸிலிருந்து வரும்போது வாங்கி வருகிறேன்" என்று கூறிப் புறப்பட ஆயத்தமானார்.

மங்களம் மாமிக்கு வயது நாற்பதுக்கு மேலிருக்கும். கொஞ்சம் உலகம் தெரிந்தவள். சகஜமாக எல்லோருடனும் பேசிப் பழகுபவள். அடுப்படிக் காரியங்களிலிருந்து அரசியல் விஷயம் வரை எல்லாவற்றையும் ஓரளவு தெரிந்து வைத்திருப்பவள். அவளுடன் பேசிக் கொண்டிருந்தாலே பொழுது போவது தெரியாது. ஆதலால் மங்களம்மாள் வீட்டில் மத்தியானமானால் ஒரு மாதர் மகாநாடு வாரத்தில் இரண்டு மூன்று நாட்கள் நடக்கும்.

மங்கையர்க்கரசி அம்மாள் மங்களம்மாள் வீட்டுக் கதவைத் தட்டியபோது சரியாக மணி பதினொன்று. மங்களம்மாள் கதவைத் திறந்து விட்டுக் கொண்டே, "அப்பப்பா! இந்த வெய்யிலிலே எப்படித்தான் வந்தீர்களோ!" என்றாள்.

"இங்கே வெயில் என்கிறோம். அங்கே சீனாக்காரனை எதிர்த்துப் போராடும் நம்ம சிப்பாய்கள் கடுங் குளிரைத் தாங்கிக்கொண்டு போராடுகிறார்களாம். இமய மலைச் சாரலில் பதினாயிரம் அடி உயரத்திலே எவ்வளவு குளிரா யிருக்கும்னு யோசிச்சுப் பாருங்கோ!" என்றாள் மங்கையர்க்கரசி அம்மாள்.

அதற்குள் சுபத்ரா — கல்லூரிப் படிப்பை முடித்த ஒரு பெண் — அங்கு வந்து சேர்ந்தாள். "அங்கே நம்ம மலையாளத்து சோல்ஜர் ஒருவர் வெறும் உடலோடே பள்ளம் தோண்டி வேலை செய்து கொண்டிருந்தாராம். 'ஏன் இப்படிச் செய்கிறாய்?' என்று கேட்டதற்கு இந்தக் குளிருக்கு உடம்பைப் பழக்கிக் கொள்ளத்தான்!' என்றாராம். என்ன துணிச்சல் பார்த்தீர்களோ!" என்றாள் சுபத்ரா.

இந்தச் சமயத்தில் மற்றொரு கல்லூரி மாணவியான சுலோசனா அங்கு வந்து சேர்ந்தாள். "இவளைப் பாருங்கள்,



இந்த மதராஸ் வெய்யிலிலே உல்லன் பிராக் போட்டுக் கொண்டு வருகிறாள்!" என்றாள் சுபத்ரா.

"இப்ப எல்லாம் காலமே எவ்வளவோ குளிர்றது!..." என்று ஏதோ சமாதானம் சொல்ல வந்தாள் சுலோசனா.

"ஐப்பசி மாதம் துலா ஸ்நானம் என்று விடியற்காலே வேளையிலே நம்ப பக்கங்களில் பச்சைத் தண்ணீரிலே குளிப்பார்கள் முன் காலத்தில் நம் பெண்கள்..." என்றாள் மங்களம் மாமி.



கே. பி. சுந்தராம்பாள்

"ஐப்பசியாவது கார்த்திகையாவது! இந்தக் காலத்துப் பெண்களுக்குத்தான் எழுந்திருக்கும்போதே புருஷன் பெட்காப்பி போட்டுக் கொடுக்க வேண்டியிருக்கிறதே! வெந்நீர் போட்டுக் கொடுக்கவேண்டியிருக்கிறதே...!" என்று அலுத்துக் கொண்டாள் மங்கையர்க்கரசியம்மாள்.

"இப்படியெல்லாம் ஒரு பழியைப் படித்த பெண்கள் மேல் வைக்கிறீர்களே. உண்மையிலே அப்படி எங்கே இருக்கு? நானும்தான் இத்தனை நாழிகை வீட்டுக் காரியங்களெல்லாம் செய்து முடித்து விட்டுத்தான் வருகிறேன்!" என்றாள் சுலோசனா.

"இங்கே மட்டுமில்லே. பிரிட்டனிலே கூட நூற்றுக்குத் தொண்ணூற்று நான்கு பெண்கள் கல்லூரி விட்டதும் குடியும் குடித்தனமுமாக இருக்க விரும்புவதாகத்தான் சொல்கிறார்களாம். லண்டன் சர்வகலாசாலையொன்றில் புள்ளிக் கணக்கு எடுத்துப் பார்த்ததில் இது தெரிந்ததாம். பெண்கள் உரிமை, பெண்கள் சுதந்திரம் என்று கிளர்ச்சி நடந்த நாட்டிலேயே இப்படியென்றால் நம்ம தேசத்தில் கேட்க வேண்டுமா?" என்றாள் சுபத்ரா.

"என்னமோ அம்மா! படித்த பெண்ணுன்னு அதற்கு வரன் அமைவது கஷ்டமாகத்தான் இருக்கு! அதுவும் இந்தக் காலத்திலே பெண்கள் எல்லாம் பி. ஏ., எம். ஏ.ன்னு படிச்சிருக்கேள். பிள்ளைகள்தான் படித்தவர்களாகக் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. படிக்காத பையனாக இருந்தாலும் பரவாயில்லே, நல்ல வேலையிலிருந்தால் போதும் என்றாலும் பிள்ளைகள் 'படித்த பெண் வேண்டாம்' என்று சொல்லிவிடுகிறார்கள்" என்று அங்கலாய்த்தாள் நாலு பெண்கள் பெற்ற அலமேலு அம்மாள்.

"இனிமேல் அதைவிடக் கஷ்டமாகப் போய்விடப் போகிறது. மாமி! இதோ டில்லியில் ஒரு பிள்ளையாண்டான் சீனாக்காரனை இந்தத் தேசத்தைவிட்டு விரட்டும் வரையில் கலியாணமே பண்ணிக் கொள்ளப் போவதில்லை என்று எழுதி விட்டானாம்" என்று சொன்னாள் சுபத்ரா.

"சொந்த நாட்டுக்கு ஆபத்து வந்திருக்கிற போது, இப்படி வீர இளஞ் சிங்கங்களாக நம்மதேசத்து வாலிபர்கள் எல்லாம் எழத்தான் வேண்டும். கல்யாணமும் குடித்தனமும் என்றைக்கும்தான் இருக்கிறதே!" என்றாள் மங்கையர்க்கரசியம்மாள்.

மங்களம்மாள் இப்போது குறுக்கிட்டாள். "வாஸ்தவம். நீங்கள் சொல்வது நூற்றிலே ஒரு பேச்சு. நீங்கள் சொன்னபடியே, தேசத்திலே எந்த நாளுமில்லாத தேச பக்தி பெருக்கெடுத்துத்தான் இருக்கிறது. படை சேர்க்கும் ஆபீஸ் வாசலிலே ஜே ஜே என்று கூட்டமாம். பதினைந்து வயது பதினாறு வயதுப் பையன்களெல்லாம் தங்களுக்குப் பதினெட்டு வயது என்று சொல்லிப் படையிலே சேரத் துடிக்கிறார்களாம்!" என்றாள்.

"எத்தனையோ பெண்பிள்ளைகள் தங்கள் நகை நட்டுக்களெல்லாம் தேசத்துக்குக் கொடுக்க முன் வந்திருக்கிறார்கள். நேருஜியின் எடைக்கு இரண்டு பங்கு எடையுள்ள தங்கமும், பொன்னும் பஞ்சாப் முதன் மந்திரி பஞ்சாப் மக்கள் சார்பிலே கொடுத்தாராம்!" என்றாள் சுலோசனா.

"ஏன், நம்ம திருப்பதி வெங்கடாசலபதிப் பெருமானே பாளம் பாளமாகத் தங்கக் கட்டிகளைக் கொடுத்திருக்கிறார். பத்திரிகையிலே போட்டோ போட்டிருந்தார்களே!" என்றாள் அலமேலு அம்மாள்.

"வெங்கடாசலபதி மகா பிரபு; கோடீசுவரர். லட்சம் லட்சமாகச் சம்பாதிக்கிறார். அவர் கொடுக்கலாம். அவரைப் பின்பற்றி மற்றப் பெருமாள் கோவில்கள் கொடுத்தால் சாத்தியப்படுமா? தக்க சமயத்தில் பழைய சேனாபதி கரியப்பா நல்ல எச்சரிக்கைதான் செய்திருக்கிறார்!" என்றாள் மங்களம்மாள்.

"என்ன சொன்னார்?" என்று கேட்டாள் அலமேலு அம்மாள்.

"கோயிலிலே இருக்கிற தங்கத்தை யெல்லாம் கொடுத்து விடாதீர்கள். கொஞ்சம் வைத்துக் கொள்ளுங்கள். சுவாமிக்குத் தங்க ஆபரணம் எல்லாம் பூட்டாவிட்டால் பக்தி குறைந்துவிடும். அது நல்லதில்லே என்று எச்சரிக்கை செய்திருக்கிறார்" என்றாள் மங்களம்மாள்.

"வாஸ்தவம்தானே! சர்வாலங்கார பூஷிதையாக வெள்ளிக்கிழமை தோறும் காட்சியளிக்கும் மயிலாப்பூர் கற்பகாம்பாளையும், காஞ்சி காமாட்சியையும், மதுரை மீனாட்சியையும் தரிசனம் பண்ண எவ்வளவு கூட்டம் வரது! மற்ற நாட்களில் அவ்வளவு வரதா? சுவாமிகளானாலும் தங்கம் வேண்டித்தான் இருக்கு!" என்றாள் மங்கையர்க்கரசி அம்மாள்.



விஜயலட்சுமி பண்டிட்

"சண்டைக்கும் வேண்டியிருக்கு!" என்று முத்தாய்ப்பு வைத்தாள் சுபத்ரா.

"சண்டைக்குத் தங்கம் மட்டும் தானா வேண்டியிருக்கு? இதோ இந்தச் சுலோசனா போட்டுக் கொண்டிருக்கிற உல்லன் ஸ்வெட்டர்கள் கூட நம்ம ஜவான்களுக்குத் தேவைப் படுகிறதாம்!"

"ஆமாம் உல்லன் ஸ்வெட்டர், கால் ஜோடு, கை கிளவுஸ் ஆகி-




# "ரெக்கரிங்"

# டிபாசிட் திட்டம்

## இந்த திட்டத்தில் மிகச்சிறு மாதச்சேமிப்பு மூலம் ஒரே சமயத்தில் பெருந்தொகையை அடையலாம்

குறைந்த பட்சம் ரூ. 5/- லிருந்து அதிகப்பட்சமாக அதன் பெருக்குத் தொகை ரூ. 500/- வரையில், டிபாசிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படும்.

பிரதி மாதம் டிபாசிட் செய்யும் தொகையான :-

| | | | | |
|---|---|---|---|---|
| | ரூ. 5/- | ரூ. 10/- | ரூ. 50/- | ரூ. 100/- |
| கீழ்க்கண்டபடி பெருகும் : | | | | |
| 34 மாதங்களில் | ரூ. 180/- | ரூ. 360/- | ரூ. 1800/- | ரூ. 3600/- |
| 46 மாதங்களில் | ரூ. 250/- | ரூ. 500/- | ரூ. 2500/- | ரூ. 5000/- |
| 85 மாதங்களில் | ரூ. 500/- | ரூ. 1000/- | ரூ. 5000/- | ரூ. 10,000/- |

முழு விவரங்கள் பாங்கின் எந்தக் கிளைக் காரியாலயங்களிலும் கிடைக்கும்.

தலைமைக் காரியாலயம் :

## தி இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிட்.

151, மவுண்ட் ரோட், சென்னை-2

எம். ஸிடி. முத்தையா
சேர்மன்

எஸ். ஆர். வி. அரசு
ஜெனரல் மானேஜர்

IOB-12-SA

மையை பின்னத் தெரியுமோ? அவற்றை யெல்லாம் பின்னிக் கொடுக்கச் சொல்லிப் பல வேறு மாதர் சங்கங்களைத் தலைவர்கள் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்'' என்றாள் மங்கையர்க்கரசியம்மாள்.

''பழம்பெரும் நடிகையும், சிறந்த பாடகியுமான கே. பி. சுந்தராம்பாள் தங்க நகைகள் அணிவதில்லை யாதலால் நகைகளுக்குப் பதிலாக ரூ. 25,000 பாதுகாப்பு நிதிக்குக் கொடுத்திருக்கிறார்.''

''அவரவர்களும் தங்களால் இயன்றதைக் கொடுக்க வேண்டியதுதானே?''

இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருந்த போது மங்களம் மாமி வீட்டுச் சமையற்காரர் அவர்களுக்கெல்லாம் கடகடக் காப்பி கொண்டுவந்து வைத்தார்.

'' மாமி! எனக்குச் சீனி போறாது; கொஞ்சம் சீனி கொண்டு வரச் சொல்லுங்கள்!'' என்றாள் மங்கையர்க்கரசி அம்மாள்.

''அதெல்லாம் கூடாது!'' என்றாள் சுபத்ரா.

''ஏனாம்?'' என்றாள் மங்களம்.

''ஆப்பிரிக்காவிலே ஒரு நாட்டில் சீனி என்றால் சர்க்கரையைக் குறிக்குமாம். இப்போதெல்லாம் சீனி என்றால் அக்கிரமக்காரனான சீனாக்காரன் நினைவு வருவதால் சர்க்கரையை (சீனியை) இனி உபயோகிப்பதில்லை என்று சபதம் செய்திருக்கிறார்களாம்! ஆகவே இப்போதெல்லாம் சீனியைச் சேர்த்துக்கொள்வது பெரிய தேசத் துரோகம். வேண்டுமானால் சர்க்கரையை வரவழையுங்கள், அஸ்காவை வரவழையுங்கள். சீனி கூடவே கூடாது'' என்றாள் சுபத்ரா.


ஸ்ரீமதி ரூஸ்வெல்ட்

உடனே எல்லோரும் 'கொல்' என்று சிரித்து விட்டார்கள். அப்போதுதான் அவர்களுக்கு விஷயமே புரிந்தது.

''எங்கள் திருநெல்வேலிப் பக்கத்தில் சீனி என்றுதான் சொல்லுவோம். சர்க்கரை என்றால் வெல்லத்தைத்தான் குறிக்கும்!'' என்றாள் மங்கையர்க்கரசி அம்மாள்.

''அப்படியானால் இனிமேல் நீங்கள் சர்க்கரை (வெல்லக்) காப்பிதான் சாப்பிடவேண்டும்'' என்றாள் சுலோசனா.

''நீங்கள்?''

''நாங்கள் எங்கள் சர்க்கரை (அஸ்கா) காப்பி சாப்பிடுவோம்!'' என்றாள் சுலோசனா. எல்லோரும் மறுபடியும் சிரித்தார்கள்.

''அதென்னமோ காப்பி என்ற பெயரில் நாளைக்கு நாலு தரம் ஏதோ ஒன்றைச் சாப்பிட்டால்தான் எனக்கு இந்த வீட்டு வேலை ஓடறது'' என்றாள் மங்களம்மாள்.

''வீட்டு வேலைக்கே இவ்வளவு தூண்டுதல் வேண்டியிருக்கு! ஆனால் வீட்டு வேலையுடன் உலகுக்கும் உழைத்த பெண்களும் இல்லையா? எலினார் ரூஸ்வெல்ட்டைச் சொல்லுங்கள்'' என்றாள் சுலோசனா.

''ஆமாம், யார் அந்த அம்மா? முன்னே அமெரிக்க ஜனாதிபதியாக இருந்து காலமான ரூஸ்வெல்டின் மனைவிதானே?''

''ஆமாம், அவரேதான்! ரூஸ்வெல்ட் காலமான பிறகும் இந்த அம்மையாரைத்தான் அமெரிக்க மக்கள் 'அமெரிக்காவின் முதல் சீமாட்டி'யாக மதித்துப் போற்றி வந்தனர் என்றால் அந்த அம்மையார் செய்துள்ள பொதுநலப் பணி எவ்வளவு என்று புரிந்து கொள்ளலாம். மாமியாரின் கட்டுத் திட்டங்களை மீறி, 'போலியோ' வியாதி வந்த கணவனை மீண்டும் அரசியல் வாழ்வுக்குத் திருப்பி ஜனாதிபதியாகவே ஆக்கியவராம் அவர். இங்கேயுள்ள மாமியார்கள் மன்னிக்கவும்'' என்றாள் சுபத்ரா.

''அமெரிக்க மக்களிடம் மட்டுமல்ல; இந்தியர்களிடமும் அளவு கடந்த அன்பும் பாசமும் கொண்டிருந்தார் அவர். இந்தியாவின் எழுச்சியிலும் மலர்ச்சியிலும் அளவுகடந்த ஆர்வம் காட்டி வந்தார் ஸ்ரீமதி ரூஸ்வெல்ட்!''

''மணி மூன்றாச்சு. நான் புறப்படுகிறேன்; சாயந்திரம் பம்பாயிலிருந்து என் நாத்தனார் வரதாக இருக்கு.... நான் போகிறேன்!'' என்று எழுந்தாள் அலமேலு அம்மாள்.

''பம்பாய் என்றதும்தான் ஞாபகம் வரது. நம்ம விஜயலட்சுமி பண்டிட்டை பம்பாய்க்குக் கவர்னராக நியமித்திருக்கிறார்கள். பார்த்தீர்களா?'' என்றாள் சுபத்ரா.

''நம்ம விஜயலட்சுமி பண்டிட் என்கிறாயே? அவள் என்ன உனக்குத் தமக்கையா, தங்கையா, நாத்தனாரா, ஓர்ப்படியா — அவ்வளவு உறவு கொண்டாடிப் பேசுகிறாய்?'' என்று அலமேலு அம்மாள் கேட்டாள்.

''விஜயலட்சுமி பண்டிட் என்றால் என்னமோ பெண்ணாய்ப் பிறந்தவர்களுக்கு ஒரு பாசம் கவ்விக் கொள்கிறது. நீங்கள் சொன்ன அத்தனை உறவும் அதுக்கும் மேலேகூட உறவு இருக்கிறாற்போல் தோன்றுகிறது. எவ்வளவு உயர்ந்த பதவிகளைச் சென்ற முப்பது வருஷங்களாக எவ்வளவு பதவிசாக நிர்வகித்து நம்ம நாட்டுக்கு நல்ல பெயரைத் தேடிக் கொடுத்திருக்கா? அமெரிக்காவிலுள்ள ஐ.நா.சபையின் தலைவர் பொறுப்பை முதன் முதல் ஏற்றுக் கொண்ட பெண்மணியே நமது விஜயலட்சுமி பண்டிட்தான். இப்படி நம்ம தேசப் பெண் சமுதாயத்தின் கௌரவத்தை நிலைநாட்டியிருக்கா'' என்று மங்கையர்க்கரசி நெஞ்சம் தழுதழுக்க ஒரு குட்டிப் பிரசங்கமே செய்து விட்டாள்.

சுலோசனா, ''விஜயலட்சுமி பண்டிட் நன்றாகச் சமைப்பாளாம். சமையலிலே தனியான ஆர்வம் கூடவாம்!'' என்றாள்.

''அவள் என்ன, இந்தக் காலத்து மனுஷியா? என்னைப் போல் பழையகாலத்தவள். அந்தக் காலத்திலே ஏழு வயசிலேயே நாங்கள் எல்லாம் சமைக்கக் கற்றுக் கொண்டுவிட்டோம்!'' என்றாள் அலமேலு அம்மாள்.

''அந்த அளவுக்கு விஜயலட்சுமி பண்டிட்டோடே உறவு கொண்டாடுகிறீர்களே. அதுவே சந்தோஷம்'' என்றாள் சுபத்ரா. அதைக் கேட்டுக் கொண்டு அலமேலு மாமி எல்லோரிடமும் விடைபெற்று நகர்ந்தாள்.

மற்றவர்களும் ஒவ்வொருவராக நகர்ந்தனர். அன்றைய மகாநாடு அத்துடன் முடிவடைந்தது. — ''இந்துமதி''



# பாரதப் பெண்

சோமாஸ்

துரைசாமி பெரிய பணக்காரர். அவரைப் பற்றி அறியாதவர்களே அவ்வூரில் இல்லை. அவரைப் பற்றி அறியாதவர்கள் இருந்தாலும், அவர் வசிக்கும் பெரிய பங்களாவைப் பற்றி அறியாதவர்கள் இருக்க மாட்டார்கள்; அப்படியே அவரது பங்களாவைப் பற்றித் தெரியாதவர்கள் இருப்பதாக வைத்துக் கொண்டாலும் துரைசாமியின் பெண் சிங்காரியைப் பற்றித் தெரியாதவர்கள் நிச்சயமாக இருக்கவே மாட்டார்கள்.

சிங்காரிக்கு அவள் தகப்பனார் துரைசாமி வைத்த பெயர் சரஸ்வதி. பிற்காலத்தில் நிலைத்து விட்ட பெயர் சிங்காரி.

சின்னஞ்சிறு வயதுக் கன்னிப் பெண்ணாயிருந்த வரையில் சரஸ்வதி சாதாரணமாய்த் தான் இருந்தாள். பருவம் வந்ததும் அவளே அறியாமலே நாகரிக மெருகும் அவளிடம் ஏறி விட்டது: வேளைக்கு ஓர் உடை; உடைக்கு ஒரு நடை; நடைக்கு ஒரு நாகரிகம் — இப்படி ஒரு கனவுக் கன்னியாகத் திகழ்ந்தாள். மிகப் பெரிய தனவந்தரான துரைசாமி தமது ஒரே மகளின் ஆசைகளை நிறைவேற்றுவதையே தமது வாழ்க்கை லட்சியமாகக் கொண்டிருந்தார். தம் மகளிடம் துரைசாமி அத்தனை பாசம் கொண்டிருந்ததற்கு, அவருக்கு நாற்பது வயதான போது அவள் பிறந்ததை மட்டும் காரணமாகச் சொல்லிவிட முடியாது: மகளைப் பெற்று விட்டு அவர் மனைவி உடனே இறந்து விட்டதையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். பெரிய பணக்காரருக்கு ஒரே மகளாகவும் பிறந்து, பிறந்த உடனே தாயையும் இழந்து விட்டால், தந்தையின் அருமைக்குக் கேட்க வேண்டுமா? துரைசாமியின் பங்களாவில் அவர் மகள் வைத்ததுதான் சட்டம்: அதன்படி நடப்பதுதான் அவர் திட்டம்!

துரைசாமி மிகவும் அருமையாகத் தம் மகளைச் சிங்காரி என்றழைக்கப் போக, சரஸ்வதி என்ற பெயர் மாறிச் சிங்காரி என்னும் பெயரே நிலைத்து விட்டது. அதற்கேற்றாற்போல் சதா சிங்காரியை நிலைக்கண்ணாடி எதிரில் பார்க்கலாம். அரும்பாடுபட்டு அரைமணி நேரமாகத் தலையை வாரிக்கொள்ளும் சிங்காரி பிறகு அரை மணி நேரம் சிரமப்பட்டு முன் நெற்றி மயிரைக் கலைத்துக் கொள்ளுவாள். வயது ஏற ஏறச் சிங்காரியின் அழகிலும், கவர்ச்சியிலும் மெருகு ஏறிக் கொண்டே வந்தது. அழகின் மெருகு ஏற ஏற, அவளது அலங்காரங்களிலும் மெருகு ஏறிக் கொண்டே போயிற்று. பருவம் சிங்காரியின் மேனியில் தன் முழுத் திறமையையும்

காட்டியிருந்தது. தங்கச் சிலை போன்ற அவள் மேனியை ஒரு நாளைக்குப் பத்துப் புடவைகளாவது மாறி மாறித் தழுவி மதிப்புப் பெறும்.

கொண்டை போட்டுக் கொள்வதில் தான் எத்தனை விதங்கள்! பூவைத்துக் கொள்வதில்தான் எத்தனை விதம்! ஒரு நாள் அழுத்தமாக் கொண்டை போட்டுக் கொண்டால் இன்னொரு நாள் கூந்தலைக் கருநாகம் போல் பின்னித் தொங்கவிட்டுக் கொள்வாள்; ஒரு நாள் பூக்கடையே நடந்து வருவதுபோல் தலை நிறைய வர்ண மலர்களைச் சுமந்து கொண்டு வரும் சிங்காரி இன்னொரு நாள் ஒற்றை ரோஜாவை ஒய்யாரமாகத் தலையில் செருகிக் கொண்டு அன்ன நடை போடுவாள்.

வசீகரமிகு தோற்றமும், எடுப்பான மேனி சௌந்தரியமும்கொண்டு வனப்பின் வாரிசாகத் திகழ்ந்த சிங்காரி வெறும் அலங்கார வல்லியாக மட்டும் இருந்துவிடவில்லை.

படிப்பிலும் சூட்டிகையாயிருந்தாள். புடவைகளும், சோளிகளும் நிறைய வாங்கி வந்தது போலவே, பள்ளிக்கூடப் பாடங்களிலும் நிறைய 'மார்க்' வாங்கினாள். நல்ல புத்திசாலியுங்கூட.



துரைசாமிக்கு வயதாக ஆகக் கவலையும் வளர ஆரம்பித்தது. தமக்கு வயது வளர்ந்துகொண்டே போகிறதே என்று அவர் கவலைப்படவில்லை. சிங்காரிக்கு வயது ஏறிக்கொண்டே போவதைக் கண்டுதான் அவர் வேதனைப்பட்டார். சிங்காரி கல்லூரியில் சேர்ந்து படித்தாள். துரைசாமி அவளுக்கு மணம் முடித்து விடத்தான் விரும்பினார். ஆனால் அதைப் பற்றி நினைக்க அச்சமாயிருந்தது. காரணம், தாயில்லாக் குழந்தை என்ற காரணத்தால் சிங்காரிக்கு அளவு கடந்த 'செல்லம்' கொடுத்து வளர்த்து விட்டார். துரைசாமியோ சற்று ஆடம்பரப் பிரியர். வீட்டில் மேஜையில் சாப்பாடு. கோவிலுக்குப் போனாலும் ஆடம்பரமான பட்டு வேஷ்டி உடுத்தி, வெள்ளிக் கூடையில் பழம், தேங்காய், புஷ்பங்களுடன் சிங்காரியையும் அழைத்துக் கொண்டு போவார். ஒரு நாளைக்குப் பல உடைகள் மாற்றும் வழக்கத்தைப் பெண்ணுக்குக் கற்றுத் தந்தவர் துரைசாமி தான். மாலையில் உலாவப் போனாலும் அதற்கென்று தனி உடை; விருந்தாளிகள் வந்தால் அதற்கென்று தனி ஆடை, ஆபரணங்கள், அலங்காரங்களே தனி. இப்படித் தம் நவநாகரிகப் போக்குக்கு ஏற்பச் சிங்காரியையும் வளர்த்திருந்தார்.

அவருடைய சக வக்கீலான சிதம்பரத்துக்கு ஒரு பிள்ளையிருந்தான். அவனும் மெட்ரிக்குப் படித்துக் கொண்டிருந்தான். சிங்காரிக்கு எல்லா விதத்திலும் ஏற்றவன். துரைசாமிக்கு ஏற்ற அந்தஸ்தும், ஆஸ்தியும், வருமானமும் உள்ள பெரிய வக்கீல் சிதம்பரம். ஆனால் சிங்காரியை மருமகளாக ஏற்க அவர் மனைவியும் அவரும் சம்மதிக்க வேண்டுமே. அவர் பழங்கால ஆசார அனுஷ்டானங்களில் நம்பிக்கையுள்ளவர்; அவர் மனைவி அதற்கு மேலே. சிங்காரியின் நவநாகரிகப் போக்கு அவர்களுக்கு ஒரு நாளும் சரிப்பட்டு வராது. சிங்காரியின் போக்கை இனிமேல் மாற்றுவது என்பது முடியாத காரியம்தான்!

கல்லூரிப் பிரின்ஸிபால்



அவர்: இதோ பார், காமாட்சி! நீ இனிமே அரசமரத்துப் பக்கம் போனால் எனக்குக் கெட்ட கோபம் வரும்.....ஆமாம்!

---

ராமசாமிக்கு ஒரு மகன் இருந்தான். அவன் என்ஜினீயருக்குப் படித்துக் கொண்டிருந்தான். நல்ல அந்தஸ்தும் ஆஸ்தியும் உள்ள குடும்பம். ஆனால் அவர்கள் குடும்பத்தினரும் சிங்காரியை மருமகளாக ஏற்றுக் கொள்ளுவார்களா என்பது யோசிக்க வேண்டிய விஷயந்தான். இவளுடைய பகட்டும், படாடோபமும் அவர்களுக்குப் பிடிக்காது.

இப்படி யெல்லாம் துரைசாமி தாமாகவே சிந்தித்து மனத்தைப் போட்டு அலட்டிக் கொண்டார். காரில் ஏறிக் கடற்கரைப் பக்கமாகச் சென்றவர் மனம் சோர்ந்து வீடு திரும்பினார். காம்பவுண்டுக்குள் கார் நுழைந்ததும் அவரை வரவேற்றவள் சிங்காரிதான்.

வீட்டு முற்றத்துப் பந்தலில் தழையத் தழையப் படர்ந்து, தகதகவெனப் பசுமை பரப்பி விரிந்து மணம் கமழும் சம்பங்கிக் கொடி போல் தளதள வென நின்றாள் சிங்காரி. அவளைப் பார்த்ததும் துரைசாமிக்கு ஒன்றுமே சொல்லத் தோன்றவில்லை; மௌனமாகக் காரை விட்டு இறங்கி மாடியில் உள்ள தமது அறைக்குச் சென்று விட்டார். சாய்வு நாற்காலியில் எத்தனை நேரம் சாய்ந்து கொண்டிருந்தாரோ அவருக்கே தெரியாது.

"அப்பா! ரொம்பக் களைப்பாயிருக்கிறதா? வெளியில் போய்விட்டு வந்ததும் சோர்ந்து படுத்து விட்டீர்களே! நாழிகை யாகிறதே. சாப்பிட வருகிறீர்களா?" என்ற இனிய குரலைக் கேட்டு, துரைசாமி விழித்தெழுந்து பார்த்தார். அவருக்கு எதிரில் சிங்காரி சிற்பி செதுக்காத பொற்சிலையாக நின்று கொண்டிருந்தாள். கள்ளங்கபடற்ற அவளது குழந்தை முகம் அவர் மனத்தை நெகிழ வைத்து விட்டது. பாதி மதியை நிகர்த்த அவளது நெற்றியில் செஞ்சாந்துத் திலகத்துக்குப் பதிலாகக் குங்குமப் பொட்டு சிந்தூர வர்ணத்தில் பளீரெனத் திகழ்ந்தது.

தந்தை தன்னையே உற்றுப் பார்ப்பதைக் கண்ட சிங்காரி நாணத்தினால் முகம் சிவந்து, "என் முகத்தில் என்ன அதிசயத்தைக் கண்டு விட்டீர்கள், அப்பா? அப்படி உற்றுப் பார்க்கிறீர்களே!" என்று இனிய குரலில் கேட்டு விட்டுக் கிண்கிணி நாதம் போலச் சிரித்தாள்.

"உன் நெற்றியில் சிவப்புச் சாந்துக்குப் பதிலாகக் குங்குமப் பொட்டு இருக்கிறதே! கோவிலுக்குப் போயிருந்தாயா, அம்மா?" என்று துரைசாமி கேட்டார்.

"ஆமாம், அப்பா! இன்று வெள்ளிக் கிழமையில்லையா? ராஜ ராஜேசுவரி கோயிலுக்குப் போயிருந்தேன். நல்ல தரிசனம் கிடைத்தது.... அர்ச்சனை செய்து உங்களுக்குக் கூடக் குங்குமப் பிரசாதம் கொண்டு வந்து பூஜையறையில் வைத்திருக்கிறேன்...! வாருங்கள். கீழே போகலாம்!" என்று கூறிய வண்ணம் புள்ளி மான்போல் துள்ளி ஓடி விட்டாள் சிங்காரி.

ஆனால் துரைசாமி நிதானமாகத்தான் மாடியை விட்டு இறங்கினார். 'ஆகா! ஒன்றும் தெரியாத குழந்தையைப் போய் யாரோ என்னவோ சொன்னார்களென்று மனத்தைப் போட்டு அலட்டிக் கொண்டோமே!' என்றெண்ணியவாறு கூடத்துக்கு வந்ததும் அவர் கண்ணில் பட்டது அவருடைய தர்ம பத்தினி விஜயலக்ஷ்மியின் படம்தான். என்ன களை! 'என் வயிற்றில் பிறந்த உங்கள் குழந்தைக்கு மாசு கற்பிக்கிறீர்களே' என்று கேட்பது போலிருந்தது. துரைசாமியின் பார்வையைக் கண்ணீர் மறைத்தது.

அன்று காலை துரைசாமியின் பங்களாவுக்குள் ஓர் அழகான வாலிபன் நுழைந்தான்; வாசல் தாழ்வாரத்தில் பேப்பர் வாசித்துக் கொண்டிருந்த துரைசாமியின் எதிரில் பணிவாக நின்றான். துரைசாமி அவனை நிமிர்ந்து பார்த்தார்.

உடனே வாலிபன் இரு கைகளையும் கூப்பி, "நமஸ்காரம், ஸார்!" என்று மிகவும் அடக்கமாகக் கூறினான். துரைசாமி அவனை ஒரு முறை மேலும் கீழும் பார்த்தார்.

அவனுக்கு இருபத்திரண்டு வயதிருக்கும். கருண்ட கேசங்களைக் கொண்ட கிராப்பை அழகாக வாரிவிட்டிருந்தான். முகத்தில் நல்ல களை. உயரத்துக்கேற்ற ஆகிருதியோடு [illegible] சிவந்த நிறமாக நன்றாயிருந்தான். ட்விட் பாண்ட்டும், சில்க் சட்டையும் அவனது கவர்ச்சியை அதிகப்படுத்தின.

"வா, அப்பா! உட்கார். எங்கிருந்து வருகிறாய்?" என்று கேட்டார் துரைசாமி.

"நான் கோயமுத்தூரிலிருந்து வருகிறேன். தங்கள் நண்பர் சச்சிதானந்தம் என்னைத் தங்களிடம் அனுப்பினார். இதோ அவர் கடிதம்" என்று கூறிக்கொண்டே ஒரு கடிதத்தை அவரிடம் கொடுத்தான் அவன்.

துரைசாமி கடிதத்தை வாங்கிப்பார்த்தார்:

"நமஸ்காரம். இந்த வாலிபன் பெயர் மாதவன். இவனுக்குப் பெற்றோரென்றும், உற்றாரென்றும் சொல்லிக் கொள்ள யாருமே இல்லை. இது நாள் வரையில் என்னுடைய ஆதரவில்தான் இருந்தான். நன்றாய்ப் படித்து முன்னேறிக் கல்லூரியில் சேர்ந்தான்; உபகாரச் சம்பளத்துக்கும் ஏற்பாடு செய்தேன். கல்லூரிப் படிப்பு முடிந்து விட்டது. சென்னையில் எஞ்ஜினீயரிங் கல்லூரியில் சேர்ந்து படிக்க விரும்புகிறான். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் செய்து விட்டேன். கல்லூரிச் சம்பளம் முதலியவைகளை நான் பார்த்துக் கொள்ளுகிறேன். தாங்கள் இவன் தங்கியிருக்க வசதி செய்து

டிசம்பர் 11 உ முதல்...

சென்னை மற்றும் தென்னாடெங்கும்...

A.T.M. புரொடக்ஷன்ஸ்...

# தோழன்

டைரக்ஷன் • K. வேம்பு

ஒலிப்பதிவு • ரஹ்மான்

சங்கீதம் • G. ராமநாதன்

கதை • சக்தி கிருஷ்ணசாமி

தயாரிப்பு • A. திருவேங்கடமுதலியார்

பூரண உரிமையாளர்கள்

**PL.CT.S.P. சுப்பிரமணியம் செட்டியார்**

கெயிட்டி தியேட்டர், மவுண்ட்ரோடு, சென்னை-2.

கொடுத்தால் போதும். சாப்பாடு இன்னொருவர் வீட்டில் ஏற்பாடு செய்து விட்டேன். உங்களை ஒரேயடியாகச் சிரமப்படுத்த வேண்டாமே என்றுதான். மேலும், உங்கள் உள்ளத்தைப் போலவே இல்லத்திலும் இடம் இருப்பதை நான் அறிவேனாதலால் இவ்வுதவியை நாடலானேன். பையன் மாதவன் மிகவும் நல்லவன். நான் மிகவும் கண்டிப்புக்காரன் என்பது உங்களுக்குத் தெரியும். நானே அவனைப்பற்றிச் 'சர்டிபிகேட்' கொடுப்பதனால் தாங்கள் அவனுக்கு ஆதரவு காட்டுவீர்களென நம்புகிறேன். பையன் தங்களுக்கு மிகவும் உதவியாயிருப்பான்; தோட்டக்கலையில் தேர்ந்தவன். கணிதத்திலும், தமிழிலும் வல்லவன். ஆங்கிலத்திலும் கெட்டிக்காரன். தங்கள் பெண் சிங்காரி எப்படியிருக்கிறாள்? பார்த்து வெகு நாட்களாகி விட்டன.

அன்புள்ள,

சச்சிதானந்தம்.''

கடிதத்தைப் படித்து முடித்ததும் துரைசாமி அவனைக் கூர்ந்து பார்த்தார். மாதவன் பணிவோடு கையைக் கட்டியவண்ணம் நின்று கொண்டிருந்தான்.

''உட்காரப்பா, மாதவன்! சச்சிதானந்தம் என் நெடுநாளைய நண்பர். அவர் வழக்குகளுக்கெல்லாம் நான்தான் வக்கீல். அவர் சௌக்கியமா யிருக்கிறாரா? சரி, எல்லாம் பிறகு பேசிக் கொள்ளலாம். நீ மாடி அறைக்குப் போ. உன் பெட்டி, படுக்கைகள் எங்கே?'' என்று கேட்டார் துரைசாமி.

''இன்னொரு நண்பர் வீட்டில் வைத்திருக்கிறேன். உங்களைப் பார்த்து விட்டு அவைகளை எடுத்து வரலாம் என்று வந்தேன், சார்!'' என்றான் மாதவன்.

''சரி. மாடியில் வசதியான அறைகள் இருக்கின்றன. நீ எதில் வேண்டுமானாலும் தங்கலாம். முதலில் காரை எடுத்துக்கொண்டு அந்த நண்பர் வீட்டுக்குப் போய் உன் பெட்டி படுக்கைகளை எடுத்து வந்து விடு'' என்று கூறி டிரைவரை அழைத்தார்.

மறு நிமிஷம் கார் வாசலில் வந்து நின்றது; மாதவன் தயங்கிய வண்ணம் காரில் ஏறிக் கொண்டான். உடனே கார் நகர்ந்தது.

மாதவன் வந்ததிலிருந்து பங்களாவும், தோட்டமும் புது எழிலுடன் விளங்கின; கல்லூரிக்குப் போகும் வேளை தவிர மற்ற நேரங்களிலெல்லாம் மாதவன் சதா தோட்டத்திலேயே வேலை செய்து கொண்டிருந்தான். பங்களாவுக்குள் மேஜை, நாற்காலிகள், சோபாக்கள் ஆகியவை மிகவும் ஒழுங்காகப் போடப்பட்டிருந்தன. வாசல் கேட்டிலிருந்து வண்ணப் பூக்கள் நிறைந்த தொட்டிகள் வெகு நேர்த்தியாக வரிசைப் படுத்தி வைக்கப்பட்டிருந்தன.

துரைசாமிக்கு மாதவன் வந்ததிலிருந்து புதுத் தெம்பு உண்டாகி விட்டது. அவனைக் கட்டாயப்படுத்தித் தம் வீட்டிலேயே சாப்பிடச் செய்து விட்டார். மாதவனின் தெய்வ பக்தியும், புத்திசாலித்தனமும், பணிவும் அவருக்கு ரொம்பவும் பிடித்துப் போய்விட்டன.

ஒருநாள் சிங்காரி தன் காரை எடுத்துக் கொண்டு வழக்கம்போல் கல்லூரிக்குப் போய் விட்டாள். துரைசாமி கோர்ட்டுக்குப் புறப்படும் தருணத்தில் டிரைவருக்கு உடல் நலம் சரியில்லை என்ற தகவல் தெரிய வந்தது. அவருக்கு ஒன்றும் தோன்றவில்லை. அன்று அவர் ஆஜராகி நடத்த வேண்டிய மிகவும் முக்கியமான வழக்கு நடக்க விருந்தது. கல்லூரிக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த மாதவன் துரைசாமியிடம் வந்து தான் கல்லூரிக்குப் போய் வருவதாகச் சொன்னான்.

உடனே துரைசாமி, ''மாதவன், டிரைவருக்கு உடம்பு சரியில்லையாம். ஆகையினால்

## வள்ளிமணாளனுக்குத் தில்லியில் ஆலயம்

''அண்ணனுக்கு எட்டாது; தம்பிக்கு எட்டும்'' என்று பழமொழி. தில்லியில் அண்ணனுக்கு எட்டியது. எட்டுக் குடியானுக்கும் எட்டவிருக்கிறது. விநயநகரில் விநாயகன் திருப் பிரவேசம் செய்து ஆண்டு நிறைவும் கொண்டாடி விட்டான். சுவாமிநாத சேவா சமாஜம் என்ற பெயரில் சுப்பிரமணிய பக்தர்கள் ஒரு சத்சங்கம் ஸ்தாபித்து ஸ்கந்த ஷஷ்டி மகோற்சவத்தை நடத்தி ஒரு வருடத்துக்குள் குமரனுக்கும் ஒரு குன்று விடமைக்கப் பிரதிக்ஞை செய்து கொண்டிருக்கிறார்கள். நவம்பர் பத்தாம் தேதி மோதிபாக் அருகிலுள்ள சிறு குன்றொன்றில் ஆவாஹன பூஜை நடந்தது.

750 சதுர கஜங்கள் கொண்ட இக்குன்றைச் சர்க்கார் குமரன் கோயிலுக்கு ஒதுக்கியுள்ளார்கள். அவன் நாமம் சொல்லி, ஒரு பக்த கோஷ்டியினர் மயிலேறி, படியனந்தானுக்குப் பூஜை செய்தார்கள்.

சமாஜத்தினர் ஷஷ்டி மகோற்சவத்தை வெகு அற்புதமாக நடத்தினர். புஷ்பாஞ்சலி, காவடி, ஊர்வலம் என்று இவ்வாறு பழனியையே பிரத்தியட்சம் ஆக்கி விட்டனர். ஷஷ்டியன்று வழிபாட்டில் 'கல்கி' சதாசிவம் தம்பதியர் கலந்து கொண்டார்கள். ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி கார்த்திகேயனின் கீர்த்தியைக் கூறுமொரு பாபநாசம் சிவன் கீர்த்தனையைப் பாடி, கேட்பவரைப் பரவசமாக்கினார்.

முருகன் கோயில் திருப்பணிக்குச் சதுர கஜம் முப்பத்தாறு ரூபாய் ஆகிறது. ஆஸ்திகப் பெருமக்கள் அனைவரும் இந்தத் திருப்பணியில் ஈடுபடலாம். ஆறு தலையிலும் ஆறுமுகத் தந்தும் ஆறுமுகன் அருள் பெறலாம். காணிக்கையை, ஸ்ரீ கே. பாலகிருஷ்ணன், BD-833, சரோஜினி நகர், புதுதில்லி என்ற முகவரிக்கு அனுப்பவும்.

'டாக்ஸி ஒன்று பிடித்து அனுப்பி விட்டுக் காலேஜுக்குப் போ'' என்றார்.

மாதவன் மிகவும் அடக்கத்தோடு, ''எனக்கு டிரைவிங் தெரியும், சார். நானே உங்களைக் கொண்டு போய்க் கோர்ட்டில் விட்டு விடுகிறேன். காலேஜுக்குப் போய் விட்டு மூன்று மணிக்கெல்லாம் திரும்பி விடுவேன். நேரே கோர்ட்டுக்கு வந்து உங்களை அழைத்து வந்து விடுகிறேன்....'' என்றான்.

துரைசாமி ஆச்சரியத்தினால் அசந்து போய் விட்டார். ''உனக்கு டிரைவிங் தெரியுமா....?'' என்று கேட்டு விட்டுக் காரில் போய் அமர்ந்தார்.

அன்றிலிருந்து மாதவனிடம் துரைசாமிக்கு அத்யந்தப் பிரியம் ஏற்பட்டு விட்டது.

சிங்காரி கணக்கில் கொஞ்சம் அதிகமாகவே 'வீக்'. மாதவனிடம் அவள் கணக்குச் சந்தேகங்களைக் கேட்டுக் கொள்ள ஆரம்பித்தாள். மாதவன் அவளுக்குச் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்ததும் சில நாட்களில், சிங்காரியின் கணக்கு ஞானம் வளர்ச்சி பெற்றது. இதை அறிந்த துரைசாமி அடைந்த ஆனந்தத்துக்கு அளவேயில்லை.

துரைசாமியின் மனத்தில் வரவர அவரையும் அறியாமல் ஓர் ஆசை உருவாகி வந்தது. அது மாதவனையும், சிங்காரியையும் இணைத்து விட வேண்டும் என்னும் ஆசைதான்.

மாதவன் ஏழை: ஆனால் துரைசாமியிடம் தான் வேண்டிய பணமிருக்கிறதே! ஆனால்...

மலை உச்சியிலிருந்து, விழுந்து துள்ளிக் குதித்து, சலசலத்து, சுழியிட்டுக் கொண்டு இரண்டு கரைகளையும் மோதித் தள்ளிக் கொண்டு ஓடும் காட்டருவிக்குச் சிங்காரியை ஒப்பிட்டால், ஆழமும், பரப்பும் கொண்டு சற்று நிதானமாகவே செல்லும் ஒரு ஜீவநதியின் போக்குக்கு மாதவனை ஒப்பிடலாம். இரு வேறு இயல்புகளைக் கொண்ட இரு உள்ளங்களைப் பிணைத்து விடுவது சாத்தியமானதாக அவர் மனத்துக்குப் படவில்லை.



இரண்டு வருஷங்கள் ஓடி விட்டன. சிங்காரி இப்பொழுது பி. ஏ. பட்டதாரி. மாதவனும் எஞ்ஜினீயரிங் படிப்பில் இரண்டு வருஷங்கள் ஓட்டியிருந்தான். எப்படியும் பெண் கல்யாணத்தை இந்த வருஷம் நடத்திவிட வேண்டும் என்ற எண்ணத்தில் இருந்தார் துரைசாமி.

மெதுவாக ஒரு நாள் இரவு தம் தங்கை பார்வதியிடம் தமது உள்ளக் கிடக்கையை வெளியிட்டார்:

''பார்வதி, இந்த வருஷம் எப்படியும் சிங்காரியின் கல்யாணத்தை முடித்து விட வேண்டும். அவளுக்குத் தகுந்த வரனாகக் கிடைக்க வேண்டுமே என்று தான் கவலையாயிருக்கிறது!''

''என்ன அண்ணா, இப்படிச் சொல்லுகிறாய்? கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு யாராவது நெய்க்கு அலைவார்களா?''

''நீ யாரைச் சொல்லுகிறாய், பார்வதி?''

''மாதவனை மறந்து விட்டாயா, அண்ணா? அவனைவிட நல்ல வரன் உனக்கு எங்கிருந்து கிடைக்கப் போகிறான்?''

''சிங்காரிக்குப் பிடித்திருக்க வேண்டுமே! அவளுடைய நவநாகரிகப் போக்குக்கும், மாதவனுடைய அடக்கமான போக்குக்கும் ஒத்துப் போக வேண்டுமே, அம்மா! எனக்கு இதைப் பற்றிச் சிங்காரியிடம் கேட்கவே தயக்கமாயிருக்கிறது. பார்வதி! பகீரதனுடைய தவத்துக்கிரங்கி, வானத்திலிருந்து அசுர வேகத்தில் இறங்கிய கங்கையின் நினைவு தான் சிங்காரியைப் பார்த்தால் எனக்கு வருகிறது. தாய் இல்லாப் பெண்ணாயிற்றே என்று அதிகமாகச் செல்லம் கொடுத்து வளர்த்தது எவ்வளவு தவறு என்பது இப்பொழுது தெரிகிறது. சிங்காரிக்கு அவனைப் பிடித்திருந்தால் மட்டும் போதுமா? மாதவனுக்கு இவளுடைய நவநாகரிகப் போக்கும் பிடித்திருக்க வேண்டுமே!''

''நீ வீணாக மனதை அலட்டிக் கொள்ளாதே, அண்ணா! பகவான் வழிகாட்டுவார்.''

இத்துடன் துரைசாமியும் அவர் தங்கையும் பேசிய பேச்சு முடிந்தது. துரைசாமி மனப் பளுவோடு போய்ப் படுத்துக் கொண்டார்.

இரண்டு நாட்கள் சென்றன. அன்றைக்குத் துரைசாமி தோட்டத்தில் இயற்கை எழிலை நுகர்ந்து காலாற உலாவிக் கொண்டிருந்தார். அப்பொழுது ஒரு பூங்கொடி அசைந்து வருவது போல் சிங்காரி ரோஜா நிற நைலான் புடவையும், மஞ்சள் பட்டுச் சோளியும் அணிந்து அழகு வடிவமாக அப்பாவுக்கு அருகில் வந்தாள்.

அவளைக் கண்ட துரைசாமி, வியப்பு மேலிட ''என்னம்மா, சிங்காரி! டென்னிஸ் விளையாடப் போகவில்லையா? எங்கே இப்படிக் கிளம்பிவிட்டாய்?'' என்று கேட்டார்.

''உங்களோடு உலாவத்தான் அப்பா கிளம்பினேன். இன்று மட்டும் அல்ல, இனிமேல் என்றைக்குமே டென்னிஸ் ஆடப் போவதில்லை. படிப்பும் முடிந்து விட்டது. இனி உங்கள் விருப்பப்படி நடந்து, உங்களைக் கவ

## பறக்கும் மலர்கள் !

'மலர்களாவது பறப்பதாவது?' என்று வியப்போடு நீங்கள் விழிப்பது எனக்குத் தெரிகிறது. பறப்பது பறவைதான். ஆனால் மலர்களில் எத்தனை வண்ணங்கள் உண்டோ அத்தனை வண்ணங்களிலும் ஒருவிதப் பறவை இனம் இருக்கிறது. இவை பறந்தால், மலர் வனமே, வானத்தில் கிளம்பியது போலிருக்கும். அதனால்தான் பறக்கும் மலர்கள் என்று சொன்னேன்.

உலகிலேயே மிகச் சிறிய பறவை எது என்று கேட்டால் நீங்கள் உடனே 'டக்'கென்று பதில் சொல்லுவீர்கள். (முன்பே ஒரு தடவை நான் சொல்லி இருக்கிறேனே) ரீங்காரப் பறவை (ஹம்மிங் பர்ட்) என்று. நீண்டு வளர்ந்த புல்லின் மீது இதனால் உட்கார முடியும். அத்தனை சிறியது, கனமற்றது. உங்கள் விரல் நகத்தைப் பார்த்துக் கொள்ளுங்கள். முட்டையிலிருந்து வெளி வந்த ரீங்காரப் பறவைக் குஞ்சு அந்த நகத்தின் அளவுதான் இருக்கும். முட்டையோ பட்டாணியின் அளவில் வெள்ளையாக இருக்கும். ரீங்காரப் பறவை ஒரு தடவைக்கு இரண்டு முட்டைகள் இடும். முட்டையிலிருந்து வெளி வந்த குஞ்சுகள் உணவுக்காகக் கூச்சலிடும். முதலில் தாய்ப்பறவை



சில நிமிஷங்களுக்கு ஒரு தடவை உணவூட்டும். எப்படித் தெரியுமா? நீ பேனாவுக்கு இங்க் போடுவாயே, இங்க் பில்லர் மூலமாக — அப்படி. ரீங்காரப் பறவையின் அலகு நீளமானது. குழல் போன்றது. மூன்று வாரத்தில் குஞ்சுகள் கூட்டை விட்டு வெளியேறி இரை தேடக் கிளம்பும் தகுதி அடைந்து விடும். ஒவ்வொரு குஞ்சுப் பறவையும் மலருக்கு மலர் தேனையும் பூச்சிகளையும் தேடிப் பறக்கும். மின்சார விசிறி சுழலும்போது எப்படி அதன் பிளேடுகள் நம் கண்ணுக்குப் புலப்படாதோ அப்படி ரீங்காரப் பறவை பறக்கும் போது அதன் இறக்கைகளை நம்மால் காண முடியாது. அத்தனை வேகமாக அவைகள் இயங்கும். அப்படியே அந்தரத்தில் நின்றபடி மலர்களிலிருந்து தேனைக் குடிப்பது போலிருக்கும். இவைகளின் இறகு சிறியவை. ஆனால் மிக்க பலமானவை. மாரிக்காலத்தில் இந்தப் பறவை கதகதப்பான நாட்டை நோக்கிப் பல ஆயிரம் மைல்கள் பறந்து செல்லும் சக்தி வாய்ந்தது. ரீங்காரப் பறவை ஹெலிகாப்டரைப் போலப் பறக்கும் சக்தி வாய்ந்தது. மேலும் கீழும், பக்க வாட்டிலும், முன்னும் பின்னும் எப்படியும் இதனால் பறக்க முடியும். இத்தனை சின்னப் பறவையாயிற்றே, பெரிய பெரிய பறவைகளைக் கண்டால் பயப்படும் என்று தானே நினைப்பீர்கள்? அதுதான் இல்லை. இதற்குப் பயமென்பதே கிடையாது. தனது நீண்ட அலகின் உதவியால் பெரிய பறவைகளையும் எதிர்த்து நிற்கும். உன்னைக் கண்டாவது பயப்படும் என்று நினைக்கிறீர்களா? அதுவுமில்லை. நீங்கள் அருகில் சென்றால் உங்கள் முகத்துக்கு நேரே வந்து பறந்தபடி நிற்கும், உங்களைச் சரியாகப்பார்க்க விரும்புவது போல. ரீங்காரப் பறவைகளைச் சுலபமாகப் பழக்கி விடலாம்.

இந்தச் சின்னஞ் சிறிய பறவை பெரியதொரு பறவைக் குலத்தின் வழித் தோன்றல். ரீங்காரப் பறவைகளில் 650 வகைகள் இருப்பதாகக் கண்டுபிடித்திருக்கிறார்கள். இவற்றின் இறக்கைகளின் அசைவினால் ஒருவித இனிய ஒலி ஏற்படுகிறது. இதனால்தான் இவைகளுக்கு இந்தப்பெயர் ஏற்பட்டது.

மலர்களுக்குள் தனது நீண்ட மூக்கை நுழைத்துத் தேனைக் குடிக்கும் போது சூரிய ஒளி இதன் உடலில்பட்டு வர்ண ஜாலங்களை அள்ளித் தெளிக்கும் அழகை இன்னைக்கெல்லாம் பார்த்து ரசித்துக் கொண்டிருக்கலாம். வான வில்லின் வர்ண ஜாலங்களை இந்த ரீங்காரப் பறவைகளில் காணலாமாமே. அப்படி இருக்க இவைகளைப் பறக்கும் மலர்கள் என்று சொல்லுவதில் தவறில்லையே?





மங்கோலியாவில் 'கிர்கிஸ்' என்ற ஒரு வகுப்பார் வாழ்கின்றனர். பருந்துகளைப் பழக்கிப் பறவை வேட்டையில் ஈடுபடுவார்கள் இவர்கள். ஒரு கிர்கிஸ்ஸையே இங்கு காண்கிறீர்கள்.

# தாயும் சேயும்...

குழந்தையின் அருமை தாய்க்குத் தான் தெரியும். பரிவறிந்து பாலூட்டி, அதன் மனமறிந்து தாலாட்டி மகிழ்வூட்டும் தாய், உலகில் எந்தப் பாகத்தில் இருந்தாலும் தன் கடமையைச் செய்யத் தவறுவதில்லை. குழந்தை தானே நடக்க, உடுக்க, உண்ணத் தகுதியடையும் வரை அதைக் கண்ணும் கருத்துமாகக் காக்கின்றாள் அன்னை. தான் போகும் இடங்களுக்கெல்லாம் தன்னுடனே குழந்தையையும் சுமந்து செல்கிறாள். இந்தப் பக்கத்தில் உலகின் பல்வேறு பகுதிகளில் உள்ள தாய் தன் குழந்தையைக் கட்டிக் காத்துச் சுமந்து செல்வதைக் காண்கிறீர்கள்.

(1) ஜப்பான் தேசத்துத் தாய் தன் குழந்தையை ஒரு துணித் தூளியில் கட்டி முதுகில் தொங்க விட்டுக் கொண்டு போகிறாள். ஜப்பானியப் பெண்கள் சிறு வயது முதலே தங்கள் தம்பி தங்கைகளைச் சுமக்க இப்படிப் பழகுகிறார்கள்.

(2) லாப்லாந்து தேசத்துத் தாய் தன் குழந்தையை மரத்தைக் குடைந்து தயாரித்த தூளியில் வைத்து அதை முதுகில் சுமந்தபடி பல மைல்கள் பிரயாணம் செய்வாள்.

(3) இந்தியாவின் இமயமலைப் பிரதேசத்தில் வாழும் குழந்தை கூடைத் தொட்டிலில் எத்தனை அடக்கமாக உட்கார்ந்திருக்கிறது பார்த்தீர்களா?

(4) கனடாவின் வடக்கு ஒண்டாரியோ மாகாணத்தில் வாழும் தாயும், சேயுந்தான் இவர்கள். பனியில் சறுக்கிய படி செல்லும் தன்னு வண்டியில் தன் குழந்தையை வைத்துத் தள்ளிக் கொண்டு போகிறாள் தாயார்.

(5) கமான் வளைத்த காவடி போன்ற அமைப்புக்குள் சொகுசாகக் கட்டப்பட்டு, விழித்துப் பார்க்கும் அந்தக் குழந்தை செவ்விந்தியக் குழந்தையாகும்!

(6) ஆப்பிரிக்காவில் வாழும் சுதேசிகளில் பல இனம் உண்டு. லோடுகா என்று ஒரு வகுப்பார். அன்னை தன் குழந்தையை முதுகோடு சேர்த்துத் துணியால் இழுத்துக் கட்டிக் கொண்டிருப்பது அலட்சியமாக இருந்தாலும் குழந்தை மீது வெய்யில் தாக்காதிருக்க 'காலபாஷ்' என்ற தாவர ஓட்டாலான (சுரைக் குடுக்கை போன்றது) பாத்திரத்தைக் கவிழ்த்துக் கழுத்தில் கட்டிக் கொண்டிருப்பதைப் பார்த்தாயா?

(7) இவர்கள் எஸ்கிமோத் தாயும் சேயும் என்பதைப் பார்த்தாலே தெரியுமே? தாயின் 'பார்கா' என்ற தலைக் குல்லாய்க்குள் சுகமாகச் சவாரி செய்கிறான் பயல்.

(8) தன் குழந்தைத் தூளியை நெற்றிப் பட்டையில் கட்டித் தொங்க விட்டுக் கொண்டிருக்கிறாளே இவள் நியூகினியாவின் வாகி பள்ளத்தாக்கில் வாழும் தாயார்.

(9) நரிக்குறத்திகள் தங்கள் குழந்தைகளைத் தோளில் தூளி கட்டித் தூக்கி வருவதைப் பார்த்திருப்பீர்களே. அதைப்போல இருக்கிறதல்லவா இந்தப் 'பெண்மணியின் செய்கை? பெல்ஜியன் காங்கோவில் வாழும் லிலு இனத்தைச் சேர்ந்த பெண் இவள். தலை சாமானைச் சுமக்கிறது. தோளிலுள்ள தூளி குழந்தையைச் சுமக்கிறது.



















காகிதமும் கத்திரிக்கோலும்

## பெரிஸ்கோப்

ஒரு பெரிய கூட்டம். நேருஜி பவனி வரு கிறார் என்று வைத்துக் கொள்ளேன். அல்லது தேர்த் திருவிழாக் கூட்டத்தின் முன்னால் பெரியவர்கள் சுவர் போல் நின்று மறைத்துக் கொண் டிருக்கிறார்கள். குட்டையான நீ பின்னா லிருந்து ஊர்வலத்தின் கோலாகலத்தைக் காண முடியாமல் எம்பி எம்பிக் குதித்தபடி தவிக்கிறாய். ஆனால் இனி இந்த மாதிரி நீ கூட்டங்களுக்குப் பின் னாலிருந்தாலும் அவஸ் தைப்பட வேண்டாம். பின்னாலிருந்த படியே முன்னால் போகும் ஊர் வலத்தின் அழகைக்



கண்டு ரசிக்கும் ஒரு சாதனத்தைச் செய்ய உனக்குச் சொல்லித் தரப் போகிறேன். இதற் குப் பெரிஸ்கோப் என்று பெயர். இதைச் செய் வதற்கு வேண்டிய தெல்லாம் அருகில் உள்ள படத்தில் குறிப்பிட்ட அளவுள்ள ஒரு அட்டை, டைரியில் இருக்குமே சதுரமான முகம் பார்க் கும் கண்ணாடி (4"×3") அதில் இரண்டு, பசைக் காகிதம் கொஞ்சம், கத்தி, கத்திரிக்கோல், பென்சில் இவ்வளவுதான்.

16"×11¾" அளவுள்ள அட்டையின் குறுக்கே 3"×2¾"×3" இடைவெளி விட்டு மூன்று கோடு களைக் கிழித்துக் கொள். அட்டை இப் போது நான்கு பாகங்களாக வகுக்கப்பட்டி ருக்கும், இல்லையா? இனி முதல் பாகத்தின் அடி யில் 1½" குறுக்களவில் ஒரு துவாரம் செய்து கொள். மூன்றாவது பாகத்தின் மேலே 3" பக்கங்களை உடைய ஒரு சதுரமான பாகத்தை வெட்டி எடுத்துவிடு. (× என்ற பாகத்தை)

இனி மூன்று பென்சில் கோடுகளின் மீதாக அட்டையை மடி. கலபமாகவும், ஒழுங்காகவும் மடிய முதலில் பென்சில் கோட்டின் மீது கத்தி யின் பின்பக்கத்தால் அழுத்திக் கிழித்துப் பிறகு அதை மேஜை ஓரத்தில் வைத்து மடித்தால் கச்சிதமாகக் கோணலின்றி மடங்கும். இப்படி மடித்ததும் நீண்ட சதுர வடிவில் படம் 2-ல் உள்ளது போன்ற ஒரு பெட்டி கிடைக்கும் உனக்கு. இதன் ஒரு பக்கத்தின் மேலே சதுர வடிவில் ஒரு துவாரமும் அதற்கு நேர்எதிர்ப் பக்கத்தின் கீழே வட்டவடிவமான ஓட்டையும் இருக்கும். இனி உன்னிடம் தயாராக உள்ள இரண்டு சிறிய முகம் பார்க்கும் கண்ணாடிகளை யும், பளபளப்பான பக்கம் ஒன்றை ஒன்று பார்த்திருக்கும்படி மேலும் கீழுமாகப் பெட்டி யினுள் 45° கோணத்தில் வைத்துப் பசைக் காகிதத்தின் உதவியினால் பொருத்தி ஒட்டி விடு. பெட்டியை உருவாக்கவுமேகூட இந்தப் பசைக் காகிதம் பயன்பட்டிருக்கும், இல்லையா? இனி கண்ணாடிகள் அசையாமல், விழாமல் பொருந்தி இருப்பதைச் சரி பார்த்த பின் பெட்டியின் இரு பக்கங்களையும் தகுந்த அளவுக்கு அட்டையைக் கத்திரித்து மூடி ஒட்டி விடு. இப்போது பெரிஸ்கோப் தயார்.

உன் வீட்டின் ஜன்னலின் கீழே உட்கார்ந்து கொள். நீ இருப்பது பிறருக்குத் தெரியாது.




வட்டமான துவாரம் உள்ள பக்கத்தைக் கண்ணிலும், சதுரத் துவாரத்தை ஜன்னலின் மேலாக வெளியே நோக்கியபடியும் வைத்துக் கொண்டு உட்கார்ந்து பார். வீதியில் போவோர் வருவோரையும் அங்கு நிகழ்பவைகளையும் உன் கண் முன்னால் காணலாம். யுத்த காலத்தில் விரோதிகளுக்குத் தெரியாமல் குழியில் பதுங்கி இருந்தபடி அவர்களின் நடவடிக்கைகளைக் கவனிப்பதற்கு இந்தச் சாதனம் பயன்படும்.

---

## கண்டுபிடியுங்கள்

1. எந்த எழுத்து மணக்கும்? 2. எந்த எழுத்து பறக்கும்? 3. எந்த எழுத்து உமிழும்? 4. எந்த எழுத்து எழுதும்? 5. எந்த எழுத்து இரக்கும்? 6. எந்த எழுத்து உதைக்கும்? 7. எந்த எழுத்து சுடும்? 8. எந்த எழுத்து எழுத உதவும்? 9. எந்த எழுத்து வாயைப் பிளக்கும்? 10. எந்த எழுத்து பொருள்களைப் போட்டுக் கொள்ள உதவும்? 11. ஒன்பது எழுத்துக்களைக் கொண்ட ஒரு பெரியாரின் பெயர். முதலெழுத்து சுருதியில் உண்டு வயத் திலே இல்லே. இரண்டாவதெழுத்து வாவி லுண்டு, சட்டியில் இல்லே. மூன்றாவது எழுத்து மித்திரனில் உண்டு, சத்துருவில் இல்லே. நான் காம் எழுத்து விவேகியிலுண்டு மூடனிலில்லே. ஐந்தாவதெழுத்து வேரிலுண்டு தடியில் இல்லே. ஆறாவது எழுத்து காட்டில் உண்டு வீட்டிலில்லே. ஏழாவது எழுத்து மனதில் உண்டு, மணத்தி லில்லே. எட்டாவது எழுத்து பந்தில் உண்டு, பத்தில் இல்லே. ஒன்பதாவது எழுத்து தாயி லுண்டு, சேயிலில்லே. இந்தப் பெரியாரின் நூற் றாண்டு விழாவை மிகவும் சிறப்பாகக் கொண்டா டப் போகிறார்கள். இந்தப் பெரியாரின் பெயர் என்ன? கண்டு பிடியுங்கள். பி. ஜி. மங்கை

— விடை —

1. பூ, 2. ஈ, 3. தூ, 4. கை, 5. தா, 6. ஆ, 7. தீ, 8. மை, 9. ஆ, 10. பை, 11. சுவாமி விவேகானந்தா.



### அத்தியாயம் 28

## சீக்கிய குலத்துச் சிங்கம்

இது வரையில் தூங்கி வழிந்து கொண்டிருந்த அந்த டாங்கியின் பீரங்கிகள் இப்போது அனலைக் கக்கிக் கொண்டிருந்தன. விநாடிப் பொழுதில் தான் என்ன செய்ய வேண்டும் என்பதைத் தீர்மானித்துக் கொண்ட வடிவேலு, தாறுமாறாக விழுந்து கிடந்த ஐந்து பிரேதங்களுடன் கூடிய அந்தச் சவக் குழியில் குதித்தான். ஜப்பானியரின் உடல்களைத் தட்டித் தடவி அவர்கள் தங்கள் இடுப்பிலே நிறையக் கட்டிக் கொண்டிருந்த கைக்குண்டுகள் சிலவற்றை விடுவித்து எடுத்துப் பத்திரப்படுத்திக் கொண்டான். பள்ளத்திலுள்ளிருந்து எம்பி ஏறி வெளிப்பட்டு மரங்களுக்கிடையில் மறைந்து ஒளிந்து விரைந்தான். ஒரு மரத்தின் மீது பாய்ந்து ஏறிப் பாதைப் பக்கமாக நீண்டிருந்த ஒரு கிளையில் ஆயத்தமாக உட்கார்ந்துகொண்டான்.

உயரே இருந்தவாறே அக்கணத்தில் அவன் கண்ட காட்சி அவனைக் கதிகலங்க அடித்தது. தூரத்தில் பல டாங்குகள் சாலையில் வந்து கொண்டிருந்தன. அவற்றின் இரு பக்கங்களிலும் ஜப்பானியச் சிப்பாய்கள் ஏறுநடை போட்டார்கள்.

'ஒன்று, இரண்டு, மூன்று....' நிதானமாகக் காலாட் படையினருடன் சேர்ந்தாற் போல் நகருகின்ற அந்த டாங்குகளில் பன்னிரண்டு வரையில் எண்ணினான் வடிவேலு. அதற்கு மேலும் இருக்கலாம். 'கணக்கைச் சரி பார்க்கிற தருணமா இது? நல்ல வேளையாகச் சாலையில் இருக்கும் ஒரு திருப்பம் காரணமாக அவர்கள் இங்கே நடப்பனவற்றைப் பார்ப்பது சாத்தியமில்லை. ஆயினும் அவை இந்த இடத்தை வந்து அடைய எவ்வளவு நேரமாகி விடப் போகிறது? அதற்குள்....' அவன் எதிர்பார்த்த ஒன்று மட்டும் அதற்குள் நடந்து விட்டால்!....

பக்கத்தில் நெருங்கிக் கொண்டிருந்த ஒற்றை டாங்கு கடுவதை நிறுத்திவிட்டது. வடிவேலு உட்கார்ந்திருந்த மரத்துக்கு நேர் கீழே வந்து நின்றதும், அந்த டாங்கியின் மேல்புறத்திலிருந்த வட்டக் கதவு திறந்து கொண்

டது. ஜப்பானியன் ஒருவனுடைய தலை வெளியே நீண்டது. சுற்று முற்றும் கண்ணோட்டம் செலுத்தி விட்டுக் கீழே குனிந்து டாங்கியினுள்ளிருந்த தன் சகாவினிடம் ஏதோ கூறிச் சிரித்தான் அவன். 'பிரிட்டிஷ் இந்தியச் சிப்பாய்கள் டாங்கியைக் கண்டதும் தங்கள் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு காட்டுக்குள்ளே புகுந்து ஓடி விட்டார்கள் என்று சொல்லி அவன் நகைக்கிறானா?'

கேலி செய்கிறவன் மீது ஏற்பட்ட ஆத்திரத்துடன் பற்களை நறநற என்று கடித்தவாறே வடிவேலு, டாங்கியின் முதுகில் குதித்தான். அவன் பூட்ஸ் கால்கள் அந்த இரும்புக் கோட்டையில் அழுந்திய வேகத்திலேயே மீண்டும் துள்ளி எழுந்தன. ஒரே எட்டில் அவன் இடக்கரம் அந்த ஜப்பானியனின் கழுத்தைப் பின்புறத்திலிருந்து சுற்றி வளைத்தது. மார்புற அவனை இறுக அணைத்து நெருக்கினான் வடிவேலு. ஜப்பானியர் 'ஜிஜுட்ஸு' யுத்தத்தில் கைதேர்ந்தவர்கள் என்பதும் தன் கரத்தில் சிக்கியிருக்கும் எதிரியே தன்னைத் தரையில் எளிதாக உருட்டித் தள்ளி விடுவான் என்பதும் வடிவேலு அறிந்தவைதான். ஆகவே, விநாடிப் பொழுதும் வீணாக்காமல் இடையில் செருகியிருந்த கத்தியை உருவி எடுத்தான். துப்பாக்கிமுனையில் பொருந்துகிற அந்தக் கூரிய ஈட்டியை ஜப்பானியனுடைய மார்பிலே பாய்ச்சினான். குரல் வளையை நெருக்கிப் பற்றியிருந்த கரம் ஒரு சிறு சத்தம்கூட ஜப்பானியனுடைய தொண்டையிலிருந்து எழுவதற்கு அனுமதிக்கவில்லை.

டாங்கியின் உள்ளேயிருந்து ஏதோ பேச்சுக் குரல் எழுந்தது. வடிவேலு குதித்த ஒலி கேட்டு, 'மரக் கிளை ஏதேனும் முறிந்து விழுந்ததா?' என்று டாங்கைச் செலுத்துபவன் வினவினானோ என்னவோ? இடக் கரத்திலிருந்து தொங்கிய இறந்த ஜப்பானியனை நழுவ விட்டுவிடாமல் மற்றொரு கரத்தால் கைக் குண்டு ஒன்



கோ. ராஜேந்திரன்



றினை எடுத்தான் வடிவேலு. தேவையற்ற சமயத்தில் அது வெடித்து விடாமலிருக்கப் பாதுகாப்பாக அதில் அமைந்திருந்த 'பின்'னைப் பற்களால் கடித்துப் பிடுங்கித் துப்பினான். குண்டை டாங்கியின் திறந்த வாயினுள்ளே குரல் வந்த திசையில் வீசினான். இறந்த ஜப்பானியனும் உள்ளே சரிந்து விழுமாறு பிடியைத் தளர்த்தினான். டாங்கியின் கதவைப் படாரென்று அழுத்தி மூடினான். கண்ணிமைக்கும் நேரத்தில் சாலையில் குதித்து அப்பால் ஓடினான். டாங்கியினுள்ளே குண்டு வெடிக்கும் ஓசை வெளியே யிருந்த அவனுக்கு அடங்கித்தான் கேட்டது.

கானகத்தினுள்ளிருந்து கேவல்சிங்கும் மற்றவர்களும் வெளிப்பட்டனர். எல்லாருமாக வடிவேலுவைச் சூழ்ந்து பாராட்டத் தொடங்கினார்கள். வீண் பேச்சுக்குச் சமயமல்ல என்றும் பேரபாயம் அணுகி வந்து கொண்டிருக்கிறதென்றும் கூறினான் வடிவேலு. மரத்தின் மேலிருந்து தான் பார்த்ததைத் துரிதமாக அவன் சொல்லி முடித்ததும், ''டாங்கை எப்படி இயக்குவது என்று உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டான் கேவல்சிங்.

வடிவேலு உதட்டைப் பிதுக்கியதும், ''கவலைப்படாதே! எனக்கு ஓரளவுக்கு இதில் பரிச்சயமுண்டு'' என்று கூறிக் கண் சிமிட்டினான் கேவல்சிங். சட்டைப் பையிலிருந்து அந்தப் பகுதியின் தேசப் படத்தை எடுத்து விரித்து ஓரிடத்தைச் சுட்டிக் காட்டினான். ''இதோ 'சிரியன்' ஆறு ஓடுகிறது. பாருங்கள். இதன் மீதுள்ள இந்தப் பாலத்தின் வழியாகத்தான் இதுவரையில் ஜப்பானியருடன் போராடி வந்த நமது சகோதரர்கள் பின்வாங்கிச் செல்லுகிறார்கள். அவர்கள் எல்லாரும் அக்கரையை அடையும் வரையில் ஜப்பானியரைத் தாமதப்படுத்த வேண்டியது நம் பொறுப்பு. இதோ சிரியன் ஆற்றுக்குச் சுமார் மூன்று மைல்கள் முன்னதாகவே ஓடுகிறதே ஒரு காட்டாறு; இதன் மீது குறுகலான ஒரு பாலம் இருக்கிறது. அந்த இடத்தில் நாம் ஜப்பானியரது முன்னேற்றத்தைச் சில மணி நேரங்களுக்கேனும் தடுக்கலாம் என்று எண்ணுகிறேன்.'' தேசப் படத்தை மடித்துப் பைக்குள் செருகியவாறு தன்னுடைய திட்டத்தை விவரித்தான் கேவல் சிங். அவன்யோசனை

[எதிர்ப் பக்கம் பார்க்கவும் ⟶

→ எதிர்ப் பக்கத் தொடர்ச்சி]

4. மேலும், பல்வேறு இன்றியமையாத ஆன்மிக விஷயங்களும் சுலோகங்களும் இப்பதிப்பில் சேர்க்கப் பட்டுள்ளன. அவை :

ஸ்ரீ ராம பட்டாபிஷேக மூவர்ணச் சித்திரம் — மைசூர் ஸ்ரீ பரகால மடம் ஸ்ரீ லக்ஷ்மீஹயக்ரீவப் பெருமாள் மூவர்ணச் சித்திரம் — ஸுந்தர காண்ட நிகழ்ச்சிகளைச் சித்தரிக்கும் பல அழகான படங்கள் — ஹிந்து மத சமயாசாரியர்கள் படங்கள் — ஸ்ரீ ராமர் ஜாதகம் — ரகுவீர ஸுப்ரபாதம் — ஸ்ரீமத் ராமாயண த்யான சுலோகங்கள் — ஸ்ரீமத் ராமாயண க்ரந்த பூஜை முறை — ஸ்ரீ ராம பட்டாபிஷேக ஸர்க்கம் (மொழிபெயர்ப்பு).



அநுபந்தம் (திவ்ய மங்கள ஸ்தோத்ரங்கள்)

ஆஞ்ஜநேய அஷ்டோத்ரமும் நாமாவளியும் — ஸீதாஷ்டோத்ரமும் நாமாவளியும் — ஸ்ரீ ராமாஷ்டோத்ரமும் நாமாவளியும் — ஆனந்த ராமாயணத்திலிருந்து ஸ்ரீ ராமாஷ்டோத்ரமும் நாமாவளியும் — ஸ்ரீ ஹநுமத், சத்ருக்ன, பரத, லக்ஷ்மண, ஸீதா, ராம கவசங்கள் — ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாள் அருளிச் செய்த ஹநுமத் பஞ்சரத்நமும், ராகவாஷ்டகமும் — ஸ்ரீ ஸீதாராம ஸ்தோத்ரம் — ஸ்ரீ ஸீதா ராமாஷ்டகம் — ஆபதுத் தாரக ராம ஸ்தோத்ரம் — ஸ்ரீ வால்மீகியும் ஸ்ரீ தியாகராஜரும் — ஸ்ரீ துளஸீ ராமாயணத்திலிருந்து — ஸ்ரீ புரந்தரதாஸர் கீர்த்தனைகள் — ஸ்ரீ நாம ராமாயணம் — ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த ஸ்ரீ ரகுவீரகத்யம் (பல படங்களுடன்) — பரமார்த்த ஸ்துதி — காயத்ரீ ராமாயணம் — ஸ்ரீ மத்வாசாரியரின் ஸுந்தர காண்டம் — ஆழ்வார்களும் ஸ்ரீமத் ராமாயணமும் திவ்ய ப்ரபந்த பாசுர ராமாயணம் — எடுத்த காரியம் எதுவும் வெற்றி பெற, எக்கஷ்டமும் நீங்கத் திருவாய்மொழியிலிருந்து சில பாசுரங்கள் — ஸ்ரீ அஹோபில க்ஷேத்ரம் — ஸ்ரீ ந்ருஸிம்ஹ பஞ்சாம்ருதம் — ஸ்ரீ வால்மீகி ஜயந்தியும் ஸ்ரீராம நவமியும் — ஹநுமத் ஜயந்தி — ஸங்க்ஷேப ராமாயணம் — செல்வை சூடுவாரும் ஸ்ரீ ராமாயணமும் — ஸ்ரீரங்ககத்யம் — ஸ்ரீ லக்ஷ்மீ ஹயக்ரீவப் பிரபாவம் — ஸ்ரீ ஹயக்ரீவாஷ்டோத்ர சதநாம ஸ்தோத்ரமும் நாமாவளியும் — ஆன்மிக வளர்ச்சியைப்பற்றிய கட்டுரைகள் — ஸ்ரீமத் ராமாயண மஹாத்மாக்களின் ஸ்தோத்ர மாலை — ஸ்ரீ ராமநாம கதாமாலை — அஷ்டலக்ஷ்மி ஸ்தோத்ரம் (படங்களுடன்) — மூன்று லோக மாதாக்கள் ஸ்தோத்ரம் (படங்களுடன்).

## இ ல வ ச ம்

*இப்பதிப்பின் ஒவ்வொரு பிரதியுடனும் கோரக்பூர் கீதா பிரஸ் வெளியிட்டுள்ள ஸம்ஸ்கிருத ஸுந்தர காண்டம்-மூலம் (பிரதிகள் கிடைக்கும்வரை) ஒரு பிரதி இலவசமாகத் தரப்படுகிறது*

**'கல்கி' சைஸில் 520 பக்கங்கள் — முழு காலிகோ பைண்டிங்**
**நான்கு வண்ண அழகிய மேலட்டை — கவர்ச்சிகரமான வெளியீடு**

**விலை ரூ. 12.50** ★ **தபால் மூலம் ரூ. 14.50**

பிரதிகள் கிடைக்கும் இடங்கள் :

ஸ்ரீ லிட்டில் ஃப்ளவர் கம்பெனி (லிஃப்கோ), (போன்: 41538) ரங்கநாதன் தெரு, சென்னை-17; M. தாமோதரம் & கம்பெனி, அப்பா பில்டிங்ஸ், சைனாபஜார், சென்னை-1; ஹிக்கின்பாதம்ஸ், சென்னை-2, ரயில்வே ஸ்டால்கள்; C.K. நடராஜன் & ஸன், (போன்: 3610) பெரிய கடைத் தெரு, கோயமுத்தூர்-1; கவிதா பதிப்பகம், (போன்: 2324) 383, ராஜ வீதி, கோயமுத்தூர்-1; P.K.A. குழந்தைவேல் நாடார், மெயின் ரோடு, திண்டுக்கல்; சிவலிங்க விலாஸ் புத்தகசாலை, (போன்: 393) ரோடு; ஸ்ரீ வெங்கடேஸ்வரா புக் டிபோ, டவுன் ஹை ஸ்கூல் ரோடு, கும்பகோணம்; M. நடராஜசுந்தரம் பிரதர்ஸ், புதுமண்டபம், மதுரை; பிரபாத் ஸ்டோர்ஸ், காலேஜ் ரோடு, நாகர்கோவில்; A. K. சுந்தரய்ய செட்டியார் & ஸன், கோட்டை, சேலம்-1; M. ஆறுமுகம் பிள்ளை, திருநெல்வேலி ஜங்ஷன்; ஸ்ரீ லக்ஷ்மி ஹயக்ரீவப் புத்தகக் கம்பெனி, 13, பாபுராவ் தெரு, திருப்பாப்புலியூர் (தெ.ஆ. ஜில்லா); S. கிருஷ்ணஸ்வாமி & கம்பெனி, தெப்பக்குளம், திருச்சி-2; ஜெயப்பிரகாசம் பேப்பர் ஸ்டோர், 207, வெஸ்ட் காட்டன் ரோடு, தூத்துக்குடி; K. V. பிரஸ் புக் டிபோ, (போன்: 111) லாங் பஜார், வேலூர்; மற்றும் (பம்பாய், கல்கத்தா, டில்லி, இலங்கை, பர்மா, மலேயா உட்பட) அநேக புத்தகக் கடைகள். ★ லிஃப்கோ நடமாடும் புத்தக "வான்"களிலும் கிடைக்கும்.

NALIN

யைக் கேட்டு அனைவரும் தலையாட்டினார்கள் உற்சாகத்தோடு. மளமளவென்று உத்தரவுகளைப் பிறப்பித்தான் சீக்கியகுலத்துச் சிங்கம்.

• • •

கேவல்சிங் தான் குறிப்பிட்ட காட்டாறு வந்ததும், வடிவேலுவின் யுக்தியால் தங்கள் வசமாகியிருந்த டாங்கை நிறுத்தி விட்டு வெளியே எட்டிப் பார்த்தான். தன் வீரர்களுக்குக் கையசைத்துச் சமிக்ஞை செய்து பாலத்தின் வழியே ஆற்றினைக் கடந்து செல்லுமாறு பணித்தான். அந்தப் பட்டாளத்தைச் சேர்ந்த அனைவரும் அக்கரையை அடைந்ததும் டாங்கை அகலக் குறைவான அந்தப் பாலத்தின் மையத்துக்கு ஓட்டிச் சென்றான். அங்கே அதனை நிறுத்திவிட்டு வெளி வந்து மற்றவர்களுடன் சேர்ந்து கொண்டான். பின்னால் பாலத்தைத் தகர்க்க நேருமானால் அதற்கும் சித்தமாக இருக்க வேண்டும் என்ற கருத்தில் அந்த வேலையில் பிரத்தியேகப் பயிற்சி பெற்றிருந்த சிலரை அழைத்து வெடிமருந்துகளைப் பாலத்தின் அடியில் பல இடங்களில் பதுக்கி வைக்கச் சொன்னான். மற்றவர்களைப் பாறைகள் மரங்கள், செடி, கொடி, புதர்கள் ஆகியவற்றுக்குப் பின்னால் ஆங்காங்கே மறைந்திருக்கச் செய்தான். இந்த ஏற்பாட்டையெல்லாம் கவனித்துவிட்டு அவன் வடிவேலுவுடன் சேர்ந்து கொண்டான். ''சரியான உதை வாங்கப் போகிறார்கள் பார்; ஜப்பானியர் இன்றைக்கு!'' என்ற போது அவன் கண்கள் ஜொலித்தன. 'சீக்கிய வீரன் என்பது சரியாகத்தான் இருக்கிறது' என்று எண்ணிக் கொண்டான் வடிவேலு. 'தலைமுறை தலைமுறையாக வந்த வீரமெல்லாம் தீப் பிழம்பாக அந்தக் கண்களில் சுடர் விடுவதைப் பார்க்க முடிகிறதே!'

ஜப்பானியரின் பெரும் படை இப்போது கண்களுக்குப் புலனாயிற்று. வடிவேலுவின் தசை நார்கள் முறுக்கேறிக் கொண்டன. நரம்புகளெல்லாம் புடைத்தெழுந்தன.

எதிர்ப்புறத்திலோ கவலையற்றவர்களாய்க் காணப்பட்ட அவர்கள் மிடுக்கு நடை போட்டு வந்தார்கள். மற்ற எல்லாவற்றுக்கும் முன்னதாக இருந்த டாங்கியின் கதவு திறந்து கொள்ள, தலைவனெனத் தோன்றிய ஒருவனுடைய தலை நீண்டது. கரத்தை முஷ்டியாக்கிச் சுழற்றியவாறே அவன் ஜப்பானிய மொழியில் ஏதோ இரைந்தான். தங்களுடைய டாங்குப் படையின் முன்னேற்றத்துக்குத் தங்களுடைய டாங்குகளில் ஒன்றே தடையாக நிற்பது கண்டு பொறுமையிழந்து அவன் கூப்பாடு போட்டிருக்க வேண்டும். அப்படிப் பாலத்தின் குறுக்கே தன் வாகனத்தை நிறுத்தியிருந்த அந்த முட்டாள் டிரைவரைக் கட்டிப் பிடித்து இழுத்து வருமாறு அவன் உத்தரவிடுவதாக வடிவேலு நினைத்தான். அதற்கு ஏற்றாற் போல் ஜப்பானிய வீரர்கள் பலர் திபுதிபுவென்று பாலத்தின் மீது ஓடி வந்து அதன் மையத்தில் நின்ற டாங்கை அணுகினார்கள்.

அவ்வளவுதான்! மறு கரையிலிருந்து புற்றிலிருந்து கிளம்பிய ஈசல்கள் என்பார்களே, அப்படித் தோட்டாக்கள் சீறிப் பாய்ந்து வானத்தில் கோலங்கள் வரைந்தன. உயிர்களையும் குடித்தன. பாலத்திலே இப்போது ஒரு பிணக் குவியல் கிடந்தது!

முதலில் ஏற்பட்ட இந்தத் திகைப்புக்குப் பிறகு ஜப்பானியரும் விழித்துக் கொண்டார்கள். போர்த் தந்திரத்தை மாற்றினார்கள்.

இப்போது காட்டாற்றங் கரையில் ஜப்பானிய டாங்குகள் ஒன்றன்பின் ஒன்றாய் வராமல் பக்கவாட்டில் பரவலாய் வந்து நின்றன. அவற்றின் பீரங்கிகள் மறுகரையிலிருந்த வெறுங் காட்டைச் சுடுகாடாக மாற்றும் நோக்கத்துடன் இயங்கின. அதே நேரத்தில் பாலத்திலிருந்த டாங்கை நகர்த்தும் எண்ணத்துடன் ஜப்பானியச்சிப்பாய்கள் பலர் ஓடி வந்தனர். அவர்களைச் சுட்டுத் தள்ளுவதில் இந்திய வீரர்கள் இன்னமும் முனைந்துதான் இருந்தார்கள் என்ற போதிலும் டாங்குப் படையின் தாக்குதலை அதிக நேரம் தாக்குப் பிடிக்க முடியாதென்பதைக் கண்டான் கேவல்சிங்.

இந்தச் சமயத்தில் மைக்கேல் அங்கு வந்து சேர்ந்தான். இது வரையில் அவர்கள் அஞ்சா நெஞ்சத்துடன் போராடியது போதும் என்



னும் இனி அவர்களும் பின்வாங்கிக் இரியன் ஆற்றைக் கடந்து மற்றப் படை வீரர்களுடன் கலந்து கொள்வதுதான் நலமென்றும் எடுத்துரைத்தான்.

''காப்டன் சொற்படி கேட்கத் தடையில்லை'' என்றான் கேவல்சிங். ''ஆனால் அதற்கு முன் இங்கே இன்னுமொரு சின்ன வேலை பாக்கியிருக்கிறது!''

''என்ன அது?''

''ஜப்பானிய டாங்குகளை இந்தப் பாலம் கொள்ளும்அளவுக்கு ஒன்றன்பின் ஒன்றாய் முன்னேற அனுமதிக்கவேண்டும். பிறகு தக்க தருணத்தில் பாலத்தைத் தகர்த்து டாங்குகளை ஆற்றிலே விழச் செய்ய வேண்டும். பிறகு நாம் பின் வாங்கிவிடலாம். இதோபாருங்கள்! இந்தவிசையை அழுத்த வேண்டியது தான்! பாலம் தூளாகிப் போகும்!''

''அப்படியானால் சரி, உன் கைவரிசையைக்காட்டு!'' என்றான் மைக்கேல்.

இதற்குள் நிலையாக நின்றிருந்த டாங்கை நகர்த்துவதில் வெற்றி பெற்றிருந்தார்கள் ஜப்பானியர். அதனுள் இருவர் புகுந்து டாங்கைக் கிளப்பினர். அதைத் தொடர்ந்து வேறு பல டாங்குகளும் பாலத்தைக் கடக்க ஆரம்பித்தன. நாலைந்து டாங்குகள் பாலத்தை நிறைத்துக் கொண்டதும் கேவல்சிங் விசையை அழுத்தினான். ஏதொன்றும் பலன் விளையவில்லை! பாலத்தின் அடியில் வைக்கப்பட்டிருந்த 'டைனமைட்டு'கள் வெடிக்கவில்லை! பாலம் முன் எப்போதையும் போல் உறுதியாக நின்றது! டாங்குகள் சிரமமின்றிப் பாலத்தைக் கடந்து வந்து கொண்டேயிருந்தன!

ஏதோ தவறு நேர்ந்துவிட்டிருப்பதைப் புரிந்து கொண்டான் கேவல்சிங். அனைவரும் பிரமித்து நிற்கையில் அவன்



மட்டும் யோசியாமல் கொள்ளாமல் வேங்கைப் புலிபோலக் கம்பீரமாகப் பாய்ந்தோடிச் சென்றான். ஆற்றங்கரையினை அடைவதற்குள், அவன் முதுகில் ஜப்பானியரின் தோட்டாக்கள் இரண்டு பாய்ந்தன. ஆயினும் அவன் உயிரிழக்க மறுத்தான். குருதி வழிகிற உடலுடன் தவற்றைக் கண்டுபிடித்துச் செப்பனிட்டான். அடுத்த வினாடி அங்கே ஆயிரம் மின்னல்களின் ஒளி கிளம்பிப் பட்டப் பகலிலும் கண்களைக் கூச வைத்தது! கூடவே பயங்கரப் பேரிடியோசை கேட்டது! பாலம் தூள் தூளாகியது!

தலைவனின் நிலை அறிய முன்னால் ஓட யத்தனித்த வடிவேலுவின் தோள்களை மைக்கேலின் கரங்கள் பற்றின. ''கேவல்சிங்கைத் தேடிப் போவதில் பயனில்லை, வடிவேலு! தான் வீர சீக்கிய குலத்தைச் சேர்ந்தவன் என்பதை அவன் நிரூபித்து விட்டான்!'' என்றான் மைக்கேல்.

## அத்தியாயம் 29

# யுத்த தந்திரம்

அன்று மாலை அசதி மிகுதியுடன் ஒரு கூடாரத்துக்குள் விழுந்து கிடந்தான் வடிவேலு. உடல் சோர்வை விட மனச் சோர்வுதான் அதிகமாயிருந்தது. 'சண்டை போடுவதால் பயன் என்ன?' என்று விரக்தியுடன் சிந்திக்கத் தொடங்கினான் அவன். ஆயிரக்கணக்கில் இந்தியச் சிப்பாய்கள் உயிர்த் தியாகம் செய்து புண்ணியமென்ன? மலாயாவில் பிரிட்டிஷார் கையாள்கிற போர்முறையை ஒரே வார்த்தையில் விவரித்துவிடலாம்போல் இருந்தது. அது 'பின்வாங்குதல்' என்கிற சொல்தான்! வேறு வழி ஏதும் இருப்பதாகவும் தோன்றவில்லை.

ஜப்பானியரைச் சமாளிக்கப் போதுமான படை பலமில்லை; விமானங்கள் கப்பல்கள், டாங்குகள் ஏதுமில்லை. எதிரியின் டாங்குகளை அழிக்கத் தேவையான பீரங்கிகளேனும் உண்டா என்றால் அதுவும் போதுமான அளவுக்கு இல்லை. வீரர்களுக்குத் தன்னம்பிக்கை ஊட்டவல்ல ஆயுதங்களும் கிடையாது. 'ரைபிள்' எனப்படும் பழங்காலத்துத் துப்பாக்கிகள் மட்டும்தான் பிரிட்டிஷ் ராணுவத்தினருக்குத் தரப்பட்டிருந்தன. ஜப்பானியரிடமோ வேகமாகச் சுடுகின்ற கனக் குறைவான நவீன இயந்திரத் துப்பாக்கிகள் ஏராளமாய் இருந்தன. கைக்குண்டுகளையும் கணக்கின்றி வைத்திருந்தனர். துப்பாக்கிகளுக்குத் தினி போடத் தோட்டாக்களைப் பெரிய டிரம்களில் நிரப்பி உருட்டிக் கொண்டு வந்தனர்.

ஆங்காங்கே, ஜப்பானில் அச்சடிக்கப்பட்ட டாலர் நோட்டுக்களைத் துப்பாக்கி முனையில் செருகி மலாய் வாழ் மக்கள் பக்கமாக நீட்டினார்கள். அவர்களிடமிருந்த சைக்கிள்களை இவ்வாறு 'விலைக்கு வாங்கி'க் கொண்டதன் மூலம் பாதசாரிகளின் எண்ணிக்கை குறைந்தது; ஆக்கிரமிப்பின் வேகம் அதிகரித்தது. பாலங்கள் பல தகர்க்கப்பட்டிருந்தது குறித்துக் கவலைப்பட வில்லை அவர்கள். தெப்பங்கள் தயாரித்து ஆற்றைக் கடந்தனர்.

அவர்களுடைய போர்த் தந்திரமோ கேட்கக் கேட்க அதிசயத்தில் ஆழ்த்தியது. வடிவேலு தானே நேரில் கண்ட பல சாகசச் செயல்களைத் தவிர ஆரம்ப முதலே ஜப்பானியருடன் போராடி வருகிற சகோதரச் சிப்பாய்கள் கூறிய விவரங்களையும் செவியுற்றுச் சொல்லொணா ஆச்சரியமடைந்தான். 'ஜப்பானியரின் சூழ்ச்சிகளுக்கு ஓர் எல்லையே இல்லையோ?' என்று எண்ணி வியந்தான்.

ராணுவத்தினருக்குப் பொது உடை பற்றி ஜப்பானியர் வேண்டுமென்றே அக்கறை கொள்ளவில்லை. சீனக் கூலிகள் போலவும் மலாய் நாட்டவர் போலவும் வேஷம் தரித்து வந்தார்கள். முகத் தோற்றத்தைக் கொண்டு சீனர், ஜப்பானியர், மலாய்க்காரர் என்று வித்தியாசம் கண்டு பிடிப்பது எளிதாயில்லை. எதிர்ப்படுவது நண்பனா அல்லது விரோதியா என்று தெரியாமலே பிரிட்டிஷ் துருப்புக்கள் பல இடங்களில் தவிக்க நேர்ந்தது!

சாலையில் முன்னேறி வருகையில் எதிர்ப்பு உருவாகுமென்று தெரிந்தால் ஜப்பானியப் பட்டாளத்தினர் மூன்று பகுதியினராய்ப் பிரிந்தார்கள். சாலையின் இரு பக்கங்களிலும் காடுகளுக்குள் இரு பிரிவினர் புகுந்து செல்ல மூன்றாவது பகுதியினர் நேர்ப் பாதையில் வந்தார்கள். பிரிந்து சென்றவர்கள் பிரிட்டிஷ் ராணுவத்தினருக்குப் பின்பக்கத்தில் மீண்டும் கானகத்தை விட்டு வெளிவந்து சாலையில் ஒன்று கூடினார்கள். பின்புறத்திலிருந்து பிரிட்டிஷாரைத் தாக்கினார்கள். முன்



கொழும்பு இண்டோ சிலோன் லெதர் கம்பெனி அதிபர் திரு மா. கனகராஜன் அவர்கள் புதல்வன் மாலிசைமணிக்கும் மதுரை ராணி ஹாண்ட்லூம் டெக்ஸ்டைல்ஸ் அதிபர் திரு T. V. தங்கராஜ் அவர்கள் புதல்வி கலிங்கராணிக்கும் 9-11-82 வெள்ளிக் கிழமை வணக்கத்துக்குரிய, திண்டுக்கல் சுவாமி சோமேஸ்வரானந்தகிரி அவர்கள் தலைமையில் வெகு சிறப்பாகத் திருமணம் மதுரையில் நடந்தேறியது. வாழ்க மணமக்கள்!

னும் பின்னும் உதை வாங்கும்போது பிரிட்டிஷ் ராணுவத்தினர் ஒன்றும் புரியாமல் கதிகலங்கிப் போனார்கள்.

இப்படி முன்னும் பின்னும் சுற்றி வளைக்கப்பட்ட பிரிட்டிஷ் ராணுவத்தினருக்கு உணவு எடுத்துச் செல்வது இயலாத காரியமாயிற்று. ஆகாய மார்க்கமாக விமானத்திலிருந்து அவர்களுக்கு உணவுப் பொட்டலங்களைப் போடலாம் என்றாலோ அதற்கான விமானங்களே பிரிட்டிஷாரிடம் இல்லை!

சில இடங்களில் ஜப்பானியரின் படை பலம் கம்மியாக இருந்தால், அவர்களில் மிகச் சிலர் மட்டுமே பிரிட்டிஷ் ராணுவத்தினரின் பின்பக்கத்தை அடைந்து ஆளுக்குப் பத்து பட்டாசுக் கட்டுகளைக் கொளுத்திப் போட்டார்கள். இரவு நேரத்தில் கும்மிருட்டில் பட்டாசு வெடிப்பதற்கும் துப்பாக்கி இயங்குவதற்கும் வேற்றுமை தெரியாமல் பிரிட்டிஷ் துருப்பினர் பலமான தாக்குதல் நடப்பதாய் எண்ணிக்கொண்டு பயந்து தலை தெறிக்க ஓடினார்கள்.

இத்தகைய போர்த் தந்திரங்களைப் பிரிட்டிஷ் ராணுவ அதிகாரிகள் சற்றும் எதிர்பார்க்கவில்லை. ஆகவே இந்த வஞ்சனைகளைக் கண்டு அஞ்சாதிருக்கத் தங்கள் சிப்பாய்களுக்கு அவர்கள் பயிற்சி அளிக்கவுமில்லை.

அவ்விதத்தில் மைக்கேல் கூறியதெல்லாம் நூற்றுக்கு நூறு உண்மையாகியிருப்பதைக் கண்டான் வடிவேலு. கொரில்லா யுத்தம் நடத்துவதில் நன்கு தேர்ச்சி பெற்றிருந்த ஜப்பானியர் ஆற்று நீரைப் போல் சிரமமின்றி விரைந்தனர், காற்றைப் போல் எங்கும் புகுந்து சென்றனர். நாளைக்கு ஒரு கவளம் சோறும் சக்தி கொடுக்க ஒரு வில்லை நாட்டுச்சர்க்கரையும் இருந்தால் ஜப்பானியனுக்குப் போதுமானது. காடுகளில் உள்ள கணக்கற்ற காய் பழ வகைகளில் புசிக்கக் கூடியன எவை என்பதைத் தெரிந்து வைத்திருந்தான். போதாக் குறைக்கு முயல் போன்ற மிருகங்களைக் கண்ணி வைத்துப் பிடிக்கவும் கற்றுக் கொண்டிருந்தான். இடையில் தொங்குகிற கத்தியும், கையில் ஏந்திய துப்பாக்கியுமாக அவன் புதர்களுக்கிடையில் பதுங்கியிருந்தான். பிரிட்டிஷ் சிப்பாய்கள் இருக்குமிடத்தைத் தன் சகாக்களுக்கு அறிவிக்க அவன் கோழி போலக் கூவினான். இரவு நேரமாக இருந்தால் மின்மினிப் பூச்சி போல் ஒரு விளக்கு அணைந்து எரியுமாறு செய்தான். தன்னிச்சையாக ஆனால் சமயோசிதமாகச் செயலாற்றினான்.

இந்தோசீனாவின் தென் பகுதிக்குள் ஜப்பானியர் புகுந்ததுமே மலாயாவில் இருந்த ஜப்பானியரின் சொத்துக்களை ஆங்கிலேய அரசாங்கம் பறிமுதல் செய்தது ஒரு விதத்தில் பேரபாயமாக முடிந்திருந்தது. அன்று தாய்நாட்டுக்குத் திரும்பிச் சென்றவர், இன்று ஜப்பானியத் துருப்புகளுக்கு வழிகாட்டிகளாக அமைந்திருந்தார்கள். அதோடு மலாயாவில் ராணுவத் தளங்கள் எங்கெங்கே உள்ளன என்கிற ரகசியங்கள் பலவற்றையும் அவர்கள் உடைத்து விட்டிருந்தார்கள். இது ஜப்பானிய விமானத் தாக்குதலுக்குப் பெரிதும் பயன்பட்டது. ஜப்பானிய விமானங்கள் குண்டுகளை மட்டும்தான் போட்டன என்பதில்லை. பிரசாரத்துக்காகத் துண்டுப் பிரசுரங்களையும் வீசின. கேலிச் சித்திரங்களும் வாசகங்களும் ஆசிய மக்களுக்கும் ஐரோப்பியருக்கும் இடையே உட்பகையைக் கிளப்பி விடுவனவாக விளங்கின. பிரிட்டிஷ், ஆஸ்திரேலியத் துருப்பினரைக் கிண்டல் செய்யும் படங்களும் குறித்த தேதியில் குறிப்பிட்ட நகரத்தில் குண்டு வீச்சு நடைபெறும் என்ற பயமுறுத்தல்களும் அடங்கியிருந்தன. முன்னணியில் இந்தியத் துருப்புக்களை ஏவி விட்டு விட்டுப் பிரிட்டிஷ் தளபதிகள் பத்திரமான இடத்தில் உல்லாசமாகக் காலம் கடத்துவது போல் ஒரு படம். படுக்கையில் விழுந்து கிடந்து தனிமையில் வாடும் ஆஸ்திரேலிய அழகி ஒருத்தி போர் முனையில் அவதிப்படும் அன்பனை விரைவில் பஞ்சணைக்குத் திரும்பி வருமாறு அழைப்பது போல் மற்றொரு சித்திரம்!

'ஆசியா ஆசியருக்கே' என்ற ஸ்லோகம் அச்சடிக்கப்பட்டிருந்த தாள்களோ ஆயிரக் கணக்கில் வானிலிருந்து காற்றில் மிதந்து வந்தன. இப்படி எல்லாம் மக்களிடையேயும் ராணுவத்தினரிடையேயும் பிளவுச் சக்திகளை உருவாக்கி ஒற்றுமையைக் குலைக்கும் வேலைகளில் ஈடுபட்டனர் ஜப்பானியர்.

இவற்றை யெல்லாம்விடப் பிரமிக்க வைக்கும் ஒரு காரியத்தில் துணிந்து இறங்கினார்கள். ஜப்பானிய ராணுவத்தில் உத்தியோகம் பார்த்த ஜெர்மானியரில் கச்சிதமாக ஆங்கிலம் பேசக் கூடியவர்களைப் பொறுக்கி எடுத்து, பிரிட்டிஷ் தளபதிகளைப் போல் உடை அணியச் செய்து போர்முனையில் உலவ விட்டார்கள்! இவர்களால் உண்டான குழப்பங்கள் கொஞ்ச நஞ்சமல்ல!

இத்தகைய தகிடுதத்தங்களைப் பார்த்தும் கேட்டும் உண்டான மனக் கலக்கம் வடிவேலுவுக்கு அதிக நேரம்

நீடிக்கவில்லை. விரைவிலேயே அது மறைந்து போக வைராக்கியத்துக்கு இடமளித்தது.

யுத்தகளத்தில் மனச்சாட்சிக்கு அஞ்சுவதாலும் இரக்கம் காட்டுவதாலும் ஏற்படக் கூடிய விபரீதங்களை அவன் ஏற்கனவே நன்கு உணர்ந்திருந்தான். நேர்மை, நியாயம், ஆண்மை ஆகியவையெல்லாம் யுத்த களத்திலும் கடைப்பிடிக்கப் பட்டது அந்தக் காலம். அவற்றுக்கெல்லாம் இன்றையப் போர்முறையில் இடமில்லை. ஒரே ஒரு குறிக்கோளுடன் தான் அவன் இனி போராட வேண்டும். அது எப்படியோ தன்னால் முடிந்த மட்டிலும் எதிரிகளைக் கொன்று குவிக்க வேண்டும் என்பதுதான்! அதற்காக மந்திரமோ, தந்திரமோ எதைக் கையாண்டாலும் பரவாயில்லை. வஞ்சகக் குள்ளநரியை வெற்றி கொள்ள வேணுமானால் ஏமாற்று வித்தைகளில்தான் இறங்க வேண்டும்!

'ஒரே எண்ணத்துடன் துப்பாக்கியைக் கையிலே பிடி!' என்று தனக்குத் தானே அறிவுறுத்திக் கொண்டான் வடிவேலு. 'பழிக்குப் பழி! டைனுடைய கோரிக்கையை நிறைவேற்றுவதற்காகவும் திறந்த இமைகளும் குத்திட்டு நின்ற விழிகளுமாய் உன் காலடியில் விழுந்த நண்பனுக்காகவும், பாலத்தைத் தகர்க்கும் முயற்சியில் தன் உயிரைப் பலி கொடுத்த கேவல்சிங்குக்காகவும் நீ பழி வாங்க வேண்டும்!'

கூடாரத்துக்குள் யாரோ நுழைந்து வருவது போலிருந்தது. தலை நிமிர்ந்து பார்த்தான் வடிவேலு. மைக்கேலைக் கண்டதும் வாரிச் சுருட்டி எழுந்து நின்று, 'சல்யூட்' அடித்தான்.

''அட் ஈஸ்!'' என்றான் மைக்கேல். பின்னர் அவனிடத்தில் நெருங்கி வந்து, ''ஒரு முக்கியமான வேலை நிமித்தம் நான் பினாங்குக்குச் செல்ல வேண்டியிருக்கிறது. காண்பதையும் கேட்பதையும் பரம ரகசியமாகப் பாதுகாக்கக் கூடிய நம்பகமான ஆள் ஒருவன் எனக்குத் தேவை! நீ என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டான்.

''இதோ, நான் தயார்!'' என்றான் வடிவேலு.

''சரி புறப்படு; ஆனால் இதோ பார்! என்ன நடந்தாலும் நீ ஆச்சரியப்படக்கூடாது; நிதானமிழக்கக் கூடாது, புரிந்ததா? உனக்கு ஏதேனும் சந்தேகங்கள் ஏற்பட்டால் பின்னால் நாம் தனித்திருக்கையில் அவற்றை நிவர்த்தி செய்து கொள்; ஆட்சேபணையில்லை. காரியம் முடியும் வரையில் மூன்றாவது நபர் எதிரே உன் அவசரப் புத்தியைக் காட்டி விடாதே!''

''இதையெல்லாம் நீங்கள் எனக்குச் சொல்லித் தர வேண்டும் என்பதே இல்லை'' என்ற வடிவேலு, வெளியே நின்ற காரின் கதவைக் காப்டன் ஏறிக் கொள்ள வசதியாகத் திறந்து பிடித்தான்.

பினாங்குத் தீவை நோக்கிச் சென்று கொண்டிருந்த மோட்டார் மேற்குக் கடற்கரையை ஒட்டினாற்போல் பட்டர்வொர்த் என்னுமிடத்தில் வந்து நின்றது. இங்கிருந்து பினாங்குத்தீவை நீராவிப் படகுகளில்தான் சென்றடைய வேண்டும். காப்டன் மைக்கேல் உத்தரவு பிறப்பித்ததும் கரை தட்டி நின்ற பெரியதொரு நீராவிப்படகுக்குள்காரைச் செலுத்தினான் வடிவேலு. மோட்டார் காரையும் அதனுள்ளிருந்த இருவரையும் சுமந்து கொண்டு படகு அக்கரை நோக்கி நகர்ந்தது.

எதிர்புறத்திலிருந்து வரும் படகுகளில் மக்கள் நிறைந்திருப்பதையும் பினாங்கு நோக்கிச் செல்லும் படகுகள் பெரும்பாலும் காலியாகவே இருப்பதையும் வடிவேலு கவனித்தான். (தொடரும்)

**புதிய சித்திரத் தொடர்**

# பட்டடக்கல் விரூபாக்ஷர்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

தேசிய ஒருமைப்பாடு என்று எங்கு பார்த்தாலும் பேச்சுக் கேட்கிறது இன்று. பேசுகிறவர்களெல்லாம் அரசியல்வாதிகளாக இருக்கக் காண்கிறோம். மொழி வாரியாக ராஜ்யப் பிரிவினை செய்த காரணமாக மக்கள் உள்ளத்தில் மொழி வெறி வளர்ந்திருக்கிறதே ஒழிய, மொழி வளர்ச்சிக்குரிய ஆர்வம் வளரக் காணும். ஒருமைப்பாடு உருவாக வேண்டுமென்றால் அது இலக்கியம் மூலமாக, சமயம் மூலமாக, கலை மூலமாகத்தான் உருவாக வேண்டும். வேங்கடத்துக்கு அப்பால் நாம் தொடங்கிய இந்தத் தல யாத்திரையில் கலை மூலமாக எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்பாகவே இந்தத் தேசிய ஒருமைப்பாடு எவ்வாறெல்லாம் வளர்ந்திருக்கிறது என்பதைக் காண்போம். தேசிய ஒருமைப்பாடு வளர அந்தக் காலத்தில், கலைஞர்கள் பரிவர்த்தனை நடத்தியிருக்கிறார்கள் மன்னர்கள்.

கங்கை நதிப் புறத்துக்
கோதுமைப் பண்டம்
காவிரி வெற்றிலைக்கு
மாறு கொள்ளுவோம்

என்று கங்கை பாயும் நாட்டையும், காவிரி பாயும் நாட்டையும் வியாபாரத்தின் மூலம் இணைக்கலாம் என்று எண்ணிய கவிஞர் பாரதியார் அவை அந்த வியாபாரப் பொருள் பரிவர்த்தனை மூலம் இணையாமல் போனாலும் போகலாம் என்றும் எண்ணியிருக்கிறார். அதனாலேயே கலைப்பொருள் பரிவர்த்தனையை நினைத்திருக்கிறார். உடனே,

சிங்க மராட்டியர்தம்
கவிதை கொண்டு
சேரத்துத் தந்தங்கள்
பரிசளிப்போம்.

என்றும் பாடியிருக்கிறார். ஆனால் இவருக்கு ஆயிரம் வருஷங்களுக்கு முன்னாலேயே கலைப் பொருள்களைவிடக் கலைஞர்களையே பரிவர்த்தனை செய்வதன் மூலம்தான் தேசிய ஒருமைப்பாட்டை உருவாக்க முடியும் என்று எண்ணியிருக்கிறார்கள் நம் நாட்டில் கலை வளர்த்த காவலர்கள். அப்படிக் கலை வளர்த்த காவலர்களின் வரிசையில் வருகிறவர்கள் தான் சாளுக்கிய மன்னர்கள்.

பாதாமி சாளுக்கிய மன்னர்களது காலம் இந்திய வரலாற்றிலேயே பொன்னெழுத்துக்களில் பொறிக்கப்பட வேண்டிய ஒன்று என்பதை நாம் அந்த வாதாபிக்குப் போயிருக்கும் போதே தெரிந்திருக்கிறோம். விந்திய மலைக்குத் தெற்கே ஆண்ட மூன்று பெரிய வல்லரசுகளில் சாளுக்கியப் பேரரசும் ஒன்று என்பதைச் சரித்திரம் படித்தவர்கள் அறிவார்கள். பிருதிவி வல்லபன், பரமேசுவரன் என்ற பட்டங்களை இச்சாளுக்கிய மன்னர்கள் சூடிக் கொள்வதிலிருந்தே அவர்கள் வீரம், பராக்கிரமம் எல்லாம் அறிதல் கூடும். இந்தச் சாளுக்கிய மன்னர்கள் காலத்தில் சமண சமயம் சிறப்புற்று விளங்கி வந்திருக்கிறது. என்றாலும் சைவத்தையும் வைணவத்தையும் அவர்கள் வெறுக்கவில்லை. சமணக் கோயில்களை உருவாக்குவதில் காட்டிய சிரத்தையையே சைவக் கோயில்களைக் கட்டுவதிலும் காட்டியிருக்கிறார்கள். இந்தச் சாளுக்கிய காலத்தில் தான் கலை மூலமாக வடக்கும் தெற்கும் யாதொரு பிணக்கும் இல்லாமல் இணைந்திருக்கின்றன. சாளுக்கிய மன்னர்களில் ஒருவனான இரண்டாம் விக்கிரமாதித்தன் 733 முதல் 745 வரை பாதாமியைத் தலைநகராகக் கொண்டு வாழ்ந்திருக்கிறான். அவனே அன்று காஞ்சியிலிருந்த பல்லவரின் மேல் படையெடுத்து வந்து வென்றிருக்கிறான். வெற்றியோடு தம் தலைநகர் திரும்பிய மன்னன் காஞ்சியிலிருந்து குண்டன் என்னும் ஒரு பிரபல சிற்பியையும் உடன் அழைத்துச் சென்றிருக்கிறான். அவனைக் கொண்டு விருபாக்ஷருக்கு ஒரு கோயிலையும் பட்டடக்கல் என்னுமிடத்தில் கட்டியிருக்கிறான். அந்தச் சிற்பியின் வேலைத் திறனையெல்லாம் பாராட்டி அவனுக்குத் திரிபுவனாச்சாரியார் என்ற விருதுப் பெயரைச் சூட்டி அழைத்திருக்கிறான். இவனே கங்கைக்கும் வடக்கேயுள்ள நாட்டிலிருந்து ஞான சிவாச்சாரியார் என்ற புலவரையும் அழைத்துப் பட்டடக்கல்லில் இருத்திக் கௌரவித்திருக்கிறான். இன்னும் இவனது சபையை சர்வசித்தி ஆச்சாரி, ரேவதி ஓவ ஜீவா, செங்கம்மா வல்லவதேவா, தேவ ஆர்யா போன்ற கலைஞர்கள் மற்றப் பிரதேசங்களிலிருந்து வந்து அலங்கரித்திருக்கிறார்கள். இத்தனை விவரமும் பட்டடக்கல்லில் உள்ள விருபாக்ஷர் கோயிலிலுள்ள கல்வெட்டு ஒன்று கூறுகிறது. இப்போது தெரிகிறதல்லவா, தேசிய ஒருமைப்பாட்டுக்கு அன்றே பட்டடக்கல் என்னுமிடத்தில் வித்திடப்பட்டிருக்கிறது

சந்தியாதாண்டவர்



என்று? அந்தப் பட்டடக்கல் என்னும் தலத்துக்கு இவ்வாரம் நாம் செல்கிறோம்.

பட்டடக்கல் செல்ல விரும்புவர்கள் ரயிலில் சென்று பாதாமி, ஸ்டேஷனில் இறங்க வேணும். அங்கிருந்து வடகிழக்கே எட்டு ஒன்பது மைல்கள் செல்ல வேணும். ஆனால் பாதாமியிலிருந்து பட்டடக்கல் செல்ல டாக்சி எல்லாம் கிடைப்பது அருமை. ஆதலால் பாகல்கோட் ஸ்டேஷனிலிருந்தே கார் வைத்துக்கொண்டு இருபது மைல் தெற்கே வந்தால் பட்டடக்கல் வந்து சேரலாம். பாதாமி, பட்டடக்கல், ஐகோளே என்னும் மூன்று இடங்களையும் பார்ப்பதற்கு ரயிலில் சென்றாலும் காரில் சென்றாலும் பாகல்கோட் வழியாகச் செல்வதுதான் நல்லது. பட்டடக்கல் பாதாமி குடைவரைகளில் இருந்து பத்து மைல் தூரத்தில் இருக்கிறது. அங்கு செல்ல நல்ல ரோடு இருக்கிறது. பட்டடக்கல் ஊரை அடுத்து மலபிரபா நதி ஓடுகிறது. பட்டடக்கல் ஐகோளேயில் எல்லாம் தங்கும் வசதி கிடைக்காது. ஆதலால் பாதாமியிலுள்ள பிரயாணிகளின் விடுதியில் தங்கியிருந்து கொண்டே இந்தத் தலத்துக்குச் சென்று வரவேணும்.



சகவரன் கோயில்

'பட்டடக்கி கரோலே' என்று அன்று இன்றைய பட்டடக்கல் வழங்கியிருக்கிறது. பட்டடக்கல் அல்லது பட்டடக்கி கரோலே என்றெல்லாம் ஏன் இந்த இடம் பெயர் பெற்றது என்று தெரியவில்லை. அந்த ஆராய்ச்சியில் எல்லாம் ஈடுபடாமல் நாம் நேரே அந்தப் புகழ் பெற்ற விருபாக்ஷர் கோயிலுக்கே போய் விடுவோம். பட்டடக்கல் ஊர் மிகச் சிறிய ஊர். அங்குள்ளவர்கள் சின்னஞ் சிறு குடிசைகளிலே வசிக்கின்றனர். பெரிய வீதிகள் ஒன்றும் கிடையா. ஊருக்குள் சென்றதும் அங்கு ஒரு மரத்தடியில் நான்கைந்து பேர் நிற்பார்கள். அந்த இடம்தான் அந்த ஊரிலேயே விஸ்தாரமான இடம். அங்கேயே காரை விட்டு இறங்கிக் கோயிலுக்குச் செல்லலாம். கோயில் மதில் சுவரெல்லாம் இடிந்து கிடக்கும். வாயில்களும் சிறியதாகவே இருக்கும். அந்த வழியாக எல்லாம் நுழைந்து சென்றால் முதலில் ஒரு பெரிய கோயிலண்டை வந்து சேருவோம். அந்தக் கோயில் கிட்டத்தட்ட காஞ்சி கைலாச நாதர் கோயில் போலவே இருக்கும். ஆனால் காஞ்சியில் இருப்பதைப் போல ஒரு பெரிய திறந்த வெளியில் பல்லவர் மேட்டில் இந்தக் கோயில் இராது. இந்தக் கோயில்தான் இரண்டாம் விக்கிரமாதித்தன் காலத்தில், காஞ்சியிலிருந்து சென்ற சிற்பி குண்டன் என்ற திரிபுவனாச்சாரியார் மேற்பார்வையில் கட்டப்பட்டிருக்கிறது. இந்தக் கோயில் கட்டியது 740-ம் வருஷத்தில் என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன. இந்தக் கோயிலைக் கட்டி அங்கு விருபாக்ஷர் என்ற சிவலிங்க வடிவைப் பிரதிஷ்டை பண்ணி, தனக்குப் பக்க பலமாக இருந்த தன்னுடைய பட்டமகிஷி லோக மகாதேவியின் ஞாபகார்த்தமாக லோகேசுவரர் கோயில் என்று பெயர் சூட்டியிருக்கிறான் மன்னன். இந்தக் கோயில் நல்ல தமிழ்நாட்டுப் பாணியிலேயே கட்டப்பட்டிருக்கிறது. கோயிலைச் சுற்றிக் கொண்டு கிழ்ப்புறம் வந்து அதன் பின்தான் கோயிலுள் நுழைய வேணும். பிரதான கோயில் கிழக்கு நோக்கியிருக்கிறது. அந்தக் கோயிலுக்குக் கிழ்ப்புறம் நந்தி மண்டபம் ஒன்று பெரிதாய்க் கட்டப்பட்டிருக்கிறது. அங்கு ஒரு பெரிய நந்தியும் விருபாக்ஷர் சந்நிதியை நோக்கிப் படுத்துக் கிடக்கிறது. கோயில் மாடக்கோயில்போல் கொஞ்சம் உயரமாகவே கட்டப்பட்டிருக்கும். படிகள் ஏறி உள்ளே நுழைந்தால் மகா மண்டபம் வந்து சேருவோம். அம்மண்டபத்தைப் பதினெட்டுத் தூண்கள் தாங்கி நிற்கின்றன. தூண் ஒவ்வொன்றும் மூன்றடி சதுரமானது. இந்தத் தூண்களில் எல்லாம் மகாபாரதம், ராமாயணம் முதலிய இதிகாசச் சிற்பங்கள் செதுக்கப்பட்டிருக்கும். கருவறையில் விருபாக்ஷர் லிங்க உருவில் இருப்பார். கோயிலில் பூசை நடக்கிறது என்கிறார்கள். ஆனால் கோயிலில் உள்ள குப்பைகளையும் இருட்டடிப்பையும் பார்த்தால், கோயிலுக்கு அர்ச்சகர் வந்து எத்தனை வருஷம் ஆயிற்றோ என்று எண்ணத் தோன்றும். கோயிலை விட்டு வெளியே வந்து கோயிலைச் சுற்றினால் கோயில் சுவர்களில் எண்ணற்ற சிற்ப வடிவங்கள் செதுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். சந்தியா தாண்டவர், லிங்கோத்பவர், வருணீசர், அர்த்தநாரீசுவரர், சிவபார்வதி முதலிய வடிவங்கள் எல்லாம் அழகானவை. ஒரு சில சிதைந்திருந்தாலும் சிற்ப அழகு நிறைந்தவை. கோயில் பிராகாரத்திலே பரிவார தேவதைகளுக்குச் சிறு சிறு கோயில்கள் இருக்கின்றன. ஆனால் அவைகளில் மூர்த்திகள் இருக்க மாட்டார்கள்.

இந்தப் பட்டடக்கல்லில் மொத்தம் பத்துக் கோயில்கள் உண்டு என்றும், இங்கு இருபத்து ஐந்து கல்வெட்டுகள் உண்டு என்றும், நூற்றுக்கு மேற்பட்ட சிற்ப வடிவங்கள் உண்டு என்றும் படித்திருக்கிறோம். ஆதலால் மற்றக் கோயில்களைப் பார்க்க வேண்டாமா என்று எண்ணத் தோன்றும். மற்றக் கோயில்களைக் காண நாம் நெடுந்தூரம் ஒன்றும் அலைய வேண்டாம். எல்லாம்



விருபாக்ஷர் கோயில்

அடுத்து அடுத்தே இருக்கும். ஆனால் ஊர் மக்கள்தான் கோயில் பிராகாரங்களில் எல்லாம் வீடு கட்டிக் கொண்டு குடியிருக்கிறார்களே! அதனால் ஒரு கோயிலிலிருந்து மற்றொரு கோயிலுக்குச் செல்ல வழிதான் சிரமமாகவும் குறுகலாகவும் இருக்கும். குடியிருக்கும் மக்கள் வீடுகளுக்குள்ளேயும் புகுந்தும் செல்ல வேண்டியிருக்கும். என்றாலும் இந்த வட்டாரத்திலுள்ள ஒரு சில கோயில்களையும் பார்த்து விட்டே திரும்பலாம்.

விருபாக்ஷர் கோயிலை ஒட்டி அதற்கு வடபுறம் இருப்பது மல்லிகார்ஜுனர் கோயில். இந்தக் கோயிலையும் இரண்டாம் விக்கிரமாதித்தனே 740-ம் ஆண்டில் கட்டியிருக்கிறான். இக் கோயில் அக்காலத்தில் திரிலோகேசுவரர் கோயில் என்று பெயர் பெற்றிருக்கிறது. விக்கிரமாதித்தன் தனது இரண்டாவது பட்டமகிஷி திரிலோக மகாதேவியின் பெயரால் இக்கோயிலைக் கட்டியிருக்கிறான். இக்கோயிலும், விருபாக்ஷர் கோயில் போலவே தமிழ் நாட்டுக் கோயில்களின் பாணியிலே கட்டப்பட்டிருக்கிறது. இந்தக் கோயிலிலும் நிறைய சிற்ப வடிவங்கள் இருக்கின்றன. அமிர்த மத்தனம், சிவ பார்வதி திருமணம், நடராஜர், அர்த்தநாரி, வாமனர் முதலிய வடிவங்கள் அற்புதச் சிற்பங்களாய் உருவாகி யிருக்கின்றன.

விருபாக்ஷர் கோயிலுக்குத் தெற்கே 150 அடி தூரத்தில் பாபநாதர் கோயில் இருக்கிறது. இக்கோயிலின் விமானம் வடநாட்டுப் பாணியில் கட்டப்பட்டிருக்கிறது. ஆதியில் இக்கோயிலில் சூரிய நாராயணனும் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறான். பின்னரே சூரியன் வடிவினை எடுத்து விட்டுச் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். சிவன், விஷ்ணு, கணபதி, கிருஷ்ணன், சூரியன் முதலிய சிற்ப வடிவங்கள் இக்கோயில் சுவர்களில் செதுக்கப்பட்டிருக்கின்றன. ராமாயணச் சித்திரங்களும் பல இங்கு இருக்கின்றன. இந்தக் கோயில் 680-ம் ஆண்டில் கட்டப்பட்டது என்று சரித்திர ஏடுகள் கூறுகின்றன.

மல்லிகார்ஜுனர் கோயிலை அடுத்து அதன் வடபுறம் இருப்பது காசி விசுவேசுவரர் கோயில். இக்கோயில் விமானமும் வட நாட்டுப் பாணியில்தான் கட்டப்பட்டிருக்கிறது. ஒன்றை விளக்க மறந்து விட்டேனே. இந்திய நாட்டின் கட்டிடக் கலை மூன்று பெரும் பிரிவுகளுக்குள் அடங்கும். அவை:— நாகரம், வேசரம், திராவிடம் என்பன. இவற்றில் நாகரம் என்பது தான் வட இந்தியக் கட்டிடக் கலை. இது பெரும்பாலும் நருமதை நதிக்கு வடக்கேதான் காணப்படுகின்றன. இக் கட்டிட வகை அடிமுதல் முடிவரையில் நான்கு பட்டைச் சதுரமாக அமைக்கப்படுகிறது. வேசரம் என்னும் கட்டிட வகை, தரை அமைப்பிலும், கட்டிட அமைப்பிலும், விமான அமைப்பிலும், வட்டவடிவமாக அல்லது நீண்ட அரை வட்ட வடிவமாக இருக்கும். தமிழ்நாட்டுக் கட்டிட முறைதான் திராவிட முறையாகும். தமிழ்நாட்டில் வேசர முறையில் கோயில்கள் ஒரு சில உண்டு என்றாலும் நாகர முறையில் கட்டப்பட்ட கோயில்களில்லை என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். ஆனால் இந்தப் பட்டடக் கல் கோயில்களில் சில நாகர முறை கட்டிடக் கலை அமைப்பில் இருப்பது கவனிக்கத் தக்கது. இங்குதான் திராவிட முறையும், நாகர முறையும் கலந்து உறவாடிய தேசிய ஒருமைப்பாடு உருவாகி யிருக்கிறது. இந்தக் காசி விசுவேசர் கோயில் மூலவர் நல்ல கருங்கல் வடிவினர்; லிங்க உருவில் இருப்பவர்; முன் மண்டபத் தூண்களில் எல்லாம் சிறந்த சிற்ப வேலைப்பாடுகள் உண்டு. இக்கோயிலை அடுத்தே கமலநாதர் கோயில் இருக்கிறது. இங்கும் சிவலிங்கம் கமலநாதர் என்ற பெயரில் பிரதிஷ்டை ஆகி யிருக்கிறார். கோயில் வாயிலும் மண்டபங்களும் சிற்ப வடிவங்கள் பலவற்றைத் தாங்கி நிற்கின்றன.

இன்னும் இங்கு காண வேண்டியவை சங்கமேசுவரர் கோயில், ஜம்புலிங்கர் கோயில், சந்திரசேகரர் கோயில், காட சித்தேசுவரர் கோயில்கள்தாம். எல்லாம் ஒன்று போல் ஒன்றாக அமைக்கப்பட்டவையே. தனிச் சிறப்பு உடையன அல்ல. சங்கமேசுவரர் கோயில் விமானம் மூன்றடுக்கு மாடி உடையது. நல்ல திராவிட சிற்ப பாணி. இக்கோயிலில் உள்ள லிங்கத் திருவுருவுக்கு ஆவுடையார் கிடையாது. லிங்கத் திருவுருவம் சிதைந்திருக்கிறது. இங்கு ஒரு சமணக் கோயில் இருக்கிறது.

இத்தனை கோயில்களையும் சுற்றிப் பார்த்து வரும்போது நம் நெஞ்சை ஏதோ ஒன்று அழுத்தும். கிட்டத்தட்ட ஆயிரத்து இருநூறு வருஷங்களுக்கு முன்னர் சளுக்கிய சாம்ராஜ்யம் உன்னத நிலையில் இருந்த போது கட்டப்பட்ட இக்கோயில்கள் இன்று கவனிப்பாரற்றுப் புதர் மண்டியும், இடிந்தும் கிடக்கின்றனவே; இக்கோயில்களெல்லாம் புதைபொருள் இலாக்காவின் மேற்பார்வையில் இருப்பதாக விளம்பரப்படுத்தி யிருந்தாலும், அந்த மேற்பார்வை மிகவும் மேல் எழுந்த பார்வையாகத்தானே இருக்கும் போலிருக்கிறது என்றெல்லாம் எண்ணத் தோன்றும். அதே சமயத்தில் நம் தமிழ் நாட்டுச் சிற்பி ஒருவன் வந்து இக்கோயில்களில் பிரதான கோயிலான விருபாக்ஷர் கோயிலை உருவாக்கி யிருக்கிறானே; அந்தச் சிற்பி திரிபுவனாச்சாரியருக்கு வணக்கம் செலுத்துவதற்காகவே ஒரு நடை நடக்கலாமே என்றும் எண்ணுவோம். ஆம்! அந்தத் திரிபுவனாச்சாரியருக்கு வணக்கம் செலுத்தி விட்டே திரும்புவோம்.

# டாங்குகள்



வடக்கெல்லைப்புறத்தில் சீனர்கள் சாலைகள் அமைத்ததுடன் டாங்குகளையும் கொண்டு வந்து விட்டார்கள் என்று அறிந்தபோது நாம் அனைவருமே மிகுந்த பரபரப்படைந்தோம். நம் ஜவான்கள் இந்த இயந்திர பூதங்களை எவ்வாறு சமாளிக்கப் போகிறார்களோ என்று மிகவும் கவலையுற்றோம். நம் அரசாங்கமும் ராணுவத்தினருக்குப் பக்க பலமாக விளங்கும் வகையில் டாங்குகளை விமானங்களில் ஏற்றி ஆகாய மார்க்கமாக அவசரமாக அனுப்பி வைத்துள்ளதாக அயல் நாட்டுப் பத்திரிகைகளில் வெளியாகி இருப்பது கண்டு ஓரளவுக்கு அமைதியுற்றோம். இத்தருணத்தில் இந்த டாங்கு பற்றிச் சில ருசிகரமான தகவல்களைத் தெரிந்து கொள்ளுவதில் பலருக்கும் ஆர்வமிருக்கும்.

முதல் உலக யுத்தத்தின்போது சுருள் சுருளாகக் குவிந்து கிடக்கும் இரும்பு முள் கம்பி வேலிகளைத் தாண்டியும், அவற்றின் பின்னால் குழி தோண்டிப் பதுங்கியிருந்த வாறே எதிர்த்தரப்புச் சிப்பாய்கள் மழையெனச் சரமாரியாகப் பொழிந்து தள்ளும் துப்பாக்கித் தோட்டாக்களைச் சமாளித்துக் கொண்டும் முன்னேறுவது என்பது சாத்தியமாக இல்லை. இதனால் தாக்க முற்பட்டவர்களும் தாக்குதலுக்கு உள்ளானவர்களைப் போலவே குழி பறித்துப் பதுங்கித் துப்பாக்கிகளால் சுட்டார்கள். இப்படி இரு தரப்பினரும் இருந்த இடத்தில் இருந்த படியே ஒருவரை ஒருவர் நாள் கணக்கில், மாதக் கணக்கில் சுட்டுக் கொண்டிருப்பார்கள். இதனால் பொருட்சேதமும் ஆள் சேதமும் ஏராளமாய் உண்டாயிற்றே தவிர, யுத்தத்துக்கு ஒரு முடிவு காண இயலவில்லை. வெற்றி தோல்வி யாருக்கு என்பதை நிர்ணயிப்பது சாத்தியமாக இல்லை.

இந்நிலையில்தான் வீரர்கள் குண்டுகளைப் பரிமாறிக் கொண்டால் மட்டும் போதாது. வேகமாக முன்னேறிச் சென்று எதிரியின் ஆளுகைக்கு உட்பட்டிருக்கும் பிரதேசத்தை ஆக்கிரமிக்கவும் வேண்டும் என்று தீர்மானமாயிற்று. அதற்குத் துணைபுரியும் வகையில் ஏதேனும் ஒரு போர்க் கருவியைக் கண்டு பிடிப்பதில் பிரிட்டிஷ் ராணுவ விஞ்ஞானிகள் தீவிரமாக முனைந்தார்கள். இதில் அவர்களை ஈடுபடுமாறு ஏவி விட்டவர் வின்ஸ்டன் சர்ச்சில் அவர்கள்.

டார்டெனலெஸ் என்னுமிடத்தில் ஏற்பட்ட படுதோல்வியின் காரணமாக பிரிட்டிஷ் கடற்படை அதிபதியாக அன்று விளங்கிய சர்ச்சிலுக்கு அந்தப் பதவி பறிபோயிற்று என்றாலும் தமது உத்தியோகத்தை விடுவதற்கு முன்னாலேயே டாங்கு உற்பத்தியில் பரிசோதனைகளை நடத்துவதில் அக்கறை காட்டி வந்தார் அவர். கடற் படையின் செலவுகளுக்கென ஒதுக்கப்பட்ட நிதியைப் பயன்படுத்தித் தரைப் படையினருக்கே அதிகமாகப் பிரயோஜனப்படக்கூடிய ஒரு காரியத்தில் இறங்கக் கூடிய துணிச்சல், சுருட்டுப் புகைத்துக் கொண்டே விஷமப் புன்னகை புரியும் அந்தச் சர்ச்சிலைத் தவிர வேறு யாருக்கு உண்டு?

புதிய ராணுவ உபகரணம் ஒன்று தயாராவதை எதிரிகளிடமிருந்து பரம ரகசியமாக வைத்திருக்கக் கருதி, சிப்பாய்களுக்குக் குடிநீர் ஏற்றிச் செல்லும் வாகனம் உருவாகி வருவதாக ஒரு வதந்தியை வேண்டுமென்றே பரவச் செய்தார் அவர்! அதனாலேயே இந்த நகரும் இரும்புக் கோட்டை 'டாங்க்' (நீர்தொட்டி) என்று பெயர் பெற்றது.

1916-ல் முதல் டாங்கு, ஸோமி என்னுமிடத்தில் யுத்தகளத்தில் உபயோகிக்கப்

பட்டது. அமெரிக்காவில் முதன் முதலாக விவசாய டிராக்டரின் அமைப்பைக் கொஞ்சம் மாற்றி டாங்கு தயாரித்தார்கள். ஆரம்பத்தில் உருவான இந்த வாகனங்கள் பார்ப்பதற்கு ஒழுங்காக இராமல் கோணலும் மாணலுமாகக் காட்சியளித்தன. (பழங்காலத்து மாடல் மோட்டார்கார் ஒன்றினை நாம் இன்று பார்த்தால் என்ன நினைக்கிறோம்; அது போல!) என்றாலும் இவை எதிரிகளைக் கதிகலங்க அடித்து விட்டன என்பதென்னவோ உண்மைதான். முதலில் ஏற்பட்ட திகைப்புக்குப் பிறகு ஜெர்மானியரும் அவர்களுடன் ஒத்துழைத்த பிற நாட்டினரும் தாங்களே டாங்குகளைத் தயாரிக்க ஆரம்பித்து விட்டனர் என்பதோடு டாங்குகளை அழிக்கவல்ல பீரங்கிகளையும் உற்பத்தி செய்யத் தொடங்கினர்.

இரண்டாம் உலக யுத்தத்தின் போது டாங்கின் அமைப்பிலும் அது இயங்கும் விதத்திலும் மிகவும் முன்னேற்றம் உண்டாகி விட்டது. அப்போது ஹிட்லரின் மின்னல் தாக்குதல்களுக்கு (Blitzkreig attack) மிகவும் பயன்பட்டது டாங்குகளே. இந்த மின்னல் தாக்குதல்களில் இரண்டு அம்சங்கள் முக்கியமாகக் கவனிக்கப்பட்டன. ஒன்று, இயந்திர மயமாக்கப்பட்ட ராணுவத்தின் வேகமான முன்னேற்றம். மற்றது, சரமாரியாகக் குண்டுகளைப் பொழிதல். இதற்கு நூற்றுக்கணக்கான டாங்குகளையும் லாரிகளில் பொருத்தப்பட்ட பீரங்கிகளையும் உபயோகத்துக்குக் கொணர்ந்தனர் ஜெர்மானியர். இவற்றின் பின்னோடு காலாட்படையினர் கவச மோட்டார்களில் சென்றனர். போதாக்குறைக்கு இத்தரைப் படையினருடன் ஒத்துழைக்க பாம்பர் விமானங்கள் பூமியருகில் தாழப் பறந்தன. இத்தகைய படையெடுப்பின் போது ஜெர்மானிய டாங்குகள் நெருப்பையே வெகுதூரத்துக்குப் பீச்சியடித்தன. (நெருப்பணைக்கும் படையினர் தண்ணீரைப் பீச்சி அடிப்பதில்லையா, அது போல!) டாங்குகள் சென்ற இடமெல்லாம் சகலமும் சாம்பல் குவியலாகின.

இந்த மின்னல் தாக்குதல் என்னும் யுத்த தந்திரம்தான் ஹிட்லருக்கு யுத்தத்தின் முற்பகுதியில் மாபெரும் வெற்றிகளைத் தேடித் தந்தது. இரண்டாவது உலக யுத்தத்தின் பிற்பகுதியில் போரில் பங்கெடுத்துக்கொண்ட அமெரிக்கர் தங்கள் டாங்குகளுக்கு முன்புறத்தில், புல்டோஸருக்கு முன்னாலிருக்குமே அகன்ற பிளேடுகள், அவற்றைப் பொருத்தி விட்டனர். இதனால் அந்த டாங்குகள் நகர்ந்தபோது எதிரே இருந்த மண்ணையும் வெட்டி வாரிக் குவித்து முன்னுக்குத் தள்ளிக் கொண்டே சென்றன. அப்போது எதிர்த்தரப்பு வீரர்கள் பதுங்கிப் போராடும் குழிகள் (டிரெஞ்சுகள்) தூர்க்கப்படவே அவற்றிலிருந்த சிப்பாய்களின் கதி அதோ கதியாயிற்று.

டாங்கு கனமான இரும்புத் தகடுகளினால் ஆனது. முப்பது முதல் எழுபத்தைந்து டன் வரை எடை உள்ளது. சாதாரணத் துப்பாக்கி தோட்டாக்கள் இதனைச் சேதப்படுத்தாது. டாங்கை நசுக்க மிகவும் சக்தி வாய்ந்த பிரத்தியேகமான பீரங்கிகள் (Anti-tank guns) தேவை. இரும்பு முள்வேலிகள், மேடு பள்ளம், சேறு, சகதி, ஆறு, புதர்கள், செடி கொடிகள், பெரிய கற்கள் நிறைந்த கரடுமுரடான இடங்கள் எதையும் லட்சியம் செய்யாமல் டாங்கு தன்பாட்டுக்கு முன்னேறிப் போய்க் கொண்டிருக்கும். சமதளத்தில் மணிக்கு முப்பது மைல் வேகத்தைச் சுலபமாக எட்டிப் பிடிக்கும். பெட்ரோலினால் ஓடுகிறது இதன் என்ஜின். டாங்கினுள்ளே அதன் டிரைவரும், பீரங்கி மிஷின் — கன் இவற்றை இயக்குபவர்களும் இருப்பார்கள். டாங்கின் பரிமாணத்துக்குத் தக்கபடி நான்கு முதல் எட்டு பேர் வரையில் உள்ளே இருப்பார்கள். அகலக் குறைவான மிகச் சிறிய ஜன்னல் வழியே டிரைவர் சுற்றுப்புறத்தைப் பார்த்துக் கொண்டு ஓட்டுவான். டாங்கு, பார்ப்பதற்குப் பூதாகாரமாகத் தோன்றினாலும் சொன்னபடியெல்லாம் கேட்கக் கூடியது. அதனுடைய நீளம் என்னவோ அதையே குறுக்கு விட்டமாக (diameter) வைத்து ஒரு வட்டம் வரைந்தால் அந்த வட்டத்துக்குள் டாங்கு இலகுவாகச் சுற்றி வரக் கூடிய ஆற்றல் படைத்தது என்றால் ஆச்சரியமாக இருக்கிறதல்லவா? இது போதாதென்று டாங்கியின் பீரங்கிகள் பொருத்தப்பட்டுள்ள பீடமும் எந்தத் திசையிலும் குறி பார்த்துச் சுடுவதற்கு வசதியாகத் தனியாகச் சுழலும். பயங்கரமான ஆயுதம்தானே இந்த டாங்கு?

# ஊல்லில் மிகச் சிறந்தவற்றிற்கு
# தாரிவால் வாங்குங்கள்

அந்தஸ்துள்ளவர்களுக்குத் தெரியும் நல்ல ஆடைகளின் கௌரவ மதிப்பு. ஆதலால் அவர்கள் வுல்லன் துணிமணிகளை, அவற்றிலும் தாரிவால் துணிமணிகளைத் தேர்ந்தெடுக்கிறார்கள். அவை உத்தரவாதமுள்ள வுல்லன்கள், தைப்பதற்கும் சிறந்தவை, கவர்ச்சியானவை, மேலும் பல வருடங்களுக்கு நீடித்து உழைக்கின்றன. வுல்லனுக்கு, முக்கியமாக, தாரிவால் வுல்லனுக்கு இணை எதுவுமில்லை.




விற்பனை பிரதிநிதிகள்:

T. R. S. ஐயங்கார் & சன்ஸ், N–1,
சிக்பேட், பங்களூர்—2.

T. R. S. ஐயங்கார் & ஸன்ஸ்,
20/17, கனி மார்க்கெட்,
கிடங்குத் தெரு, மதராஸ்—1.

நியூ ஈகர்டன் வுல்லன் மில்ஸ், தாரிவால், பஞ்சாப், இந்தியா.

# தியாகத் திருமணம்

**ஜயலக்ஷ்மி**

தோழியைச் சந்திக்க வேகமாக நடந்தாள் இந்து. புதிதாக அறிந்த செய்தி இதயத்தைக் கசக்கிப் பிழிந்தது. அதைத் தோழியிடம் கொட்டித் தீர்க்க உள்ளம் துடித்தது. அவளுக்கு இந்த உலகத்தில் இருந்த ஒரே ஆதரவு அவள் தோழி சித்ராதான். நடைக்கு முடிவு கண்டபின் அவள் குரல் கொடுத்தாள்.

"சித்ரா!"

"இந்து!"

பாய்ந்து வந்து தோழியை அணைத்துக் கொண்டாள் சித்ரா. இறுக்கமான நட்பின் இணைப்பு இதமான ஆறுதலை இருவருக்குமே தந்தது.

"அழுது கொண்டிருந்தாயா, சித்ரா?" தழுவி நின்ற கரங்களை விடுவித்துக் கொள்ளாமலேயே அவளிடம் வினவினாள் இந்து.

"ம்...." என்று முனகினாள் சித்ரா.

"சித்ரா! என்ன சொல்லுகிறாய் நீ?" தன் அணைப்பிலிருந்து விலக்கிவிட்டுத் தோழியின் முகம் நோக்கிக் கேட்டாள் இந்து.

"அம்மாவை இழந்தது போதாதென்று என் அப்பாவையும் உயிருடன் பறி கொடுக்க வேண்டிய துர்ப்பாக்கியம் எனக்கு ஏற்படவிருக்கிறது இந்து. நான் என்ன செய்வேன்? என்னால் அந்தத் துயரத்தை எப்படித் தாங்கிக் கொள்ள முடியும்?" 'ஓ'வென்று அழுதாள் சித்ரா.



"எட்டு வருஷங்களுக்கு முன்பு மறைந்துவிட்ட அம்மாவை நினைத்து இன்னமும் அழுது கொண்டிருக்கிறேனே நான். நீ அழாமல் எப்படி இருக்க முடியும்? நீ உன் அம்மாவை இழந்து ஒரு வருஷம் கூட முடிந்தபாடில்லையே! ஆறுதல் சொல்லி ஆற்றிவிடக் கூடிய துயரமல்ல சித்ரா, உன்னுடையது" விம்மி வெடித்தாள் இந்து. அவள் அனுபவித்துக் கொண்டிருக்கும் துயரம் அல்லவா அது!

"அம்மாவை நினைத்து அழுவது ஒரு பக்கம் இருக்கட்டும் இந்து. இன்று நான் அழுவது அதைவிடப் பெரிய இழப்புக்காக...."

''சித்ரா! அழாமல் விஷயத்தைச் சொல்ல மாட்டாயா?'' என்று கெஞ்சினாள் இந்து.

''உன் நிலைக்கு வந்து விடுவேன் இந்து. அப்பா இரண்டாம் கலியாணம் செய்து கொள்ளப் போகிறாராம். போதுமா?''

''சித்ரா!'' என்று வீறிட்டாள் இந்து. தன்னையும் மீறியவளாய்.

''உனக்கு வாய்த்ததுபோல் எனக்கும் சின்னம்மா வாய்த்து விட்டால் உனக்கு இருக்கும் சகிப்புத் தன்மை எனக்குக் கிடையாது இந்து. வீட்டை விட்டு எங்கேயாவது போய்விட வேண்டியதுதான். அல்லது.... அல்லது......'' மேலே கூற முடியாமல் விம்மி விம்மி அழுதாள் சித்ரா.

''பைத்தியம் போல் பேசாதே, சித்ரா! உனக்கு வருகிற சின்னம்மா ஏன் நல்லவளாக இருக்கக் கூடாது?''

''எப்படி இருப்பாள்? நம் அதிர்ஷ்டம் தெரிந்த லட்சணம்தானே?''

''அதற்கு இப்போதே பிடித்து அழுவானேன்? வந்த பிறகு பார்த்துக் கொள்ளலாம். போய் முகத்தைக் கழுவிப் பவுடர் போட்டுக் கொள். எனக்கு நேரமாகிறது. நான் வருகிறேன்....''




தன் வேதனையைக் கொட்டித் தீர்க்கத் தோழியிடம் போனவளுக்கு, அவளுடைய வேதனையையும் வாங்கிக் கொண்டு வர வேண்டிய நிலை ஏற்பட்ட போது இந்துவின் உள்ளம் புழுவாய்த் துடித்தது. தனக்கு ஏற்பட்டுள்ள துன்ப நிலை உலகில் வேறு யாருக்குமே ஏற்பட்டு விடக் கூடாது என்பது அவள் எண்ணம். அது இவளுடைய உயிருக்குயிரான தோழி சித்ராவுக்கே ஏற்படப் போகிறது என்றால் அதை இந்துவினால் எப்படித் தாங்கிக் கொள்ள முடியும்? தோழிக்கு ஏற்படவிருக்கிற துன்பத்தைப் பற்றி எல்லாமே மறந்துதான் போயிற்று.

தயங்கித் தயங்கி வீட்டினுள் நுழைந்தாள் இந்து.

''எங்கேடி போகிறாய்? கோயில் மாடு மாதிரி ஊர் சுற்றாதே என்று எவ்வளவு தடவைகள் உனக்குச் சொல்வது?'' என்று சீறி விழுந்தாள் சின்னம்மா.

பதிலளிக்காமல் பின்கட்டை நோக்கி நடந்தாள் இந்து. அங்கே அவளை எதிர்நோக்கிக் காத்திருந்தன அரிசியும் உளுத்தம்பருப்பும், ஜலக்ரீடை செய்தபடியே.

அரிசியைக் கல்லுரலில் போட்டு அரைக்க ஆரம்பித்தாள். உள்ளே அவள் அப்பாவும் சின்னம்மாவும் பேசிக் கொள்வது கேட்டது. கல்லுரலில் அரைப்பதை நிறுத்தி விட்டுக் கவனித்தாள்.

''வரனுக்கு ஐம்பது வயது ஆகிறதாம். என்ன சொல்கிறாய்?''

''சொல்வதென்ன? ஐம்பது வயது ஒரு வயதா, என்ன? காதும் காதும் வைத்தாற் போல் கலியாணத்தை முடித்து விடப் பாருங்கள். நாலு பேருக்குத் தெரிந்தால் நாலு விதமாகப் பேசுவார்கள். அதற்கு இடம் வைத்துக் கொள்ள வேண்டாம்.''

''அவரும் அப்படித்தான் சொன்னாராம். மூத்தாளுக்கு ஒரு குழந்தை இருக்கிறதாம். அதற்குக் கூடத் தெரியாமல் ஏதாவது ஒரு

கோவிலில் கலியாணத்தை முடித்து விட்டால் போதுமாம்."

"ரொம்ப நல்லதாகப் போயிற்று. சரியென்று சொல்லி விடுங்கள்."

"இந்துவை நாம் ஒரு வார்த்தை கேட்க வேண்டாமா....?"

"காரியத்தைக் கெடுக்கப் பார்த்தீர்களே! அவளுக்குத் தெரிந்தால் சம்மதிப்பாளா என்ன?"

"சரி, சரி!"

இந்துவின் கைபட்டுக் குழவி ஆடியது போல், உள்ளே அவளுடைய அப்பாவின் தலையும் ஆடியதை இங்கே இருந்தபடியே இந்து அறிந்துகொள்ள முடிந்தது. அவளுடைய விழிகள் குழவியைக் குளிப்பாட்டிக் கொண்டிருந்தன.

திருமண ஏற்பாடுகளெல்லாம் மிகமிக ரகசியமாக நடந்து கொண்டிருந்தன. இந்துவுக்கு வீட்டுக்குள்ளேயே சிறைவாசம். அவளைத் தெருப் பக்கம் எட்டிப் பார்க்கக் கூட விடவில்லை அவளுடைய சின்னம்மா. வாய் விட்டு அழக்கூடச் சுதந்திரமற்ற நிலையில் உள்ளுக்குள்ளேயே அழுதழுது துடித்துக் கொண்டிருந்தாள் இந்து. என்ன முயன்றும் அவளால் தன் துயரத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. எப்படியாவது தன் தகப்பனாரைத் தனிமையில் சந்தித்து, 'எனக்கு இந்தத் திருமணம் வேண்டாம். நான் கன்னியாகவே இருந்து விடுகிறேன்' என்று சொல்லிவிட வேண்டும் என்றும் தவியாய்த் தவித்தாள். முடியவில்லை. பெற்றவர் பெண்ணின் பார்வையில் படாமலேயே பாய்ச்சல் காட்டிக் கொண்டிருந்தார். அவர் கண்ணில் பட்டிருந்தாலும் பயனிருக்கப் போவதில்லைதான். இருந்தாலும் ஒரு நப்பாசை இந்துவுக்கு.

கிணற்றில் தண்ணீர் எடுக்க வந்தாள் இந்து.

பக்கத்து வீட்டில் வேலைக்காரி பாஞ்சாலி தன் எஜமானியிடம் வேண்டிக் கொண்டிருந்தாள் உரத்த குரலில்.

"கேட்டீங்களாம்மா, சேதியை? பதினைந்து வயசுப் பொண்ணைக் குடுகுடு கிழவனுக்குக் கட்டி வைக்கப் பார்த்தாங்க. அந்தப் பொண்ணு என்னடான்னு, ராவுக்கு ராவே போய்க் கொளத்துலே விழுந்து உயிரை விட்டுப் பிடிச்சு!"

'நாமும் இந்தக் கிணற்றிலே விழுந்து விட்டாலென்ன?' என்று தோன்றியது இந்துவுக்கு. அவளைச் சிந்திக்க விடவில்லை அவள் சின்னம்மா.

"ஏண்டி, எத்தனை நாழியாகத் தண்ணீர் இழுப்பாய்?" என்று அர்ச்சித்தவாறே கிணற்றருகில் வந்து விட்டாள்.

இடுப்பில் குடமும் இதயத்தில் துயரமுமாக உள்ளே போனாள் இந்து.

"முருகா! முருகா! அப்பா எங்கே?"

"ஆபீசு விஷயமாக வெளியூருக்குப் போயிருக்காங்க."

"எப்போ வருவாங்க?"

"எனக்குத் தெரியாது. சும்மா இரு, சித்ரா!" என்றான் முருகன்.

"ஏன் மூடி மறைக்கிறே!" என்று கணவனைக் கடிந்து கொண்ட கண்ணம்மா, இரக்கத்துடன் சித்ராவைப் பார்த்தபடி, "உனக்குச் சின்னம்மாவை அழைத்து வரத்தான் ஐயா போயிருக்காக" என்றாள்.

"உண்மையாகவா?" என்றாள் சித்ரா.

"பின்னே பொய்யா சொல்வேன்? வருகிறவ எப்படியிருப்பாளோ? நீதான் எல்லாத்தையும் பொறுத்துக்கிட்டு போகணும். உன் அதிர்ஷ்டம் எப்படியோ! அது நல்லாயிருந்தால், பெத்தவ போயிருப்பாளோ என்னவோ... போ..." என்று கூறிய கண்ணம்மா வெற்றிலைச் சாற்றை உமிழத் தெருப் பக்கம் நகர்ந்தாள்.

சித்ரா தன் அறைக்குச் சென்றாள்.

இதயத்தை அழுத்திய துன்பச் சுமையைத் தாங்க முடியாமல் தத்தளித்தாள். இந்துவின் நினைவு வந்தது. அவள் நாள்தோறும் எடுத்துச் சொல்லும் கொடிய அநுபவங்களின் நினைவு வந்தது. பிஞ்சு உடல் சிலிர்த்தது. பூ மனம் துடித்தது. இந்துவைப் பார்க்க உள்ளம் விழைந்தது. அவளைப் பார்த்துப் பத்து நாட்களுக்கு மேல் ஆகி விட்டனவே!

தாவணியைச் சரிப்படுத்திக் கொண்டாள். தெருவில் இறங்கி நடந்து சென்றாள் வெகு வேகமாக.

அரை மணி நேரம் நடை பழகிய பிறகுதான் இந்துவின் வீட்டை அடைய முடிந்தது. ஆனால் தோழமையின் சந்திப்பை அடைய முடியவில்லையே. ஆம்! இந்துவின் வீட்டு வாசல் கதவில் பெரிய பூட்டுதான் தொங்கிக் கொண்டிருந்தது. தொங்கிய முகத்துடன் திரும்பி நடந்தாள் சித்ரா.

இரவு பன்னிரண்டு மணியிருக்கும்.

வடபழனியாண்டவன் கோவிலுக்குப் பக்கத்திலிருந்த சத்திரத்தில்தான் பெண் வீட்டார்களும், மணமகனும்கூடத் தங்கியிருந்தார்கள். பேயும் அசந்துறங்கும் நள்ளிரவு. சத்திரத்திலிருந்து ஓர் உருவம் வெளிவந்து இருட்டில்நடந்தது. ஐந்தே நிமிஷங்கள்தான். குளத்தங்கரைக்கு வந்து விட்டது. விடுவிடுவென்று படிகளில் இறங்கியது. கடைசிப் படிக்கு வந்ததும் நின்றது.

'நான் சொல்வதைக் கேள். உன் சின்னம்மா உனக்கு வரப் போகிற புருஷனை இன்னமும் உன் கண்களில் காட்டாமலே வைத்திருந்தாலென்ன? நீயாக அவரை ஒரு தடவை பார்க்க முயற்சி செய்யக்கூடாதா? ஐம்பது வயதில்கூடத் திடகாத்திரமாக இருக்கிற ஆண்கள் இல்லையா? வீணாக உயிரை விட்டுவிடாதே. கிழவனாக இருந்தால் பரவாயில்லை. பேசாமல் கலியாணத்தைப் பண்ணிக் கொண்டு போய்ச் சேர். உன் பிறந்தக வாழ்வில் இருந்த துன்பத்தை விட அதிகமான துன்பம் இனியும் ஒன்று இருக்கப் போவதில்லை. யோசித்துப் பார்' என்றது மனச்சாட்சி.

ஒரு படி மேலே ஏறினாள் இந்து.

'பெற்றவளைப் பறி கொடுத்து விட்டு மாற்றாளிடம் பட்ட துன்பம் போதாதா? இன்னமும் இளையாளாக வேறு வாழ்க்கைப் பட்டு அந்தத் துன்பங்களுக்கெல்லாம் வேறு ஆளாக வேண்டுமா? வேண்டாம் இந்த அவல

## சலிக்காமல் உழைப்பவர்கள் உபயோகிப்பது

# நிவியா

பலவிதப் பயனுள்ள, இயற்கையழகைப் பாதுகாக்கும் இந்த கிரீம் சருமத்தை மிருதுவாக்கி, போஷிக்கிறது. மற்ற கிரீம்களாலாகாத காரியத்தைச் சாதிக்கிறது நிவியா – ஆம், களைப்புற்ற சருமத்துக்குத் தெம்பூட்டுகிறது. அதுமட்டுமா? உங்கள் சருமம் இளமைமாறா ஆரோக்கியத்துடனும், மிருதுவாகவும் இருக்க உதவுகிறது. குடும்பத்திலுள்ள ஆண், பெண், குழந்தைகள் யாவருக்குமே அதன் அரவணைப்பு மேன்மை தருகிறது.




**சருமத்திற்கு நிச்சயமாக வேண்டுவது நிவியா.**

வாழ்வு. நான் இறப்பதுதான் நல்லது. யோசிக்க நேரமில்லை. முகூர்த்தம் ஆறு மணிக்கு. எல்லோரும் எழுந்திருந்து விடுவார்கள். அதற்குள்.... அதற்குள்.. நான் இல்லாமல் ஆகிவிட வேண்டும்.'

சுற்றுமுற்றும் பார்த்து விட்டுத் தண்ணீருக்குள் இறங்கினாள் இந்து. ஒரு படி. இரண்டு படி. மூன்றாவது படியிலும் காலை வைத்து விட்டாள். ஒரு முரட்டுக்கரம் அவள் பின்னலைப் பின்னின்று இழுத்தது. திடுக்கிட்டுத் திரும்பினாள் இந்து.

மெல்லிய நிலவொளியில் முரட்டுக் கரம் படைத்தவரின் முகம் தெரியவே செய்தது.

''நீங்களா?'' என்று அலறினாள்.

''கல்யாணப் பெண்ணல்லவா? ஏம்மா, இந்து! என்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள உனக்குப் பிடிக்கவில்லை. அப்படித் தானே? வேண்டாம். மேலே ஏறி வா!'' என்று கூறியது ஆண் உருவம்.

''நீங்களா என்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறீர்கள்?'' என்று வியப்புத் தாங்காமல் வினவினாள் இந்து. விழிகளில் நீர் சோர.

''நான்தான் உன்னை மணந்து கொள்வதாக இருந்தது. இனியில்லை. நீ பயப்படாமல் வா!''

''இல்லை, இனி எனக்குப் பயமில்லை. வாருங்கள் போகலாம்'' என்று கூறிவிட்டு வேகமாகப் படியேறினாள் இந்து.

''கொஞ்சம் இரு. நீ என்ன சொல்கிறாய்? எனக்குப் புரியவில்லையே?''

''உங்களைக் கல்யாணம் பண்ணிக்கொள்ள எனக்குப் பூரண சம்மதம் என்று கூறுகிறேன்!'' என்றாள் இந்து.

''பின்னே, தற்கொலை எண்ணம் உனக்கு வருவானேன்?''

''நீங்கள்தான் என்னை மணக்கப் போகிறவர் என்று தெரியாததால் ஏற்பட்ட எண்ணம் இது. உண்மை தெரிந்தபிறகு என் மனம் தெளிந்து விட்டது. வாருங்கள், போகலாம்.'' இந்து முன்னே நடந்தாள். அவர் பின்னே நடந்தார்.

வடபழனியாண்டவன் கோவிலில் கெட்டி மேளம் கொட்டியது. இந்துவின் அழகு விழிகளிலிருந்து பொல பொலவென்று நீர் மணிகள் உதிர்ந்தன. இது ஆனந்தக் கண்ணீர்தான்; சந்தேகமே யில்லை.

இரவு முழுதும் தூக்கம் இல்லாமல் படுக்கையில் அழுது புரண்டு கொண்டிருந்த சித்ரா, விடியற்காலம் பொழுது விடிந்த பிறகுதான் சற்றுக் கண்ணயர்ந்தாள்.

''சித்ரா, சித்ரா! எழுந்திரம்மா. யாரு வந்திருக்காங்க, பாரு.'' கண்ணம்மாதான் அவளைப் பிடித்து உசுப்பினாள்.

திடுக்கிட்டு விழித்துக் கொண்டாள் சித்ரா. கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தபோது எதிரே அவள் கண்ட காட்சி! மாலையும் கழுத்துமாகத் தன் தகப்பனுக்குப் பக்கத்தில் மணக்கோலத்தில் நின்று கொண்டிருந்தது...?

''இந்து....!''

தோழமையின் இணைப்பு இதமாகத்தான் இருந்தது. இருவருக்கும்தான்.



'' இந்த மருந்தை நீ பாதாம் ஹல்வா என்று நினைத்து விழுங்கிவிடு !''

'' ஏன் டாக்டர் ! நான் பாதாம் ஹல்வாவை மருந்து என்று நினைத்து விழுங்கி விடுகிறேனே !''

''இந்து! நீயா என் சின்னம்மா ?..... இதென்ன கொடுமை!'' என்று குமுறிக் குமுறி அழுதாள் சித்ரா.

''என் சின்னம்மா எனக்கு இழைத்த பல கொடுமைகளில் இதையும் ஒரு கொடுமையாகத்தான் நானும் எண்ணி, என்னையே மாய்த்துக் கொள்ள ஓடினேன். தக்க சமயத்தில் உங்கப்பா வந்து என்னைத் தடுத்து ஆட்கொண்டார், சித்ரா. அவர்தான் எனக்கு மாலையிடப் போகிறவர் என்பதை அறிந்ததும் என் துயரம் பறந்தோடி விட்டது.''

''இப்படி நீ செய்ததைவிடத் தற்கொலை செய்து கொண்டிருக்கலாம் இந்து. உன் வயதென்ன? அப்பாவின் வயதென்ன ?'' வேதனை தாங்காமல் விம்மினாள் சித்ரா.

''செய்திருக்கலாம் சித்ரா. அப்படிச் செய்திருந்தால் எனக்கு வாய்த்தது போல் உனக்கும் ஒரு கொடியவள் சின்னம்மாவாக வருவதை நான் தடுத்திருக்க முடியாதே!'' என்றாள் இந்து.

''எனக்கு நல்ல சின்னம்மாவைத் தருவதற்காக உன் வாழ்வைப் பாழ்படுத்திக் கொண்டு விட்டாயே?'' என்றாள் சித்ரா வேதனை தாங்கமாட்டாதவளாய்.

''இல்லை. எனக்கு ஏற்பட்டிருந்ததைப் போன்ற கொடியதான ஓர் அனுபவத்தை என் தோழிக்கும் ஏற்படாமல் தடுத்துவிட்டோம் என்கிற எல்லையற்ற மன நிறைவு எனக்கு ஏற்பட்டிருக்கிறது சித்ரா. எனக்கு இது போதும். வீணாக நீ உன் மனத்தை வருத்திக் கொள்ளாதே!'' என்றாள் இந்து அன்பு ததும்பும் நட்பின் உரிமையோடு.

இருவருடைய பேச்சுக்களிலிருந்தும் ஒன்றையும் புரிந்துகொள்ள முடியாதவராய்ச் செயலற்று நின்றிருந்தார் சித்ராவின் அப்பா. ஒன்றை மட்டும் அவரது உள் மனம் உணர்ந்தது. 'நாம் இந்த இரண்டு பெண்களுக்குமே அநீதி இழைத்து விட்டோம்' என்பதுதான் அது. காலம் கடந்த இந்த அறிவின் உதயத்துக்கு மதிப்பேது?

# நந்தவனம்

## 48. பனைமலை ஓவியம்

சித்திரானந்தருடைய பேச்சினால் கவரப்பட்ட சிவகாமிநாதன் அவருக்கு அருகிலே வந்து நின்று கொண்டு அவர் மேலும் என்ன சொல்லப் போகிறார் என்பதையே ஆவலோடு கவனித்தான்.

''மகனே! ஓய்வு ஒழிவில்லாமல் சுழல்கிற ஆன்ம இயக்கத்தை உதாசீனம் செய்வது தவறாகும். கடந்த சில ஆண்டுகளாகப் பல பெரியோர்களின் கூட்டுறவினால் நான் அடைந்த அனுபவத்திலிருந்து சொல்கிறேன் கேள்! ஏதோ அரை குறையாக நின்று விட்ட பல இலட்சியங்களை மீண்டும் பூர்த்தி செய்வதற்காக நம்முடைய முன்னோர்கள் நமக்கு இப்படி ஒரு கட்டளை தருகிறார்கள் என்று நினைத்து, நீ மன அமைதி கொள்ள வேண்டும். சிவகாமி நாதனுடைய உற்சாகத்தைத் தடை செய்யாதே!''

இவ்வாறு சொன்னார் சித்திரானந்தர். இந்த வார்த்தைகளுக்குச் செண்பக சுந்தரி எதுவும் எதிர் வார்த்தை பேசவில்லை. கலங்கிய கண்களோடு சாமியார் சித்திரானந்தரின் சொற்களைச் செவியிலே தேக்கினாள்.

சித்திரானந்தர் இதன் பிறகு கல்கத்தாவில் அதிக நாள் தங்கவில்லை. தமது தல யாத்திரையை முடித்துக் கொண்டு மறுபடியும் வருவதாகச் சொல்லி விடைபெற்றுக் கொண்டு போய் விட்டார்.

சாமியார் சென்று விட்டாலும் அவருடைய வார்த்தைகள் அவரோடு போய் விடவில்லை. அந்தப் பேச்சிலே ஆழமாகப் பொதிந்திருந்த உபதேசம் செண்பகசுந்தரியின் உள்ளத்தில் நன்றாகப் பதிந்தது. இதன் பயனாகச் சில வாரங்களில் சிவகாமி நாதன் சென்னைக்குப் புறப்பட்டான்.

கல்கத்தா ஓவியப் பள்ளியின் தலைமை ஆசிரியர் தனக்குப் பணித்திருந்த கலைக் கட்டளையை நிறைவேற்றுவதிலே ஆர்வத்தோடு முனைந்தான் சிவகாமிநாதன்.

ராஜசிம்ம பல்லவன் என்ற அரசன் பனைமலையிலே கட்டி முடித்த கோயிலின் சுவர்களிலே அற்புதமான சித்திரங்கள் இருக்கின்றன என்றும், அந்தச் சித்திரங்கள் காலத்தின் கொடுமையாலும், மனிதர்களின் அசிரத்தையினாலும், அந்நியர்களின் அநீதியாலும் மங்கி மறைந்து வருகின்றன என்றும் கேள்விப்பட்டான் சிவகாமி நாதன். சென்னைக்கு வந்ததும் முதலாவது வேலையாக இந்தப் பனைமலை ஓவியங்களைச் சென்று பார்த்து இவற்றுக்குப் படி செய்து கொள்ள வேண்டும் என்று தீர்மானித்தான் அவன்.

சென்னையிலிருந்து பனை மலைக்குச் சென்று வயல்களுக்கு மத்தியில் ஏரியின் மருங்கிலே, கம்பீரமாக எழுந்து நின்ற மலையின் மேல் ஏறும்போதே சிவகாமி நாதனுக்குப் புதிய உற்சாகம் பிறந்தது. இத்தனை உயரத்தில் இத்தனை பாதுகாப்பான ஓர் இடத்தில் ஓவியக் கலையைக் கொண்டு பொதிந்து வைத்தும் கூட, இவற்றையும் அழித்து விடக் கூடிய சக்தி மனிதனுக்கு இருக்கிறதா என்று எண்ணியதும் சிவகாமிநாதனுடைய உள்ளத்தில் துயரம் படர்ந்தது. கோவிலுக்குள்ளே சென்றபோது இந்தத் துயரம் பல மடங்காகப் பெருகியது.

'எத்தனை புராதனமான கோவில்! இதை எத்தனை தூரம் அலட்சியப் படுத்தி விட்டோம் நாம்!' என்று வருந்திக் கொண்டே முக்கியமான சித்திரங்கள் இருக்கக் கூடிய இடத்துக்கு வந்தான். இருளும் ஒளியும் ஒன்றோடொன்று போட்டி போட்டு விளையாடிக்

கொண்டிருந்தன அந்தக் கருவறையிலே. அதனுள், ஆகா, எத்தனை அற்புதமான ஓவியங்கள்!

அண்ட பிண்ட சராசரங்கள் எல்லாம் இசையிலே இயங்கவும், வானமும் பூமியும் ஒரேபடியாக அளாவி நின்று சடை படர்ந்து விச நடனம் ஆடுகிறான் ஆனந்தக் கூத்தன்! இதோ பக்கத்துச் சுவரிலே வண்ண வண்ணமான வட்டக் குடையின் தண்ணிழலிலே திரிபுர சுந்தரி காட்சி தருகிறாள். என்ன ஒயிலான தோற்றம்! சுவரோடு சுவராக வர்ணங்கள் குழைந்து நிற்கின்றன. ஆனால் காலத்தின் கொடுமையா, அல்லது அறிவிலிகளின் செயலா, இல்லை, கொடுமைக்காரர்களின் அக்கிரமமா, சித்திரத்தில் பாதிக்கு மேல் அழிந்து கிடக்கிறது! ஒட்டிக் கொண்டிருக்கும் பாதிச் சித்திரத்திலும் கூடச் சுவரின் பொருக்குகள் ஊசலாடிக் கொண்டிருக்கின்றன!

சிவகாமி நாதனுடைய விழிகளிலே கண்ணீர் சுரந்தது. மறைந்தும் மறையாமல் நிற்கும் அந்தச் சித்திரங்களையும், அவற்றுக்குப் பின்னால் காலம் என்ற சுவரின் பின்னணியிலே தொங்கிக் கொண்டிருந்த மனித மனத்தின் அறுதியான கற்பனையும் சிவகாமிநாதனுடைய மனக் கண்களிலே வர்ணப் படலங்களாக விரிந்தன.

'தமிழ்நாட்டில் என்னுடைய முதலாவது பணி இதுதான். இன்றோ நாளையோ இந்தச் சுவரிலிருந்து விடைபெறுவதற்காகத் துடித்து ஆடிக் கொண்டிருக்கிற இந்த வர்ணக் காட்சியைக் காகித மடல்களிலே படி செய்ய வேண்டும்!'

இவ்வாறு தீர்மானித்தான் சிவகாமிநாதன். அந்தத் தீர்மானத்தில் உறுதியும் ஊக்கமும் பிறந்தன.

அன்று பகல் முழுதும் சிவகாமிநாதன் பனைமலைச் சுவரோவியங்களுக்கு எதிரிலேயே உட்கார்ந்தவாறு, அந்தச் சித்திரச் சாயல்களையே கண்ணிமைக்காமல் பார்த்துக்கொண்டிருந்தான். யாரோ இரண்டொரு கிராமவாசிகள் வந்தார்கள். இவனைப் பற்றியோ அல்லது இவனுக்கு எதிரே காட்சி தந்த அந்தச் சுவர்களைப் பற்றியோ யாரும் கவலைப்படவில்லை. போய் விட்டார்கள். இரண்டொரு ஆங்கிலேய யாத்திரிகர்கள் வந்தார்கள். ஐந்து நிமிஷத்தில் அந்தக் கோயிலின் சிறப்பு முழுவதையும் தங்களுடைய குறிப்புப் புத்தகங்களிலே எழுதி வைத்துக் கொண்டு சென்று விட்டார்கள். பொழுது சாயும் நேரத்தில் அந்தக் கோயிலின் பூசாரி ஒருவர் வந்தார். புதிதாக அந்தக் கருவறையிலே சுவர்களுக்கு எதிரிலே இடிந்து போய் உட்கார்ந்திருந்த ஒரு வாலிப மனிதச் சுவரைக் கண்டதும் திகைப்போடு நின்றார்.




''ஐயா! ஒரு வாரம், பத்து நாள் நான் இங்கே எங்காவது தங்கியிருப்பதற்கு ஒரு குடிசை கிடைக்குமா?'' என்று கேட்டான் சிவகாமிநாதன் பூசாரியிடம்.

இதுவரை இடிந்து உட்கார்ந்திருந்த மனிதச் சுவர் இப்போது பேச ஆரம்பித்ததும் சிவகாமிநாதனுக்கு அருகிலே பரிவோடுவந்து அவனைப் பார்த்தார் பூசாரி.

''ஐயா, நான் கல்கத்தாவிலிருந்து வருகிறேன். இந்தச் சித்திரத்துக்கு வர்ணப்படி ஒன்று எடுக்க வேண்டும். அதற்காக என்னை இங்கே அனுப்பியிருக்கிறார்கள். சில நாட்கள் நான் இங்கே தங்கியிருந்து இந்த வேலையைச் செய்ய வேண்டும்!''

இவ்வாறு அடக்கத்தோடு கூறினான் சிவகாமி நாதன். பூசாரிக்கு அந்த இளைஞனுடைய பேச்சு பிடித்திருந்தது.

''தம்பி! அடிக்கடி இந்தக் கோவிலுக்கு வெளியூர் மனிதர்கள் வந்து போகிறார்கள். சில வருஷங்களுக்கு முன்னால் யாரோ ஒரு அமெரிக்க வெள்ளைக்காரர் இங்கே வந்து இந்தச் சித்திரத்தைப் பார்த்து விட்டு இங்கிலீஷிலே இதைப்பற்றி எழுதினாராம். இதன் பிறகு நம்முடைய தமிழ் மக்களுக்கு இந்தச் சித்திரத்தில் ஒரு மோகம் உண்டாகி விட்டது. ஞாயிற்றுக்கிழமைகளில் சென்னையிலிருந்து மாணவர்களும் ஆசிரியர்களும் கூட இங்கே வருகிறார்கள். ஆனாலும் இதுவரை யாரும் உங்களைப் போல் ஒரு வாரமோ பத்து நாளோ தங்கியதில்லை!'' என்றார் பூசாரி.

''அப்படியானால் நான் இங்கே தங்கியிருப்பது உறுதிதானா? அதாவது நான் தங்கியிருக்க வசதி செய்து தருவீர்களா?'' என்று கேட்டான் சிவகாமிநாதன்.

''நீங்கள் எல்லாம் பட்டணத்திலே இருந்து பழகியவர்கள். இங்கே அத்தனை வசதி இராது. நான் இருப்பது இங்கிருந்து இரண்டு மூன்று மைல் தொலைவில் உள்ள ஒரு சிறு கிராமம். வசதிகள் ஏதும் இராது. உங்களுக்குச் சம்மதமானால் என்னுடைய வீட்டிலேயே பத்து நாட்கள் நீங்கள் தங்கி

யிருக்கலாம்'' என்று பணிவோடு பூசாரி சொன்னார்.

''வசதிகளைப் பற்றிக் கவலையில்லை. வேலை முடிந்தால் சரிதான்!'' என்றான் சிவகாமிநாதன் தீர்மானத்தோடு.

ஆம்; பனைமலைக்கு அருகிலேயுள்ள சிற்றூரிலே பூசாரியின் வீட்டிலே தங்கினான் சிவகாமிநாதன். பொழுது விடிந்ததும் கட்டுச்சோறும் கையுமாக மலையை நோக்கி நடப்பான். பிறகு மாலையிலே பொழுது சாய்கிற வேளையிலேதான் வீடு திரும்புவான் அவன்! பகல் முழுதும் சித்திரப் பணி தீவிரமாக நடந்தது.

நாலைந்து நாள் இப்படிக் கழியவும், பூசாரிகுறிப்பிட்ட ஞாயிற்றுக்கிழமை வந்தது. அன்று காலையில் சிவகாமிநாதன் பூசாரியின் வீட்டிலிருந்து வழக்கம்போல் புறப்படும்போது அவர் சொன்னார்:

''பொழுது சாய்வதற்கு முன்னால் வழக்கப்படி நான் கோவிலுக்கு வருகிறேன். நீங்கள் அதுவரை சித்திரம் வரைந்து கொண்டிருங்கள். ஆனால் இன்றைக்கு அவ்வளவு நிம்மதியாக இருந்து நீங்கள் வேலை செய்ய முடியாது.''

''ஏன் அப்படிச் சொல்லுகிறீர்கள்? ஞாயிற்றுக்கிழமை என்பதாலா?''



''ஆமாம். அதிலும் இன்று யாரோ பெரிய வீட்டுப் பிள்ளைகள் எல்லாம் வருகிறார்களாம். அதனால் மணியக்காரரும் இரண்டொரு முக்கிய பிரமுகர்களும் பக்கத்துக் கிராமத்திலிருந்து கோவிலுக்குப் போய்க் காத்திருக்கப் போகிறார்களாம்.'' இப்படிச் சொன்னார் பூசாரி.

''அப்படியானால் விசேஷமான பூஜைகள் இருக்குமே! நீங்களும் இப்போதே புறப்பட வேண்டுமே!''

''இல்லை! பட்டணத்துப் பள்ளிக்கூடத்திலிருந்து சித்திரம் பார்ப்பதற்காகப் பிள்ளைகள் வருகிறார்களாம். மலைக்கு மேல் கோவிலுக்கு அருகில் தங்கியிருந்து விருந்தெல்லாம் சாப்பிடப் போகிறார்களாம்!''

''பெரிய வீட்டுப் பிள்ளைகள் என்றீர்களே!''

''ஆமாம். அப்படியில்லையென்றால் இத்தனை பிரமுகர்கள் பனைமலைக்குப் போகமாட்டார்கள்'' என்றார் பூசாரி.

சிவகாமிநாதன் புன்னகை செய்தான். சொன்னான்:

''நிம்மதியாக இருந்து சித்திரம் வரைய விட மாட்டார்கள்! அப்படித்தானே?''

''இல்லை. அதற்குச் சொல்லவில்லை தம்பி! உங்களைப் பார்த்தால் வாலிப வயதுப் பிள்ளையாக இருக்கிறீர்கள். களையான முகம். யாரும் ஒரு தடவைக்கு மேல் இன்னொரு தடவை பார்க்கும்படி தூண்டுகிற கவர்ச்சி. சித்திரம், சிற்பம் இம்மாதிரி வேலைகளில் ஈடுபடுகிற இளம் பிள்ளைகள் எல்லாம் எப்போதுமே முன் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று சொல்வதுண்டு. ஏதோ சொன்னேன். தவறாக எண்ணிக் கொள்ளாதீர்கள்!''

இப்படிச் சொல்லி விடை கொடுத்து அனுப்பினார் பூசாரி.

மலையை நோக்கி நடந்து சென்றபோது வழியெல்லாம் சிவகாமிநாதனுக்கு ஒரே யோசனை! இது வரை இப்படியெல்லாம் எச்சரிக்கை செய்து கேட்டறியாதவன் அவன்! இப்போது அந்த எச்சரிக்கை மொழிகள் ஏதேதோ புதிய



சிந்தனைகளை அவன் உள்ளத்திலே கிளறின!

பனைமலை அடிவாரத்துக்கு வந்து, மலையின் மேலே ஏறும் போது அடிக்கடி திரும்பிப் பார்த்துக் கொண்டான் சிவகாமிநாதன், பின்னால் யாராவது வருகிறார்களா என்று! யாரையும் காணோம்! மேலே ஏறிச் சென்று கோவிலுக்குள்ளே போகும் போது மறுபடியும் திரும்பிப் பார்த்தவாறு ஐந்து நிமிஷம் நின்றான். யாரையுமே காணோம். உள்ளே சென்று கருவறையிலே நுழைந்து சித்திரப் பணி

யைத் தொடங்கினான். ஆனால் மனம் மட்டும் அறைக்கு வெளியே வாசற்படியிலே நின்றது!

இறகை வர்ணத்திலே தோய்த்து எதிரேயிருந்த காகித அட்டையிலே எழுதத் தொடங்கினான் சிவகாமிநாதன். ஏற்கனவே வரைந்திருந்த எல்லைக் கோடுகளுக்குள்ளேதான் வர்ணத்தைப் பூச ஆரம்பித்தான். ஆனாலும் எல்லைக்குள்ளே இயங்காமல் இறகு வெளியே பாய்ந்தது! அறைக்கு வெளியே கண்கள் சுழன்றன! புதிதாக யார் வருகிறார்கள் என்று ஆராய்ந்தது மனம்!

கல்லூரி மாணவிகளைப் போல் தோற்றம் தருகிற இளம் பெண்கள் ஐந்து பேர், அந்தச் சித்திர அறையை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள்!

மனித வாசனையே இராது என்று நினைத்து வேகமாக நடந்து வந்த அந்தப் பெண்கள், அறையினுள் ஒரு சித்திர சுந்தரனைக் கண்டதும் தயங்கி நின்றார்கள். ஐந்து பெண்களில் நால்வர் பின்னோக்கித் திரும்பிச் செல்ல முனைந்தார்கள். ஆனால் ஒரு பெண் மட்டும் அங்கேயே நின்றாள்.

''நீங்கள் எல்லாம் எதற்காக என்னை அழைத்து வந்தீர்கள்? இப்போது ஏன் திரும்புகிறீர்கள்?'' இப்படிக் கோபமாகவே கேட்டாள் அந்தப் பெண்.

பனைமலைச் சித்திரங்களைப் பார்ப்பதற்காக அவளோடு வந்தவள் அவள் என்பது சிவகாமிநாதனுக்குப் புரிந்தது. பெண்களுக்குள் தர்க்கம் ஆரம்பிப்பதற்கு முன் அவன் அந்த அறையிலிருந்து வெளியே வந்துவிடலாம் என்று ஒரு விநாடி யோசித்தான்.

அப்போது ஐவரில் முன்னால் நடந்து ஆர்வத்தோடு விரைந்து வந்த முதலாவது மாணவி, சிவகாமிநாதனையும் அவனுடைய கையிலே இருந்த இறகையும் கூர்ந்து பார்த்தாள்.

''நீங்கள் உள்ளே வந்து சித்திரங்களைப் பார்க்கலாம். நான் அதுவரை வெளியே நிற்கிறேன்!'' இவ்வாறு சொல்லி எழுந்தான் சிவகாமிநாதன்.

''நீங்கள் ஏகாந்தமான சூழலிலே இருந்து ஒரே சித்தமாகச் சித்திரம் வரைந்து கொண்டிருக்கிறீர்கள். உங்களைத் தொந்தரவு செய்து விட்டதற்கு மன்னிக்க வேண்டும்!'' என்றாள் முதலாவது மாணவி.

சிவகாமிநாதன் மறுமொழி சொல்லவில்லை. நேற்று வரை ஒரே சித்தமாகத்தான் வரைந்து கொண்டிருந்தான். ஆனால் இன்று அப்படியில்லையே! காலையிலிருந்து அவன் சித்தம் ஒரு நிலையில் இல்லையே!

மௌனமாக எழுந்து தனது சித்திர மடலைச் சுவரின் ஓரத்தில் வைத்து

விட்டு வெளியே வந்தான் சிவகாமிநாதன்.

மாணவிகள் அந்த அறையினுள்ளே நுழைந்தார்கள்.

''ஆகா!'' என்றாள் முதலாவது மாணவி.

''ஆகாப் போட்டு விட்டாயா! இனி மேல் உன்னை இந்த இடத்திலிருந்து நகர்த்த முடியாது!'' என்றாள் இரண்டாவது மாணவி.

மற்ற மாணவிகள் 'கலகல'வென்று பழைய உல்லாசச் சிரிப்பை உதிர்த்தார்கள். சிவகாமிநாதன் அவர்களுடைய இயக்கத்தையே பார்த்துக் கொண்டு நின்றான்.

''என்ன அற்புதமான சித்திரம்! ஆனால் பாதிக்கு மேல் மங்கி மறைந்து விட்டதே!''

இவ்வாறு சொல்லிக் கொண்டே சுவரில் சாத்தி வைக்கப்பட்டிருந்த மடலின் மேலட்டையைப் பார்த்தாள் முதலாவது மாணவி!

''ஆனால் அந்த மறைந்த பாதியை நீங்கள் உங்கள் காகிதத்திலே கற்பனை செய்து முடித்திருக்கிறீர்களே! என்ன ஆச்சரியம்!''

தன்னையும் மறந்து இவ்வாறு கூறிக் கொண்டே சிவகாமிநாதனைப் பார்த்தாள் அந்த முதலாவது மாணவி. அவளுடைய முகத்தில் ஒளி விசித் திகழ்ந்த வியப்பையும் பாராட்டையும் கண்டு பரவசமாகி நின்றான் சிவகாமிநாதன்: பல ஆண்டுகளுக்கு முன்பு முதன் முதலாகச் சித்திரானந்தர் தனது ஓவியத்தைக் கண்டு பாராட்டிப் பேசினாரே, அப்போது எத்தகைய உவகை அவனுடைய உள்ளத்தில் உண்டாயிற்று! அந்த உவகை மீண்டும் இப்போது ஏற்பட்டது சிவகாமிநாதனுக்கு!

''நாலைந்து நாட்களாக முயற்சி செய்கிறேன். மறைந்த பாதியை எப்படியாவது இறகிலே பிடித்து விடலாம் என்று ஆசை. ஆனாலும் கைக்கு எட்டாமல் விளையாடுகிறாள் பராசக்தி!'' என்றான் சிவகாமிநாதன்.

''இல்லை. பக்திக்குள்ளே சிக்காத தெய்வம் ஏது? உங்களுடைய இறகின் வலை வீச்சுக்குள் அகப்பட்டுக் கொண்டாள் அன்னை! சந்தேகமில்லை!'' என்றாள் அந்தப் பெண்கொடி.

முன்பின் அறிமுகமில்லாத இதயங்கள் கலை என்ற அரங்கிலே அத்தனை வேகத்தோடு அறிமுகமாகிக் கொண்டனவா! என்ன ஆச்சரியம்! சிவகாமிநாதனுக்கே அந்த நுட்பம் தெரியவில்லை. என்ன சொல்லுவது என்று தெரியாமல் முகத்தில் வெட்கம் படர்ந்தது அவனுக்கு!

''சித்திரம் என்றால் இவளுக்கு உயிர்! சம்பிரதாயங்களை யெல்லாம் பொருட்படுத்தாமல் பேச ஆரம்பித்து விடுவாள்!'' என்று நிலைமையைச் சமாளித்தாள் இரண்டாவது மாணவி.

''சம்பிரதாயமாவது ஒன்றாவது! காற்று வீசுவதும், மழை பொழிவதும், நிலவு காய்வதும் சம்பிரதாயங்களைக் கடந்த நிகழ்ச்சிகள்! அது போல அன்பான வார்த்தைகளும் சம்பிரதாயங்களுக்குக் கட்டுப்படுவதில்லை!''

இப்படிச் சொல்லிக் கொண்டே பாராட்டைப் பொழிந்த மாணவியை நன்றியும் நேசமும் கலந்த நோக்கோடு பார்த்தான் சிவகாமிநாதன்.

''இத்தனை உயரமான மலை உச்சிக்கு ஏறி வந்து, இந்த இருட்டான அறைக்குள்ளே உட்கார்ந்து, ஒரு மனிதன் சித்திரம் வரைந்து கொண்டிருக்கிறானே என்ற அனுதாபத்தினால் நீங்கள் என்னைப் பாராட்டுகிறீர்கள். உண்மையில் இந்தச் சுவர்களிலே தங்களுடைய வர்ணக் கற்பனைகளை யெல்லாம் பொழிந்தார்களே நமது முன்னோர்கள், அவர்கள் எங்கே, நான் எங்கே? எந்த வர்ணத்தை எப்படிக் குழைத்து இந்த நீலத்தையும், இந்தக் கிளிப் பச்சையையும், இந்தச் சிவப்பையும், இந்த அற்புதமான மஞ்சளையும் சுவரிலே, கண்ணும்புக்கு மேலே அவர்கள் பிறப்பித்தார்கள்! நானும் தான் எத்தனையோ முயன்று முயன்று பார்க்கிறேன். மூலவர்கள் செய்த அந்த வர்ண ஜாலம் எனக்குப் பிடிபடவில்லையே!'' என்றான் சிவகாமிநாதன்.

''இல்லை. அப்படிச் சொல்லாதீர்கள். நீங்கள் உங்களுடைய சித்திர மடலிலே செய்துள்ள சாதனை எத்தனை மகத்தானது என்பது எனக்கு நன்றாகப் புரிந்துதான் உங்களை இவ்வாறு பாராட்டுகிறேன். சிறு வயதிலிருந்தே நான் இந்த வர்ணக் கலவைகளைப் பற்றிய ஆராய்ச்சிகளை அடிக்கடி கேட்டிருக்கிறேன். சுவர் ஓவியங்களைப் போலவே வர்ணப் படிகளை வரைகிற கலையை நானும் சில காகித மடல்களிலே பார்த்திருக்கிறேன். அதனால்தான் உங்களுடைய திறமையை இவ்வளவு தூரம் வியந்து சொல்லுகிறேன்!''

''என்ன? இம்மாதிரியான சித்திர மடல்களை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? பார்த்திருக்கிறீர்களா?'' என்று ஆவலோடு கேட்டான் சிவகாமிநாதன்.

''ஆமாம்!'' என்று சொல்லும் போதே அந்த மாணவியின் கண்கள் கலங்குவதைக் கண்டு திகைப்படைந்தான் சிவகாமிநாதன்! (தொடரும்)

நீங்கள் அதை ஒவ்வொரு
சிறந்த குடும்பத்திலும் காண்பீர்கள்






அது ஒரு

**பார்லே**

தயாரிப்பு




பார்லேயின் மொனாகோ சால்டெட் ஸ்னாக்ஸ் இந்தியாவில் மற்றெந்த கார பிஸ்கெட்டுகளைவிட அதிகம் விற்பனையாகின்றன.

பார்லே ப்ராடக்ட்ஸ் மானு. கம்., பிரைவேட் லிட்., பம்பாய்-57.

PP. 502- TAM

# மழை

எம். வி. வெங்கட்ராம்

நாலைந்து நாட்களாக மழை பலமாகப் பெய்து கொண்டிருந்தது. மேகங்களுக்குப் பின்னால் பதுங்கிய சூரியன் வெம்மையோடு தெளிவையும் இழந்துவிட்டது போலும். பகல் அந்தியின் கருக்கலைப் போல் சோகையாக இருந்தது. இரவோ, நீருக்கும் இருளுக்கும் இடையில் நடைபெறும் போராட்டமாய் விளங்கியது. மழையின் வழியை மறித்தது இருட்டு; இருட்டைக் குடைந்து தாரைக்கு இருட்டிலேயே தாவியது மழை.

எனக்குத் தூக்கம் வரவில்லை. உடலில் அசதி மிகவில்லை என்பது காரணம் அன்று. கம்பளிப் போர்வையின் கதகதப்பை உடல் வேண்டியது. ஆனால் உடம்பை வாகனமாக்கிக் கொண்டு மேலேறிய மனம் அதை விரட்டிக் கொண்டிருந்தது. இமைகளைப் பிரித்து விழிகளில் கனவுகளை ஊற்றியது.

கதவைத் திறந்து வீதியை எட்டிப் பார்த்தேன். மழையில் நனைந்த இருட்டுத் தள்ளாடிக் கொண்டிருந்தது. தெருவிலிருந்து மூன்று படிகள் ஏறித்தான் வீட்டுக்குள் வர வேண்டும். ஆனால் படிகளின் உதவியின்றியே காற்று மேல் தாவி விழுந்து தழுவியது. மழைக் கம்பிகள் நாகங்களைப் போல் என்னைப் பிடிக்கச் சீறின. சீறுகின்ற அந்த நீர்த் தாரைகளின் குளுமை எனக்கு ஆனந்தமாக இருந்தது.

நிற்கவும் பிடிக்கவில்லை. யாரையாவது எதிர்பார்த்தால் என்ன?

மேலிருந்து தவறிக் கீழே விழுந்து உடைந்த தவலை போல் வீதியும், வீடுகளும், அப்பால் மரங்களும், பிறகு கறுப்பு வானங்களும் சிதைந்து சிதறிக் கிடந்தன. அந்தப் பாழ்த் துணுக்குகளை அள்ளித் திரட்டி இருட்டில் செருகிக் கூத்தாடும் இந்த மழையில் நடமாட யாருக்குத் துணிவு வரும்?

எல்லாமே தண்ணென்று ஒடுங்கிக் கிடக்கும் இந்த இன்பத்தைச் சுவைக்க இரவர்கள் யாராவது இருக்கக் கூடாதா? மாசு இல்லாத சிசுவைப் போல் இருளை அளைந்து மழைவெட்டி, நிலத்தைப் 'பட்-பட்' என்று உதைத்துச் சிரித்து விளையாடுகிற ஜீவன் உலகத்தில் இல்லையா?

நிச்சயமாக யாராவது வருவார்கள் என்றுதான் எனக்குத் தோன்றியது. தெருவின் இருபுறமும் கழுத்தை ஒடித்துப் பார்த்தேன். யாரும் வருவதாகத் தெரியவில்லை. வருகிறவர்கள் வருகிறபோது வரட்டும் என்ற நினைப்புடன் கதவைத் திறந்தபடியே வைத்துவிட்டு வாசலுக்குப் பக்கத்திலேயே மழை நீர் தீண்ட முடியாத தொலைவில் சாய்ந்துகொண்டேன்.

மனத்தைப் படுக்கையாகப் பரப்பி அதன் மீது உடல் தூங்க முயன்றது. கண்களில் 'கரு கரு' என்று ஒரு மயக்கம் தெளித்தது; எதிர் பார்த்ததைப் போலவே வாசலில் 'ஏதோ ஒன்று' நிற்பதாகத் தோன்றியது. தயக்கத்துடன் மெதுவாக உள்ளே நுழைவதும் தெரிந்தது. ஆனால் சொக்கிக் கிடந்த கண்கள் 'வந்ததை' ஏறெடுத்துப் பார்க்க முடியவில்லை.

"கதவைக் கூடச் சாத்திக் கொள்ளாமல் சாரலில் யாரது?" என்ற சொற்கள் என் கலக்கத்தைக் கலைத்து எழுப்பின. இருட்டில் இனம் கண்டுகொள்ள முடியாமல் இரண்டு உருவங்கள்.

"ராஜுவா?" என்ற அந்தக் குரல் மிகவும் பழகிய குரலாகக் கேட்டது.

"நான்தான். நீ யார்?"

"கல்யாணி — தெரியவில்லையா? இந்தக் குரல் கூடவா மறந்துவிட்டது?"

"கல்யாணியா?"





எந்தக் கல்யாணி? அந்தக் கல்யாணியா?

"நீயா? எங்கிருந்து வருகிறாய்? எங்கே இருக்கிறாய் இப்போது? இந்த அகாலத்தில் எப்படி வந்தாய்?" என்று கேள்விகளாலேயே அவளைப் புரட்டிப் பார்க்க முயன்றேன்.

"முதலில் வெளிச்சம் வேண்டும். நானும் கண்ணனும் மழையில் நனைந்திருக்கிறோம். மாற்று உடை வேண்டும். கண்ணன் பசியால் துவண்டு விட்டான். அவனுக்கு ஏதாவது ஆகாரம் வேண்டும். இவ்வளவும் ஆனபிறகு நாம் பேசலாம்."



''இவ்வளவு நாள் நீங்கள் இரண்டு பேரும் சேர்ந்து சண்டையில்லாமல் வியாபாரம் செய்து வந்தீர்களே, இப்பொழுது ஏன் சண்டை வந்தது?''

''இப்பத்தான் லாபம் வந்தது!''

வந்தவனை நான் உபசரித்த விதம் எனக்கே சங்கோசமாக இருந்தது. மனைவியை எழுப்பலாமா என்று யோசித்தேன். பார்வதிக்குக் கல்யாணியின் பழைய கதை தெரியும். இந்த நடுநிசி விருந்தாளியை அவள் எப்படி வரவேற்பாளோ என்று அச்சமாக இருந்தது.

மழையில் மின்சாரம் செத்து விட்டது. பார்வதியும் இரு குழந்தைகளும் தூங்கிய இடத்தில் வெளிச்சத்துக்காக வைத்திருந்த சிறு மண்ணெண்ணெய் விளக்கை எடுத்துக் கொண்டு சேலைகளைப் புரட்டிய போதும் எனக்குத் தயக்கமாகவே இருந்தது. பார்வதிக்கு உடைமை உணர்ச்சி அதிகம். அவள் அதிகமாக விரும்பாத அரக்குச் சேலை ஒன்று, ரவிக்கை, என் பையனின் டிராயர், சட்டை ஒரு துண்டு இவ்வளவையும் எடுத்துக் கல்யாணியிடம் நீட்டினேன்.

கை விளக்கின் ஒளியில் கண்ணனின் உருவம் பரிதாபமாக இருந்தது. வெட்டாய், அழகாய் இருப்பது போலத் தோன்றினான். ஆனால் வயிற்றுக்கு மீறி அதிகமாக உண்டவனின் விழிப்பது போன்ற அந்த அசட்டுப் பார்வை! ஊனம் புத்தியோடு நின்று விடவில்லை. முழங்காலுக்குக் கீழே இரண்டு கால்களும் சப்பை. 'நாலு கால்' நடைதான். அதனால்தான் அவள் அவனை இடுப்பில் தூக்கிக் கொண்டு வந்தாள்.

''என் கண்ணன் தவழும் கண்ணன்தான்'' என்று சொல்லி மெதுவாக நகைத்தாள் கல்யாணி. இருவரும் உடம்பைத் துவட்டி உடை மாற்றிக் கொண்டனர்.

அடுத்த பிரச்னை உணவு.

''நீராகாரம்தான் இருக்கிறது. பார்வதியை எழுப்பி அரை மணி நேரத்தில் சமையல் செய்து—''

''வேண்டாம். கண்ணனுக்கு நீராகாரம் போதும்.''

''மழையில் நனைந்துவிட்டு நீராகாரம் சாப்பிட்டால்—''

''எனக்கு ரொம்பப் பசிக்குது அம்மா. நீராகாரம் போதும்'' என்றான் கண்ணன்.

''பார்வதியை எழுப்ப வேண்டாம். கண்ணனுக்கு எதுவும் ஒத்துக் கொள்ளும். இருக்கிறதைக் கொண்டு வா. பிசைந்து கொடுக்கிறேன்.''

வேறு வழியின்றி நீராகாரம் இருந்த பானையை அப்படியே கொண்டு வந்தேன். அதோடு நல்லவேளையாக இருவருக்கும் போதுமான அளவு சாதமும் சாம்பாரும் இருந்தன.

''நீயும் சாப்பிடு, கல்யாணி!''

''எனக்கு வேண்டாம். இன்னும் மூன்று நாளைக்கு எனக்குச் சோறு தேவையில்லை.''

அவன் மட்ட அவசரம் அவசரமாகச் சோற்றை விழுங்கிக்கொண்டிருந்த கண்ணன், ''இரண்டு நாட்களாச்சே அம்மா நீ சாப்பிட்டு. நீயும் சாப்பிடேன். இந்தச் சாம்பாருக்கும் சோற்றுக்கும் ரொம்ப ருசியாக இருக்கிறது'' என்றான்.

கல்யாணி இரண்டு நாட்களாகச் சாப்பிடவில்லை. இன்னும் மூன்று நாட்களுக்கு அவள் சாப்பிட விரும்பவில்லை என்பதும் அவள் சொல்வதால் தெரிந்தது. அவளைச் சாப்பிடும்படி வற்புறுத்தினேன்.

''நான் பிறர் தருவதைச் சாப்பிடுவதில்லை; நானே சமைத்துச் சாப்பிடுவது வழக்கம்.''

''மறந்து விட்டேன் மாமா. அம்மா எப்பவுமே இப்படித்தான். அப்பா தொட்டதைக் கூடச் சாப்பிட மாட்டாள்.''

இது என்ன கூத்து!

''அப்படி ஒரு பழக்கம் ஆகி விட்டது. அதனாலேயே அவரோடு சண்டை வளரும். சமையல் ஆனதும் அவர் வீம்புக்காகவே எல்லாவற்றையும் தொடுவார். நான் பட்டினி கிடப்பதைப் பார்க்க அவருக்கு ஒரு திருப்தி'' என்று திருப்தியாகப் பேசினாள் கல்யாணி.

''பட்டினி கிடந்தாலும் வம்புதான். ஏன் சாப்பிடல்லேன்னு அப்பா அம்மாவை நெருக்குவார். மாமா! அம்மா ஒட்டகம் மாதிரி. ஒரு நாள் சாப்பிட்டால் மூணு நாள் பட்டினி கிடப்பா. என்னால் ஒரு வேளை கூடச் சாப்பிடாமல் இருக்க முடியாது'' என்று மேலும் வருணித்தான் கண்ணன்.

அவன் வாயில் சோற்று உருண்டையைத் திணித்துக் கொண்டே கல்யாணி கூறினாள்: ''கண்ணனுக்கு நாக்கு ருசி தவிர வேறு ஒன்றும் தெரியாது. ஏதாவது அரைத்துக் கொண்டே' இருக்க வேண்டும். ஓர் இரையைத் தின்று முடித்ததும் அடுத்த இரைக்காகக் காத்திருக்கும் பல்லியைப் போல்; இல்லையா, கண்ணு?''

சொல்லி விட்டு அவள் சிரித்தாள். அவனும் சிரித்தான். எனக்குச் சிரிக்கத் தோன்றவில்லை. முரட்டுக் கணவனுடனும் அசட்டுக் குழந்தையுடனும் அவள் வாழ்கின்ற குடும்ப வாழ்க்கை என் கண் முன் சித்திரமாக எழுந்தது. இந்த வாழ்க்கையை அவள் ஏன் தனக்காக விதித்துக் கொண்டாள் என்பது தான் எனக்கு விளங்கவில்லை.

''தூங்குகிறேன் அம்மா.''

''கண்ணனின் இரண்டாவது அவசியத் தூக்கம்'' என்றாள் கல்யாணி.

அவனுக்காகப் பாய் விரித்தேன். சப்பைக் கால்களைச் சுருட்டிக் கொண்டு அவன் படுத்தான். என் பையனின் சட்டை அவனுக்குச் சிறியதாக இருந்தது. வயிறு கொள்ளாமல் சாப்பிட்டதால், பதுமையில் செய்த பொங்குவின் பொம்மை போல் அவன் தோற்றம்

# சிறந்த அமிலநாசினியும், மலமிளக்கியும்




## நம்பிக்கை

ஒவ்வொரு துறையிலும் சில தயாரிப்புகள்தான் சிறந்த குணமும், பல வருடங்களாக நம்பிக்கையானதாகவும் பெயர் பெற்று உயர்ந்த இடம் பெற்றிருக்கின்றன. இந்த நம்பிக்கையான தன்மைதான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா உலகில் எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டும் 75 வருடங்களுக்கு மேலாக சிபார்சு செய்யப்பட்ட உலகமறிந்த தாயரிப்பும் ஆகும்.

அதிகாரம்பெற்ற தயாரிப்பாளர்கள் :
டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்) பிரைவேட் லிமிடெட்



"என்ன!
வீட்டில்
# அமிர்தாஞ்சனம்
இல்லையா?

**என் மூட்டுவலிக்கு இப்போது என்ன செய்வேன்?"**

எந்த சமயத்திலும் அமிர்தாஞ்சனம் தேவைப்படலாம். ஆகவே, எப்போதும் ஒரு டின் வைத்திருப்பது" நலம். அமிர்தாஞ்சனம் வீட்டில் இருந்தால் கவலைக்கு இடமேயில்லை.




அமிர்தாஞ்சன் லிமிடெட்
14/15 லஸ் சர்ச் ரோடு, மதறாஸ்-4
பம்பாய்-1, கல்கத்தா-1, புது டில்லி-1

JWT/AH/1877

அளித்தான். அவர் நிமிஷத்தில் சன்னமாகக் குறட்டை விடத் தொடங்கினான்.

''கண்ணன் சாப்பிட்டால் என் வயிறு நிறைகிறது. அவன் தூங்கினால் என் களைப்புத் தீருகிறது.''

கல்யாணியின் இந்த அசட்டுப் பெருமை எனக்கு அர்த்தம் ஆகவில்லை. அதைப் பற்றிப் பேசவும் எனக்கு மனம் இல்லை. ''ஸ்டௌ இருக்கிறது. சாதம் மட்டும் நீ வடித்துக் கொள்ளேன். இரண்டு நாட்களாய் நீ சாப்பிடவில்லையாமே!''

''வேண்டாம். பசி எனக்குப் பழக்கமான விஷயம்.''

''கல்யாணி! இந்தப் பத்து வருஷமும் நீ எங்கிருந்தாய்? ஏன் திடீரென்று மறைந்தாய்? உன் கதையை இப்போது சொல்லலாமே!''

''சொல்லாமல் எங்கே போகிறேன்? அகல் விளக்கு இருக்கிறதா?''

''அகல் விளக்கு எதற்கு? இந்தக் கை விளக்கு இருக்கிறதே!''

''இன்று இதுவரை நான் பூஜை செய்ய வில்லை. செய்யாமல் தூங்கவும் முடியாது. ஒரு அகல் விளக்கை ஏற்றிக் கொடுத்து விட்டு நீ தூங்கு. பூஜை முடிந்ததும் உன்னை எழுப்பு கிறேன்.''

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. ஆனால் காரணம் கேட்பதற்கு என்ன இருக்கிறது? பத்து ஆண்டுகளுக்குப் பிறகு அவளைக் காண்கிறேன். அவளுடைய வாழ்க்கை விதி எனக்கு என்ன தெரியும்? அவள் கேட்டபடி அகல் விளக்கை ஏற்றி வைத்தேன். நானு —ஊதுவத்தியையும் அவளிடம் கொடுத்தேன்.

வத்தி மணம் கருள் கருளாகப் பரவி நிறைந்தது. விளக்கின் முன்னால் அவள் பத்மாசனமிட்டு அமர்ந்து கண்களை மூடிக் கொண்டாள். சற்று நேரத்தில் எந்த ஒன் றைக் குறித்து அவள் தியானத்தில் இருந் தாளோ அந்த ஒன்றுடன் அவள் லயித்து விட்டதைக் கண்டேன்.

அவளையே பார்த்துக் கொண்டிருந்த எனக்கு அந்த இரவே விசித்திரமாகத் தோன்றியது. அர்த்தம் அற்றவை என்று நாம் நினைப்பவைகளுக்கு எல்லாம் அர்த் தம் உண்டு என்று அந்த இரவு சொல்லியதோ?

பார்வதியைத் திரும்பிப் பார்த்தேன். மகனை இறுகத் தழுவிக் கொண்ட சுகத்தில் அவள் மெய்ம்மறந்து தூங்கினாள். பையன் அவளைக் கால் அணையாக்கிக் கொண்டிருந் தான். அவளுக்கு விழிப்புக் கண்டு குளிரு கின்ற இந்த இருட்டில் பத்மாசனம் இட்டு உட்கார்ந்துள்ள பெண்ணைப் பார்த்தால் என்ன தோன்றும் அவளுக்கு?

முதலில் அஞ்சுவாள். பின்பு பாதுகாப்புக்கு என்னைத் தேடுவாள்.

கல்யாணி யார் என்று நான் சொன்னதும் பார்வதி என்ன செய்வாள்? இரண்டு குழந் தைகளுக்குத் தாயாகிவிட்ட அவள் என் மேல் சீறி விழுவாள். அவளுக்கு உடைமை உணர்ச்சி அதிகம். நான் அவள் உடைமை.

யார் இந்தக் கல்யாணி? இவ்வளவு உரிமையுடன் — இந்த நடு நிசியில் உறவு கொண்டாடுகிற அவள் யார்?

அவளைத் திரும்பிப் பார்த்தேன். இருட்டை நகத்தால் கீறி வரைந்த கோட்டுருவாகத் தான் அவள் காட்சி அளித்தாள். இந்தக்



''உங்க பையன் இப்ப என்ன பண்றான்?''

''கோட்டு வாத்தியம் பழகிண்டு இருக்கான்.''

''அட! பரீட்சைகளில் தான் 'கோட்டு' என்றால் வாத்தியத்திலே யும் அதுதானா?''

கல்யாணிதான் அந்தக் கல்யாணியா? அல்ல, இவள் வேறு, அவள் வேறு.

அந்தக் கல்யாணி பத்து ஆண்டுகளுக்கு முன் என் வாழ்க்கையில் புகுந்தாள்.

அப்போது நான் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தேன். பக்கத்து வீட்டை விலைக்கு வாங்கிக் கொண்டு அவள் பெற் றோர் வந்தார்கள். முதல் நாள் அவளைப் பார்த்தபோதே காந்த எல்லைக்குள் வந்ததும் வலுக்கட்டாயமாக இரும்பைக் காந்தம் இழுக்கிறதல்லவா? அந்த வலுவுடன் அவளி டம் நான் ஈர்க்கப்பட்டேன். அவளும் என் னிடம் கவர்ச்சியுற்றாள் என்பதை என் பாக் கியமாகவே அப்போது கருதினேன்.

பிறகு என்ன? சொல்லால் சொக்கினோம்; செயலாலும் சொக்கினோம். அவளுடன் பழ கும் வரை உண்பதற்கும் படிப்பதற்கும் உறங்குவதற்கும்தான் உடல் இருக்கிறது என்று நினைத்திருந்தேன். உடல் ஒரு மாயா ஜால மகேந்திர ஜாலப் பேழை. அதில் கோடானு கோடிச் சுகங்கள் மறைந்து கிடக்கின்றன என்பதை அவள்தான் எனக்கு உணர்த்தினாள்; எவ்வளவு அழகாகவும் உணர்த்தினாள்!

மணந்து கொண்டே அவளோடு நான் பழக வில்லை. அவளை மணந்து இன்பத்தைப் பேரின்பமாக்கத்தான் விரும்பினேன். என் னைப் பெற்றவர்களும் அவளைப் பெற்றவர் களும் ஒப்பினார்கள். திருமணத்துக்கு நாளும் குறித்தாகி விட்டது.

ஆனால் கல்யாணம் நடைபெற வில்லை. திடீரென்று கல்யாணி மறைந்து போனாள். எங்கே போனாள், யாருடனாவது போனாளா, ஏன் போனாள் என்ற பல கேள்விகளாக அவள் மறைந்து போய்விட்டாள்.

அவளுடைய மறைவினால் மனமுடைந்த அவள் பெற்றோர் தங்கள் வீட்டை விற்றுக் கொண்டு எங்கோ போய் விட்டார்கள். ஆனால் என்னோடு வருவதாக நான் எண்ணிய இன்பம் எந்தத் திருப்பத்தில் திரும்பியது? ஏன் திரும்பியது? உயிரை மாய்த்துக்கொள் வதற்காக அவள் போயிருப்பாள் என்று நான் நம்பவில்லை. வாழ்க்கை வேட்கையின் குதுகுதுப்பு நிறைந்த சரீரத்தை ஒழிக்க அவள் விரும்ப முடியாது என்பது எனக்குத் தெரி

யாதா? எங்கே மறைந்தாள் என்ற கேள்வியின் பதில் என் பௌருஷத்தையே அவமதித்ததா?

பிறகு என்ன? எனக்குள் அடங்கியிருக்க முடியாமல் பார்வதியிடம் நான் அடங்கினேன். இரு குழந்தைகளுக்கும் தந்தையாகி வளர்ந்துவிட்டேன். கல்யாணியின் குழந்தை போல் உடலிலும் அறிவிலும் ஊனம் உள்ள குழந்தைகள் அல்ல; என் குழந்தைகள் நல்ல அழகு: புத்திசாலிகள்.

அந்தக் கல்யாணிதான் இந்தக் கல்யாணியாக வந்திருக்கிறாள். என்னை அவள் வஞ்சித்ததன் பலனாக — எல்லாவற்றையும் தோற்றுவிட்டு, எதையோ தேடிக் கொண்டு என்னிடமே வந்திருக்கிறாள்.

'அவள் கண் விழிக்க வேண்டும். அவளுடைய பத்தாண்டு வாழ்க்கையை அவள் வாயால் கேட்க வேண்டும் என்று' நான் காத்திருந்தேன்.

❖ ❖ ❖

மழை பலமாகப் பெய்து கொண்டிருந்தது. எங்கும் நிறைந்து விட்ட மழைக் குளுமை என்னை ஆனந்தமாகத் தழுவியது. கண்களில் ஒரு மயக்கம் தெளிந்தது. காலம் சூல் கொண்ட யானை போல் மெதுவாக நகர்ந்தது.

மழையை விடக் குளுமையான ஸ்பரிசத்தால் நான் விழித்தேன். கல்யாணி பக்கத்தில் இருந்தாள்.

"நீயா? கொஞ்சம் அயர்ந்து விட்டேன் கல்யாணி! இந்தப் பத்து வருஷங்களும் உனக்கு எப்படிக் கழிந்தது? எங்கே இருக்கிறாய்?"

அவளுடைய கதையைக் கேட்கும் நேரம் வந்து விட்டதாக நினைத்தேன். ஆனால் என்னுடைய பேச்சு எதுவும் அவள் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை.

"உன் மனைவியையும் குழந்தைகளையும் நான் பார்க்க வேண்டும்" என்றாள் அவள்.

"பார்வதியை எழுப்பட்டுமா?"

"வேண்டியதில்லை. தூங்கும்போதே பார்த்தால் போதும்" என்றவள் உள் நோக்கி நடந்தாள்.

அவர்கள் உறங்கிய இடத்தில் இருந்த விளக்கில் எண்ணெய் வற்றிவிட்டதால் திரி கருகிப் புகையுடன் எரிந்தது. மங்கலுற்ற அந்த வெளிச்சத்தில் கல்யாணியோடு நானும் குனிந்து அவர்களைப் பார்த்தேன். அந்த நொடியில் நானே- விகசித்து என் மனைவியாகவும் குழந்தைகளாகவும் அங்கே தூங்குவதாக எனக்குள் ஓர் உணர்வு.

"நீ அதிர்ஷ்டசாலி" என்றவாறு அவள் கண்ணன் இருந்த இடத்துக்குத் திரும்பினாள். நான் பின்தொடர்ந்தேன்.

"சொல்லு கல்யாணி."

"நான் பட்டணம் போகிற வழியில் தான் இங்கே இறங்கினேன். கையில் பணம் இல்லை. எனக்குக் கொஞ்சம் பணம் வேண்டும்" என்றாள் அவள்.

"அதற்கு இப்போது என்ன அவசரம்? காலையில் தருகிறேனே — உன்னைப் பற்றி?..."

"இப்போதே பணம் வேண்டும். புறப்படுகிறேன்."

"இப்போதா? இந்தப் பேய் மழையில் எங்கே போகிறாய்?"

"ஸ்டேஷனுக்கு. பட்டணம் போகிற எந்த ரயில் வந்தாலும் ஏறி விடுவேன்."

என்னுடைய எவ்விதமான வற்புறுத்தலையும் அவள் கேட்பவளாகத் தெரியவில்லை. "நான் கேட்டதற்குப் பதிலே சொல்லவில்லையே கல்யாணி. முரட்டுக் கணவன், அசட்டுக் குழந்தை, பட்டினி கிடக்கின்ற அவல வாழ்க்கை, இந்தப் பூசை — இவை எல்லாம் என்ன? நீ எங்கே இருக்கிறாய்? இப்போது எங்கே போகிறாய்?"

"நமக்குக் கல்யாணப் பேச்சு வந்த போது எனக்குப் பத்தொன்பது வயது. இப்போது எனக்கு நூறு வயதுக்கும் மேலே ஆகிவிட்டாற் போன்ற மனநிலை வந்துவிட்டது. ஐம்பது அறுபது வருஷங்களில் உடலை வரித்து எடுத்து விட்டேன். இனி உடலே வேண்டாம் என்று முயற்சி செய்கிறேன். என் கதை இவ்வளவுதான். பணம் தருகிறாயா?"

சொல்வதற்குத் தேவையில்லாமல் அவள் சொல்லுக்கும் முன்னால் போய் நின்றாள். நானோ கேள்விகளுக்குப் பின்னாலேயே சோர்ந்துபோய் நின்றுவிட்டேன்.

நான் கொடுத்த பணத்தையும் குடையையும் அவள் வாங்கிக் கொண்டாள். தூங்கிய கண்ணனை இடுப்பில் ஏந்தினாள். தூக்கக் கலக்கத்தில் அவன் இரு கைகளையும் அவள் கழுத்தில் மாலையாய்க் கோத்து அவளோடு ஒட்டிக் கொண்டான்.

"உன்னோடு இந்தக் குழந்தையையும் மழையில் நனைக்க வேண்டுமா?"

"என் உடலில் தோன்றியதன் பலனை இவனும் அனுபவிக்க வேண்டியவன்தானே? கண்ணன் வெறும் பிண்டம். இனிமேல்தான் இவன் முழு உருவத்துடன் பிறக்கப் போகிறான்."

வாசலுக்கு வந்தோம். இடிக்காமலும் மின்னாமலும், மழை பலமாகவும் நிதானமாகவும் பெய்து கொண்டிருக்கிறது. குளிர் காற்றுத் தாவி விழுந்து எங்களைத் தழுவுகிறது. இருட்டு குளிர்ந்து நடுங்குகிறது. வீதி, வீடுகள், மரங்கள், அப்பால் ஆகாசம் எல்லாமே குளிரால் விதிர்விதிர்க்கின்றன. குளிர் என்னை எனக்குள் செருகும் மயக்கத்தில் ஆழ்த்துகிறது.

இடுப்பில் கண்ணனுடன், கல்யாணி தெருவில் இறங்கி, இருளை அளைந்து, மழையை வெட்டி, பூமியை உதைத்துக் கொண்டே நடந்தபோது என் உடலின் ஒரு பகுதியை நானே செதுக்கி இரு உடல்களாக்கி, வீதியில் எறிந்தது போன்ற ஓர் உணர்வு. 'இதுவும் இருக்க வேண்டிய பகுதிதான்; இருக்கட்டும்' என்று நான் நினைக்கிறேன். வாழ்க்கை வேட்கையின் ஆவல்கள் நிறைந்த சரீரத்தை ஒழிக்க அவள் விரும்ப முடியாது என்று நான் நினைத்திருந்தேன் அல்லவா? என் நினைப்பு என்னை ஏமாற்றி விட்டது. அவளோ இனி உடலோடு பிறவி எடுக்கவே வேண்டாம்,-என்று நினைத்து விட்டதாகச் சொல்கிறாள். நான் என் நினைப்பில் தோற்று விட்டேன். அவள் தன் நினைப்பில் ஜெயித்து விட்டாள்.

என்ன குளிர் இது? மழையினாலா இந்தக் குளிர்? மழைதான் எங்கே? வெளியேயா? எனக்குள்ளேயுமா?

நானா இப்படி நினைக்கிறேன்?...

# கிரட்டுப் பால்

## எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

பின் வண்டியிலிருந்து இறங்கி வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கினான் மணி. அரை மைல் தூரம். கால் மணி நேரம். போய்ச் சேர ஆறு மணி ஆகிவிடும். ஆகட்டும்; அவசரம் ஒன்றும் இல்லை. பத்மா அவனுக்காகக் காத்துக் கொண்டிருக்கப் போவதில்லை. அவனோடு வெளியே கிளம்பப் போவதும் இல்லை. பூட்ஸை உதறி விட்டுக் குடையை மாட்டும் சத்தம் கேட்ட பிறகு தான் முன்புறம் எட்டிப் பார்ப்பாள். அன்று வந்த தபால், இரண்டொரு கார்டுகள், ஒரு புத்தகம் — இப்படி எதையாவது கொடுத்து விட்டு உள்ளே போய் விடுவாள். அவன் அவற்றை மேலெழுந்த வாரியாகப் படித்துக் கொண்டிருக்கும் போது, மேஜைமேல் அலாரம் கடிகாரம் மூணு மூணுக்கும் சத்தம் மட்டும் கேட்டுக் கொண்டிருக்கும், அவன் திரும்பும் வரையில்.

அவன் படி ஏறும் சத்தம் கேட்டு நடையில் நின்று கொண்டிருந்தவள் திரும்பிப் பார்த்தாள். 'வந்து விட்டீர்களா?' என்று கேட்கும் பாவனையில் புருவம் உயர்ந்து அமுங்கியது. அவன் பையை ஆணியில் மாட்டிவிட்டு மேஜை மேல் வைத்திருந்த ஒற்றைக் கார்டை எடுத்துப் படிக்கத் தொடங்கினான்.

ஸ்டூலின்மேல் அவள் காப்பியை வைக்கும் சத்தம் கேட்டது.

"இன்றைக்கு நான் டிபன் ஒன்றும் செய்யவில்லை."

பேசிக்கொண்டே டபராவை எடுத்துத் தம்ளரின் மேல் கவிழ்த்து மூடினாள். ஆறிவிடாமல் இருக்க. அவன் ஏன் என்று கேட்கவில்லை.

"ராமநாதன் வீட்டில் குழந்தைக்கு ஆண்டு நிறைவு. போனீர்கள் இல்லையா?"

"நீ?" என்று கேட்டான் அவன்.

மேஜையோட்டில் சாய்ந்தாற் போல் நின்று கொண்டு ஒரு கையை ஊன்றி முகத்தைத் தாங்கிக் கொண்டாள். இன்னொரு கை பூக்கிண்ணத்தின் செதுக்கல்களை வருடியபோது வளையல்கள் தெறித்தன.

"நான் வரவில்லை."

அவன் வற்புறுத்தவில்லை. பேச்சு அப்படியே நின்று விட்டது. தன்னிருக்குள் பேசிய பேசப் போன வார்த்தைகள் சத்தம் இழந்து நின்றன. ஆனால் பொருளில் குழப்பம் இல்லை. அவளுக்கு மனம் இல்லை. ஆட்டத்தில் தோற்றுப் போன குழந்தைக் குரல் அவள் பேச்சில் கேட்டது.

முகத்தைக் கழுவித் தலையை வாரிக் கொண்டு மணி மட்டும் கிளம்பினான். அவன் புறப்படுமுன் அவன் கையில் அவள் ஒரு சிறு பொட்டலத்தைக் கொடுத்தாள். பரிசளிப்பு. அவன் அதை அங்கே பிரிக்கவில்லை. பிரிக்கத் தைரியம் இல்லை. வாசலைத் தாண்டிக் கொஞ்ச தூரம் போனதும் பிரித்துப் பார்த்தான். பால் பருகும் இண்டி. நல்லவேளையாக அவன் அவள் முன்னிலையில் அதைப் பிரிக்கவில்லை. நெஞ்சில் தோன்றியதை முகம் காட்டிக் கொடுத்திருக்கும்.

காகிதத்தை மீண்டும் சுற்றினான்; நினைவுகளை மறைக்க நினைப்பதைப் போல். பத்மா வராததும் நல்லதாய்ப் போயிற்று. ஒரு வேளை அவன் மனத்துள் துடிக்கும் இந்த வெறுமை எழுப்பும் அலுப்பு அவளையும் சிறைப்படுத்தி இருக்குமோ, அவனுடன், அவன் பக்கத்திலேயே, அவ்வளவு தூரம்



அட்டைப் படக்கதை

மௌனமாக நடந்து வந்திருந்தால்? புதை மணலில் காலை வைத்தாற் போல் அந்தத் தவிப்பு அவனை மேலும் வேதனையில் ஆழ்த்தியது; விடுவித்துக் கொள்ள முயலும் ஒவ்வொரு தடவையும்.

ஏதாவது ஒரு பேச்சு சொன்னாலும் போதும் கையைத் தட்டிக் கலீரென்று சிரிப்பாள்; சிரிப்பதற்காகக் காத்துக் கொண்டிருந்தவளைப் போல. அந்தச் சுபாவமே அவனைக் கவர்ந்தது. அவன் வாழ்க்கையில் அவள் நுழைந்த விதமும் அதுதான்.

காரியாலயத்தில் செய்யும் வேலையில் செலவழியும் நேரம் கொஞ்சம்தான். தொட்ட சுருக்கில் முடித்து விடுவான். அப்புறம் ஏதாவது ஒரு புத்தகமும் கையுமாக உட்கார்ந்திருப்பான். சாயங்காலம் வீடு திரும்பும்போது அவன் அந்தப் புத்தகத்தைப் பற்றிப் பேச ஆரம்பிப்பான். அவள் பேச்சும் அதில் கலந்து கொள்ளும்.

பேச்சைப் போலவே நடிப்பிலும் சாமர்த்தியம்தான். அவன் அந்த நாளில் வேலை செய்த விதத்தை, பேசிய பேச்சை அப்படியே நடித்துக் காட்டுவாள். அவளிடம்-அவர்களுக்கு மணமான பிறகு அவனுக்கு அலுக்காத விளையாட்டு அது. அவனும் குபீரென்று சிரித்து விடுவான். பொய்யாகவாவது கோபித்துக் கொள்வது போலக் காண்பிக்க வேண்டும் என்று நினைத்திருந்ததையும் மறந்து. சட்டென்று அவள் கன்னத்தில் குறும்பாகக் கிள்ளி விட்டு உள்ளே மறைந்து விடுவாள்.

மணமானதும் அவள் வேலையை விட்டு விட்டாள். ஒன்பதரை மணிச் சாப்பாடு, டிபன் கட்டிக் கொள்ளும் அவசரம், பஸ்ஸுக்காக 'க்யூ'வில் காத்து நிற்கும் வழக்கம், மாலையில் ஓய்ந்து வீடு திரும்பும் அலுப்பு — எல்லா நியதிகளையும் உதறிவிட வேண்டும் என்று காத்துக் கொண்டிருந்தவளைப்போலத் தோன்றியது அவள் வேலையை விட்டு விட்ட அவசரம். அவனும் அவளிடம் சொன்னதுதான் அது.

அதற்குப் பிறகு வீட்டில் அவளுக்கு நிறைய நேரம் இருந்தது. தோட்டக்காரன் செடிகளை அழகுபடுத்துவதைப் போல், வீட்டை அலங்காரம் செய்ய ஆரம்பித்து விட்டாள். புத்தக ஷெல்ப், கடிகாரம் வைக்கும் மேஜை, பூங்கொத்து வைக்கும் பித்தளைக் கலசம் ஒவ்வொன்றிலும் அவள் கை மெருகு தெரிந்தது. பழைய உடுப்பில் புதிதாகத் தைத்துவிட்டிருந்த பித்தானிலும் சரி, அலங்கோலமாகக் கிடந்த அவன் காகிதங்களை 'பைல்' செய்து பெட்டியில் வைத்திருந்த விதத்திலும் சரி, அவளுக்கு ஒழிவிருந்தது தெரிந்தது; அதில் அவள் அக்கறையும் தெரிந்தது.

அவன் திரும்பக் காத்துக் கொண்டிருந்தவளைப் போல், அவன் வந்ததும் வெளியே கிளம்பி விடுவாள். வீட்டில் அவ்வளவு நேரமும் உட்கார்ந்திருந்த அலுப்போ என்னவோ, எங்கேயாவது போக வேண்டும் என்னும் ஆவல் ததும்பும் அவள் வாசற்படியில் தயாராகக் காத்து நின்று பார்க்கும் பார்வையில். அந்த ஏற்பாடுகளுக்கு அவனுக்கு அரை மணி ஆகி இருந்தால் ஆச்சரியமில்லை. அவனுக்கு அவள் கொடுப்பதென்னவோ ஐந்து நிமிஷங்கள்தாம்.

இருவரும் வீடு திரும்பச் சில சமயம் மணி எட்டாகி விடும். வழியில் மழை பிடித்துக் கொண்டு விட்டால், ஒதுங்கி, பஸ்ஸைப் பிடித்து வந்து சேர இன்னும் நேரமாகி விடும். ஆறிப் போயிருந்தாலும் எடுத்துப் போட்டுக் கொண்டு, பேசியபடி சாப்பிட்டு முடிக்க நேரம் காணாது.

ஓரிரு தடவைகள் ஒவ்வொரு மாதமும் வெளியில் சாப்பிட்டு விடுவதும் உண்டு. நண்பர்கள் அழைப்புக்கு இணங்கி, ஹோட்டலில் தனி அறையில் அமர்ந்து. அவனுக்குப் பிடித்தவைகளை யெல்லாம் பார்த்துக் கொண்டே இருப்பாள்; அவனும் செய்து பார்க்க. ஒரு சமயம் அவர்கள் சாப்பிட்டதை ஓர் அம்சமும் தவறாமல் அப்படியே சமைத்திருந்தாள் வீட்டில். விளையாட்டாக மேஜையை இழுத்துப் போட்டுக் கொண்டு இருவரும் மறுபடியும் அதைப்போலவே



உட்கார்ந்து கொண்டு அனுபவித்தார்கள் அந்த நாடகத்தை.

இருந்தும் அவர்களுடைய பழைய நண்பர்களை அவன் பார்க்கப் போவதில்லை. அவர்கள் வரக் கூடிய நிகழ்ச்சிகளில் கலந்துகொள்வதும் இல்லை. ஏனோ அவனுக்கு அப்படி ஒரு சங்கோஜம். 'போகலாம்' என்று சொல்லி விட்டுக் கடைசியில் ஏமாற்றி விடுவான். "நீ சொன்ன பேச்சைக் காப்பாற்றுவதில்லை" என்று குற்றம் சாட்டுவதைப் போல் அவள் குறைகூறுவாள். அவன் சட்டெனப் பார்த்து விட்டுச் சிரித்துக் கொள்வான். அவனுக்குச் சரியாக அவளும் சிரிக்க வேண்டியதுதான். அவன் முகத்தில் மாறி மாறி வரும் ஒளியும் நிழல்களும் மனத்தில் வரையும் கோலங்களின் கற்பனையில் சிக்கித் தனக்குள் சிந்தித்துக் கொண்டிருப்பாள்.

ஒவ்வொரு செயலிலும், அர்த்தமில்லாவிட்டாலும், ஏதோ ஓர் ஆர்வம் தெரிந்த நாட்கள் அவை. இரவின் பனி, இலேசான காற்றில் சலசலக்கும் இலைகளின் அசைவாடல், செடிக்குச் செடி பறந்து வட்டமடிக்கும் மின்மினி, இருளில் ஒற்றைப் பொறியாக மின்னிக் கொண்டு மணம் நிறைந்த புகை யெழுப்பும் ஊதுவத்தி — இப்படி ஒவ்வொன்றிலும் அவர்களிடையே பங்கிட்டுக்கொள்ள ஏதோ இருந்தது. அதில் ஒரு நிறைவு இருந்ததாகவும் தோன்றியது அப்போது. இல்லையென்று அப்புறம்தான் தெரிந்தது.

நான்கு வருஷங்களுக்குப் பிறகு: இப்போது....

அவன் வீடு திரும்பியபோது சற்று நேரமாகி விட்டது. அவள் அவனுக்குப் பரிமாறி விட்டுப் படுத்துக் கொண்டு விட்டாள். கையைக் கழுவித் துடைத்துக் கொள்ளும் போதுதான் ஞாபகம் வந்தது. அன்று சனிக்கிழமை, அவள் சாப்பிட மாட்டாள். விரதமும் பூஜைகளும் அவள் வழக்கமான காரியங்களில் ஒன்றி விட்டன.

அவன் திறந்த வெளியில் சாய்வு நாற்காலியைப் போட்டுப் படுத்துக் கொண்டான். தூக்கம் வர நேரமாகும். படிப்பில் மனம் ஈடுபடாது. அவள் இன்னும் தூங்கியிருக்க மாட்டாள். அங்கே அவள் அருகில் வந்து உட்கார்ந்து பேசலாம். அவனுக்கு மனம் இருக்காது. கூப்பிட அவளுக்கும் தைரியம் இல்லை.

இரவு அமைதியாக இருந்தது. தூரத்தில் தெரிந்த தார் ரோடு, அதற்கப்பால் அடிவானத்தை ஒட்டி அடர்ந்திருந்த மரங்கள், அப்போதுதான் மேலெழுந்து கொண்டிருந்த மஞ்சள் நிற நிலா, ஒவ்வொன்றிலும் கல் வைத்தாற் போல ஓர் அமைதி. வீட்டெதிரே குட்டையில் மங்கிய நிலவொளி விழுந்த போது, முழுப் பிரகாசமாக இல்லாமல், குருடனின் கண்களைப் போல் அதன் பரப்பில் ஒரு தெளிவில்லாத பளபளப்பு.

இதே சூழ்நிலை, இவற்றை அவர்கள் அனுபவிக்கும் விதமாகத் தோன்றிய அவர்களின் அமைப்பு, இப்போது மாறவில்லை. அவர்கள்தான் மாறிப் போய் விட்டார்கள். தூக்கம் வராமல் புரண்டபடி அவள் விடும் பெருமூச்சு அதற்குச் சாட்சி.

இரண்டு வருஷங்களுக்கு முன்னும் ஒரு நாள். அவன் வீடு திரும்பியபோது அவனுக்கு ஓர் அதிசயம் காத்திருந்தது. ஜன்னல் மாடத்தில் நீல நிற மணிகள் அணிந்து கொண்டு ஓர் அணிற் குட்டி. வாசற்படியில் காதை மடித்துத் தொங்கவிட்டபடி, வெள்ளையும் கறுப்புமாக ஒரு நாய்.

"ஏது பத்மா?" என்று அவன் கேட்கும் வரை அவள் காத்திருக்கவில்லை. அணிலை அந்த அணிலை எடுத்துத் தோள் மேல் விட்டுக் கொண்டு, குறுகுறுப்புத் தாங்காமல் சிரித்த வண்ணம் அவன் எதிரே வந்து நின்று கொண்டாள்.

"நீங்கள் தனியே விட்டு விட்டுப் போய்த் திரும்பி வரும் வரையில் கொட்டுக் கொட்டென்று எப்படி உட்கார்ந்திருப்பதாம்? துணைக்கு வரவழைத்துக் கொண்டேன்!" என்றாள். அணிற்குட்டி அவன் மேல் தாவியது. அவன் ஒதுங்கிக் கொண்ட விதத்தைக் கண்டதும் அவள் 'பக்'கென்று சிரித்து விட்டாள்.

அவைகளுடன் அவளுக்குப் பொழுது சரியாக இருந்தது. அப்படிக் கொஞ்சம் நாட்கள். காலையிலிருந்து மாலை வரை கொட்டைகளும் பருப்பும் உடைத்து வைப்பதும், பழங்களை வாங்கித் துண்டு போடுவதும், தட்டில் பாலை ஊற்றி வைப்பதுமாக அவளுக்கு நேரம் சரியாக இருந்தது.

ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பெயர். அவைகளைப் பெயர் சொல்லி அழைத்துக் குழந்தையைப் போல் விளையாடுவாள். அவனுக்கு மட்டும் அந்தக் காட்சி பொய்ம்மையாகத் தோன்றும். எடுத்துக்காட்ட முடியாத ஏதோ ஓர் ஏக்கம் அந்த நிகழ்ச்சியில் நிழல் விரிப்பது போலப் பிரமை தட்டும். தன்னைத் தானே ஏமாற்றிக்கொள்ள அவள் விளையாடுவதைப் போல் அவனுக்கும் ஒரு சந்தேகம். ஆனால் அவள் மன நிலையைப் பற்றி அவனுக்குச் சந்தேகம் இல்லை. அப்படிக் கொஞ்ச நாட்கள் கழிந்தன.

இரண்டு வருஷங்களாக இருந்தவை அவை. போன வாரம் திடீரென்று வீடு வெறிச்சென்று ஆகிவிட்டது.

"உன் அணிலும் நாயும் எங்கே?" என்று குரலில் நிதானத்தை வரவழைத்துக்கொண்டு கேட்டான் அவன்.

"ராமநாதன் வீட்டுக்கு அனுப்பிவிட்டிருக்கிறேன். அங்கேயே இருக்கட்டும். குழந்தையாவது விளையாடும்."

"உனக்கு?"

அவளிடமிருந்து பதில் இல்லை. அவைகளுடன் விளையாடக் குழந்தைதான் சரி என்று அவள் மறுபடியும் சொல்ல வேண்டியதில்லை. அந்த வீட்டில் அவைகளுக்கு இடமும் இல்லை அதனால். கட்டிக்காட்ட விரும்பாத ஒரு பொருளின் இருப்பிடத்தைச் சொல்லாமலே இருவரும் அறிந்து கொள்வதைப் போல, இருவருக்கும் மனத்தில் வளர்ந்து எழுந்து நின்றது அந்தச் செய்கையின் அர்த்தம்.

அவளுக்கு இனி நேரம் செலவழிவது ஒரு பிரச்சினை அல்ல. செலவழியும் ஒவ்வொரு நாளும் கண் முன் காட்டும் வெறுமைதான் அவள் பிரச்சினை. அவனுக்குத்தான்.

## ஒவ்வொரு தூவுதலிலும் இரட்டிப்புச் சருமப் பராமரிப்பையளிக்கும் டால்கம்




அதைப் போன்றுதான் குடிகூரா டால்கம் இயங்குகிறது—குடிகூரா இலேசாக, மருந்து கலந்திருப்பதால், மிகச் சில டால்க்குகளே இயங்கும் வழியில் உங்களுடைய சருமத்தை சிறப்பாகப் பேணுகிறது.

குடிகூரா வேர்க்குரு தோன்றாமல் தடுக்கிறது. அழற்சியுண்ட சருமத்திற்கு இதமளிக்கிறது. மற்றும் துர்நாற்றத்தையெழுப்பும் வியர்வையை உறிஞ்சி உங்களை நாள் முழுவதும் உடல் பூராவும் பரிமள புத்துணர்ச்சியுடனிருக்க வைக்கிறது. குடிகூரா தூவிக்கொள்ளும் ஒவ்வொரு தரமும் அதன் சேர்த்தியாயிணைந்த ஒரு தனிப்பட்ட சுகந்தம் உள்ளக் கிளர்ச்சியைத் தூண்டுகிறது.

இன்றே ஒரு குடிகூரா டப்பா வாங்குங்கள்—110 வருஷத்திய பரம்பரையையுடையது இந்த டால்கம்.

# குடிகூரா

குடும்ப முழுவதற்கும் ஏற்ற சர்வ-காரிய டால்கம்

குடிகூரா ஆயின்மென்ட் புண்கள், வெளிக் கொப்புளங்கள் மற்றும் இதர சரும அழற்சிகளையும் குணப்படுத்தி விரைவில் சரும ஆரோக்கியத்தைச் சேர்க்கிறது.

NATIONAL C 30162A

---

## குறைந்த பட்சம் ரூ. 5/- லிருந்து திட்டமிட்டு சேமிப்பதற்கு

# பாங்க் ஆப் மதுரை லிமிடெட்

## ரெகரிங் டிபாசிட் திட்டம் சிறந்த முறையில் வகை செய்கிறது

| மாதந்தோறும் செலுத்தும் தொகையான | 12 மாதங்களில் ரூ. நபை | 30 மாதங்களில் ரூ. நபை | 45 மாதங்களில் ரூ. நபை |
|---|---|---|---|
| ரூ. 5 | 61—50 | 159—00 | 245—00 |
| ரூ. 10 | 123—00 | 318—00 | 490—00 |
| ரூ. 15 | 184—50 | 477—00 | 735—00 |
| ரூ. 20 | 246—00 | 636—00 | 980—00 |

ஆக பெருகுகிறது.

உங்கள் அருகாமையிலுள்ள கிளையில் இன்றே திட்டத்தில் சேர்ந்து எதிர்காலத்திற்கு சேமியுங்கள்.

கருமுத்து தியாகராசன்,
தலைவர்

T. K. ராமசுப்பிரமணியம்,
காரியதரிசி.

சில சமயம் அவன் நினைப்பதுண்டு. இருவருக்கும் இடையே நின்ற பிணைப்பு இற்றுப் போகாமல் இருக்க வேண்டுமானால், அவர்களிடையே இருவரையும் சுவாரசியப் படுத்தி வைக்கிறமாதிரி ஏதாவது இருக்க வேண்டும். அவர்களை அதில் ஈடுபடுத்த வேண்டும். ஒரு நிகழ்ச்சி, உறவு, பேச்சு, பொழுதுபோக்கு — எல்லாமே இப்படி ஒரு தேவைதான். ஆனால் அவைகளுக்கெல்லாம் ஓர் எல்லை உண்டு. அதற்குப் பிறகு அவற்றின் இனிமை புளிப்பாக மாறி விடுகிறது. ஒருவரின் விருப்பு வெறுப்புக்கள் மற்றவருக்கு வெகு அருகில் வந்து விடுகின்றன; அதிகமாகத் தெரிந்து விடுகின்றன. அது உறுதிக்கு வழியாக முடியாது. அவர்கள் பலவீனத்தைத்தான் காட்ட முடியும்.

கடற்கரையில் கிளிஞ்சல்கள் பொறுக்கி விளையாடும் குழந்தை அவற்றோடு திருப்தி அடைவதில்லை. கடலுள் கிடக்கும் கோடிக் கணக்கான கிளிஞ்சல்களை எண்ணித்தான் ஏங்குகிறது. அவன் ஏக்கமும் அவனுக்கு அப்படித்தான் தோன்றியது. வாழ்க்கையில் கிட்டிய நினைவுகள் அவனைத் திருப்திப் படுத்த முடியவில்லை. கிட்டாத கனவுகளே அவனை வருத்தின.

ஒரு நாள் அவன் வேலைக்குக் கிளம்பிக் கொண்டிருந்தபோது அவன் கையில் அவள் ஒரு கவரைக் கொடுத்தாள்.

"என்ன பத்மா இது?"

"வேலைக்கு விண்ணப்பம் போட்டிருக்கிறேன். நீங்கள் ஏதாவது செய்ய முடியுமா, பாருங்கள்."

வழக்கம் போல் உடனே அவளைக் கடிந்து கொள்ளவோ, குறும்பாகப் பதில் சொல்லவோ அவனால் முடியவில்லை. பேசாமல் அதை வாங்கிப் பையில் போட்டுக் கொள்ளத்தான் முடிந்தது. தனிமை அவளை முள்ளாய் உறுத்த ஆரம்பித்துவிட்டது. அதற்கு மாற்று அவனிடம் இருந்ததா?

காலை வேளையில் மரத்தடியில் மேய்ந்து நிற்கும் பசு, அதை வளைய வரும் கன்று; சமையல் அறை மாடத்தில் தூங்கும் பூனை, அதன் மடியைக் கவ்வும் சாம்பல் நிறப் பூனைக் குட்டிகள்; கறுப்பு நிறப் பின்னல் மணியும், வெப்புப் பவழ மாலையுமாகக் கை நிறைய ஓலைக் கூடைகளோடு வந்து நிற்கும் குறத்தி; அவள் முதுகில் துணி மூட்டையிலிருந்து எட்டிப் பார்க்கும் குழந்தை.

இப்படி எத்தனையோ காட்சிகள்.

அவள் பார்க்குமுன் அவன் பார்வையில் பட்டுவிடும். அவனைப் பார்ப்பதற்குள் அவள் தலையைக் குனிந்து மும்முரமாகத் தன் காரியத்தில் மூழ்கி விடுவாள். அவர்களது இல்வாழ்க்கை கரித்தணலாகக் கனிந்து கொண்டிருந்தது. தன்னையே சுட்டெரித்துக் கொள்ளும் வெம்மையன்றி அதில் ஒளி எழுப்பும் சக்தி இல்லை.

அவள் தூங்கி விட்டதாக நினைத்துக் கொண்டு அவன் மேஜை விளக்கை ஏற்றினான். டிராயரை மெதுவாக இழுத்தான். அதற்குள் என்னென்னவோ சாமான்கள்; வண்ணத் துணிகள்; அலங்காரப் பொருள்கள். அவற்றின் நடுவே ஒரு மரப் பெட்டி யிருந்தது. அவர்கள் திருமணத்தின் போது வந்த பரிசுப் பொருள்களில் சில அவை.



லோகமான்ய பாலகங்காதர திலகருக்கு அந்த நாளில் மக்களிடையே இருந்த செல்வாக்கு கொஞ்ச நஞ்சமல்ல. தேச பக்தி ததும்பும் அவர் பேச்சுக்களைப் பேரார்வத்துடன் கேட்டனர்; ஆவேசம் பொங்கும் அவரது கட்டுரைகளைக் கருத்தூன்றிப் படித்தனர். ஆகவே அவர் எளிதில் அரசாங்கத்துக்கு எதிரான நடவடிக்கைகளில் மக்களை ஈடுபடச் செய்து விடக் கூடும் என்ற பயத்தில், சர்க்கார் அவரைக் கண்காணிக்கும்படி இரகசியப் போலீஸ் இலாகாவுக்கு குறிப்பு அனுப்பியிருந்தது.

அன்றைய தினத்திலிருந்து திலகரைப் பற்றிய உளவுகளை அறிவதற்காக ஒரு சி. ஐ. டி. போலீஸ்காரர் அவரிடம் சமையற்காரராய் அமர்ந்தார்.

ஆறு மாதங்கள் சென்றன. அந்தச் சமையற்காரர் ஒரு நாள் திலகரிடம் தலையைச் சொறிந்து கொண்டு வந்து நின்றார்.

"என்ன வேண்டும்?" என்று சமையற்காரரிடம் திகைப்புடன் கேட்டார் லோகமான்ய திலகர்.

"எஜமான்! சம்பளம் போதவில்லை. கொஞ்சம் உயர்த்த வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

திலகர் அதைக் கேட்டதும், கடகடவென்று நகைத்தார்.

சமையற்காரருக்கு ஒன்றும் விளங்கவில்லை. "எஜமான்! என்னத்துக்காகச் சிரிக்கிறீர்கள்?" என்று திகைப்புடன் கேட்டார் அவர்.

"நீ சம்பள உயர்வு கேட்பது மிகவும் விசித்திரமாக இருக்கிறது. நான் மாதம் முப்பது ரூபாய் உனக்குக் கொடுக்கிறேன். சர்க்கார் உனக்கு இருபத்தைந்து ரூபாய் கொடுக்கிறது. இன்னும் திருப்தியில்லையா உனக்கு?" என்று கேட்டார் லோகமான்ய திலகர்.

சமையற்காரர் குனிந்த தலை நிமிரவில்லை. அப்பொழுது போனவர் மீண்டும் திரும்பி வரவேயில்லை!



"நான் இந்த ஆபீசில் முப்பது வருஷமா ஒரே இடத்திலிருந்து வேலை செய்கிறேன் சார்!"

"அது உம்ம நாற்காலியைப் பார்த்தாலே தெரிகிறதே!"

பெட்டியைத் திறந்தாள். மூடிய கை பிரிந்ததும் விரித்தெழும் ஜவ்வாது வாசனையைப் போல் நினைவுகள் பொங்கின. ஒரு பீடிங் புட்டி. வெள்ளித் தகடு அடித்த சங்குப் பாலாடை. அப்போது சுற்றிலும் எழுந்த கேலிச் சிரிப்பு, குறும்பான வார்த்தைகள் இப்போது கேட்பது போலத் தோன்றின. அவை நெஞ்சில் கூசித் துடித்தன. சொல்ல வார்த்தை இல்லை. வயிற்றுள் ஜ்வாலை கொழுந்து விட்டுக் கொண்டு கிளம்பிற்று. கண்கள் திடீரென்று மங்கின. அவள் தன்னைத் தாங்கிக் கொள்ளும் உணர்வு கண்டு சட்டென்று திரும்பினான். தனக்குள்ளேயே உடைந்து அவள் விம்மத் தொடங்கினாள்.

"பத்மா! என்ன இப்படி—?"

அவள் உதட்டை அழுத்திக் கடித்துக் கொண்டாள். அவள் பதில் அவன் மனத்தையும் புண்படுத்தும். விளக்கை அணைத்து விட்டு அவளை உட்கார வைத்தான். அவன் தோள் குலுங்கியது.

"கொஞ்ச நாளைக்கு மாறுதலாக நீ எங்கேயாவது போய் விட்டு வா."

அவள் மறுக்கவில்லை.

இரண்டு வாரங்கள் ஆகியிருக்கும். அவள் தன் சகோதரியிடம் போய் விட்டாள். அவனுக்கு அதனால் ஆறுதல் ஒன்றும் இல்லை. அவளுக்குச் சற்றுத் திருப்தி ஏற்படுமானால் போதும். அன்பைக் கையில் வைத்துக் காட்ட முடியாது; ஒரு பேச்சில், பார்வையில் அது மின்னி மறையலாம்; ஆனால் அது வாழுமிடம் பார்வைக்குத் தெரியாது. உடம்பில் பட்டு எழும் வலியும் சிலிர்ப்பும் எலும்பளவில் மறைந்து போகலாம்; உணர்ச்சி அதற்கு அப்பாற்பட்டது; இரவில் தன்னந்தனியாய் அவள் நின்ற அந்தக் காட்சி அவன் மனத்தை விட்டு அகலவில்லை. அந்தத் துயரத்தைத் துடைக்கும் வலிமை அவனுக்கு இல்லையா? அவள் அப்படித் தனித்து நிற்பானேன்? ஏங்கி உருகித் தவித்துக் கொண்டு?....

பத்மாவுக்கு வேலை கிடைத்து விட்டது. ஒரு வாரத்துக்குள் வேலையில் சேர வேண்டும். காரியாலயத்திலிருந்து அப்படியே தந்தி கொடுத்து விட்டு வீட்டுக்குக் கிளம்பினான்.

இரண்டு நாட்களில் அவள் வந்து விடுவாள். அவன் வாழ்க்கையில் இது இன்னொரு திருப்பம். ஒன்பதரை மணிக்குக் கதவைப் பூட்டிக் கொண்டு, ஆளுக்கொரு திசையாகக் கிளம்ப வேண்டும். எட்டுமணி நேரம் அப்படிப் பிரிந்திருந்தது அவர்களுக்குப் புதிதில்லை. ஆனால் இது வேறு விதம். சட்டென்று வாழ்க்கை களை இன்றிச் சப்பிட்டுப் போய் விட்டது. இனி அதில் எந்தச் சோபையும் இல்லை.

படியில் காலை வைத்ததும் நாய் காலைச் சுற்றிச் சுற்றி வந்தது. படிக்கட்டில் அவனின் முன்னங்காலைத் தூக்கிக் கொண்டு விழித்தது. உள்ளே பத்மா வேலைக்காரியுடன் பேசும் குரல் கேட்டது. அவள் எப்போது திரும்பினாள்? முன்பின் தகவல் இல்லாமல் எப்படி வந்து சேர்ந்தாள்? ஒரு கடிதம் கூட இல்லையே?

அவன் பூட்டைக் கழற்றும் சத்தம் கேட்டு அவள் வந்து விட்டாள். கையில் சின்ன வெள்ளித் தட்டு இருந்தது.

"என்ன அது?"

"திரட்டுப்பால். கடையிலிருந்து கொண்டு வந்தேன்."

கண்களைச் சிமிட்டிக் கொண்டாள். சிரிப்பு குரலில் குமிழியிட்டு நின்றது. அந்தப் பார்வையில் சுடர் ததும்பியது.

அவளும் நாயும் திரும்பி வந்து விட்டதைப் போல் இந்த மாறுதலும் நல்லதுக்குத்தான்; சொல்லாமலே ஏதோ ஓர் அர்த்தம் தெரிவது போல.

"நானே உன்னிடம் கேட்டு வாங்கிக் கொள்ள விருந்தேன். ஒரு நல்ல செய்தி!"

"என்ன?" என்று கேட்டபடி சட்டென்று அவள் வலது கையை இழுத்துப் பிரித்தாள். அங்கையில் திரட்டுப்பால் கட்டியாக விரைத்தது.

"உனக்கு வேலை கிடைத்து விட்டது!"

தட்டைக் கீழே வைக்காமல் அவளை மலர விழித்துப் பார்த்தான் அவன். கண்களில் ஒளிவட்டம் தெரிந்தது.

"நான் வேலைக்குப் போவதாக இல்லை."

அவள் அப்படி மறுத்ததும் அவனுக்குப் புரியவில்லை. கையிலிருந்ததை எடுத்து வாயில் இட்டுக் கொள்ளவும் இல்லை. அவள் அருகில் உட்கார்ந்து கொண்டாள். விழிக்குள் விழி தெரியும் பார்வை.

அவன் கையைப் பற்றி அதன் பிடியில் தன்னைச் சேர்த்துக் கொண்டாள். கண்களில் அசதி தெரிந்தது.

"எனக்கு வேறு வேலை கிடைக்கப் போகிறது!" என்றாள் அவள்.

அவள் பதில் சுருக்கமாக இருந்தது. ஆனால் அதன் பொருளுக்கு அளவில்லை. முகத்தில் பழைய குறும்பு மின்னியது. அவன் அவளைக் கேட்க வேண்டியதில்லை. பால் திரட்டு அடைந்து விட்டது.

அவள் பெண்மை நிறைவெய்தி விட்டது.

நாள் முழுதும்
இளமை தரும்
ப்ரின்டெட்
பாப்ளின்கள்



# மபத்லால்

க்ரூப்

நியூ ஷர்ராக் (ஷர்ராக்), அஹமதாபாத். நியூ ஷர்ராக், காதியாவாத். ஸ்டான்டர்ட், பம்பாய். ஸ்டான்டர்ட் (நியூ சைனா), பம்பாய். ஸ்டான்டர்ட், டிவாஸ். ஸஸ்ஸூன், பம்பாய். ஸஸ்ஸூன், (நியூ யூனியன்), பம்பாய். சூரத் காட்டன், சூரத். மபத்லால் பைன், கல்யாணி. ககல்பாய்ஜூட், கல்கத்தா. இந்தியன் டைஸ்டப், பம்பாய்.



# ஜோதி மாப்பிள்ளை

சாமா

''வயசு காலத்திலே உன் விசாரம் நம்மால் தாங்க முடியலேடி யம்மா!'' என்று பங்கஜம்மை தன் மகள் அஞ்சலையிடம் தொடங்கும் போதே எதிர் வீட்டு மூக்கம்மாள் உள்ளே நுழைந்தாள்.

''அதென்ன பங்கஜம்மா! அப்படி ஒரு சொல்லு சொல்லிட்டே! என்ன குறைச்சல் நம்ம அஞ்சலைக்கு? அவளைவிடக் கறுப்பான பொண்களுக்குக் கலியாணமாகலியா? அவளை விடப் பருமனா யிருக்கிறவங்கதான் கன்னிமாடத்துலே சேர்ந்துட்டாங்களா?'' என்றாள் மூக்கம்மாள். அவள் அனுதாபம் தான் சொல்கிறாளா அல்லது பெண்ணின் பருமனையும், நிறத்தையும்தான் குத்திக் காட்டுகிறாளா என்று பங்கஜம்மைக்குப் புரியவில்லை.

''எதுவானாலும் சரி! சீக்கிரமே அஞ்சலை மாலையும் கழுத்துமா உன்னைக் கும்பிட்டுத் தான் போகிறாள்'' என்று அவள் சொன்னது பங்கஜம்மைக்குக் குளிர்ச்சியாயிருந்தது.

''போகிறது, போ! காலை வேளையில் நல்ல வார்த்தை சொல்லிட்டு வந்தே! உன் வாக்கு நிச்சயம் பலிக்கும்!'' என்றாள் பங்கஜம்மை.

''என் வாக்கை ஏன் பங்கஜம்மா சொல்றே? தீர்க்கதரிசன வாக்கு சொல்லத் தான் ஒரு சிங்கப்பூர் ஆருடக்காரர் ஆற்றங் கரை மரத்தடியில் வந்திருக்கிறாரே! அவரைப் பார்த்துப் பெண் கலியாணம் எப்ப ஆகும்னு கேளு.... நம்ம கனகா இருக்காளே, அவள் பெண்ணுக்கு இந்த ஆருடத்தில் பார்த்துத் தான் ஒரே வாரத்தில் கலியாணம் நிச்சய மாச்சு. மாப்பிள்ளை கிழக்கே இருந்து வரு வான் என்றார் ஜோஸ்யர் ஐயா. அப்படியே வந்து விட்டான்.''

''அதென்னடி அதிசயம்? எனக்குத் தெரி யவே தெரியாதே'' என்று வியந்தாள் பங்கஜம்மை.

''எல்லாமே அதிசயமாகத்தான் இருக் குது. நாம் ஜோஸ்யம் கேட்டவுடன் ஜோஸ்ய ரையா ஒரு தீபத்தை ஏற்றி அந்த ஜோதியைப் பார்க்கிறாராம். அதுக்குள்ளே அவருக்கு மாப் பிள்ளை முகம் தெரியுதாம்! அது எப்படி இருக்குதுன்னு வர்ணிக்கிறாரு. அப்புறம் மாப்பிள்ளை இருக்கிற இடத்தையும் கலியா ணம் எப்ப ஆகும்கிறதையும் சொல்றாரு. அப்படியே நடக்குது'' என்றாள்.

அப்புறம் கேட்பானேன்? பங்கஜம்மை உள்ளே ஓடித் தேங்காய், பழம் எல்லாம் தயார் செய்யத் தொடங்கினாள். பெண் அஞ்சலை தன்னைச் சிங்காரித்துக் கொண் டாள். ''அம்மா, அஞ்சலை! சிங்காரித்துக் கொண்டது போதும். கிளம்பு! இப்ப ஜோஸ்யம்தானே பார்க்கப் போகிறோம்? மாப்பிள்ளையையா நாம் பார்க்கப் போகிறோம்?'' என்றாள் பங்கஜம்மை.

''போம்மா! அந்த ஜோதியிலே தான் அவரு தெரிவாருன்னு சொன்னாங் களே. அவரு ஜோதி யிலேயிருந்து என்னைப் பார்த்தால் நான் நல்லா இருக்க வேண்டாமா?'' என்று சொல்லி நாணிக் கொண்டாள் அஞ்சலை.

எல்லாரும் ஆற்றங்கரையை அடைந் தார்கள். மூக்கம்மாள் பங்கஜம்மை வந்த விஷயத்தை ஜோஸியரிடம் சொன்னாள்.

ஜோஸியர் கண்களை மூடிக் கொண்டு ஏதோ முணுமுணுத்தார்.

''பேஷ்! கவலைப்படாதேயம்மா. உன் மகள் வாழ்வு மலரும் நேரம் நெருங்கிவிட் டதுன்னுதான் சொல்லுது. தை மாசத்தில் கலியாணம் நிச்சயமாயிடும். தீபத்தைப் பார்த்துத் தீர்மானமாகச் சொல்லிடறேன்'' என்றார் ஜோஸ்யர்.

எல்லாருடைய முகத்திலும் ஆனந்தம் 'தை, தை' என்று தாண்டவமாடியபோது அஞ்சலை மட்டும் விசாரமாக இருந்தாள்.

''ஏனம்மா, மாப்பிள்ளை வருவது சந்தோஷ மில்லையா உனக்கு?'' என்றார் ஜோஸ்யர்.

''இல்லீங்க! என் துரதிர்ஷ்டம் நீங்க தீபத் திலே பாக்கறவருக்கும் என்னைப் பிடிக்கா விட்டால்?'' என்று வினவினாள் அஞ்சலை.

''அட, ராமா! உனக்கு என்னம்மா குறைச்சல்! நீ நல்லாத்தானே இருக்கே... எது எப்படி யிருந்தாலும் நான் ஜோதியிலே பாக்கற ஆளு உன்னைக் கலியாணம் செய்து கொள்ளாமல் இருக்க முடியாது'' என்று சொல்லியபடியே தீபத்தை ஏற்றினார். பிறகு ஜோதியைக் கூர்ந்து கவனித்தார். வர வர, ஜோஸ்யர் முகம் பிரகாசித்தது. ''சபாஷ்! தாரக் கோடியில் மாப்பிள்ளை தெரிகிறான்...''

''தெரிகிறானா? எப்படி இருக்கான்க?'' என்று ஆர்வக் குரல்கள் எழுந்தன.

''இருங்க, இருங்க! கிட்ட வரான்... முகம் தெரிகிறது. பேஷ்! நல்லா இருக் கானே. சுருட்டை கிராப்பு, களையான முகம், கழுத்தில் மைனர் செயின், சில்க் ஷர்ட்டு.... இல்லே, டெரிலின். இருங்க, இன்னும் கிட்ட வந்துட்டான். இப்ப முகம் நன்றாகத் தெரி யறது. அட, இதென்ன தீபமா? இல்லாட்டா நீர்க் கண்ணாடியா? என் முகமில்லே தெரியுது?'' ஜோஸ்யர் மூர்ச்சித்துக் கீழே சாய்ந்தார்.

அவர் இப்படி நேருமென்று கண்டாரா? அஞ்சலையின் அழகுக்குக் குறைவில்லை என்றும், தான் ஜோதியில் பார்ப்பவன் தப்பாமல் மணமகனாவான் என்றும் கூறியாயிற்று. ஜோதியில் தெரிவது யார் என்றும் வாய் விட்டுச் சொல்லியாயிற்று. இந் நிலையில் அவர் மூர்ச்சை யடையாமல் என்ன செய்வார்?



# பத்தினிக்கோட்டம்

ஜெகசிற்பியன்

அத்தியாயம் இருபத்தேழு

## சிறைப்பட்டான் ஓவியன்!

உயரக் கிளையில் கண்ணுக்கு எதிரே பழுத்துத் தொங்கும் கனியை ஒரே கல்லில் அடித்து வீழ்த்தி விடுவதும் உண்டு; ஐந்தாறு கல்லெறிக்குப் பின் அம்முயற்சி கைகூடுவதும் உண்டு. சில சமயம் குறி வைத்து எறிந்த கல் குறித்த பழத்தை விட்டு விட்டு, எங்கோ இலை மறைவில் தொங்கும் பிஞ்சை அடித்துச் சாய்ப்பதும் உண்டு. இப்படித்தான் ஏதேனும் ஒரு விஷயம் பற்றிய முடிவை எடுக்க முயலும் மனித சிந்தனையும் செயல்படுகிறது எனலாம். சில சமயம் அது அந்த முடிவை நேராகவே போய்த் தொட்டுக் காட்டி விடும்; சிலபோது பல முறை முயன்று அதன் பிறகே சரியான முடிவை ஸ்பரிசிக்கும். இன்னும் சில சமயமோ, மெய்யான முடிவு அருகிலே இருந்தாலும் அதை விட்டுத் தாண்டிச் சென்று அதற்குப் புறம்பான முடிவு ஒன்றைத் தேடி அதையே இறுகப் பற்றிக் கொள்ளும். குறித்த இலக்கை நோக்கி எறியப்படும் கல் இன்னோர் இலக்குக்குச் சென்றுவிடக் கையின் தவறான அசைவோ கண்ணின் கோளாறான குறி வைப்போ காரணமாய் அமைவது போல, மனித மனத்தில் அவ்வப்போது விளையும் சில விந்தையான மாற்றங்களினால் ஆற்றல் மிக்க சிந்தனைகூட அதற்குரிய முடிவைத் தொடத் தவறி அப்பால் செல்லக் காரணமாகிறது.

அத்தியந்தகாமன் என்ற பெயரோடு அந்த இலவந்திகைப் பள்ளிக் கூட மண்டபத் தூணிலே சோர்வுற்றுக் கண் மூடிச் சாய்ந்திருந்த பல்லவ மன்னன் பரமேசுவர வர்மன் தன்னையே ஓவியமாகத் தீட்டி வைத்திருந்ததைப் பார்த்து அதிர்ச்சியடைந்தவளாய் நின்று கொண்டிருந்த ஆந்திர இளவரசி உத்தமசீலியின் சிந்தனையும் இப்போது அப்படித்தான் இலக்கு விட்டு இலக்குப் பாய்ந்தது.

'தலை மறைவாக இருக்கும் பல்லவ மன்னனின் உருவ ஓவியத்தை வரைந்து கொடுக்கும்படி கேட்டதற்கு இவன் ஏன் தன்னையே ஓவியமாகத் தீட்டி வைத்திருக்கிறான்?' என்று அவள் சிந்தனை எழுப்பிய சரியான வினவுக்கு, அவளது மனம் தேடித் தந்த விசித்திர விடை இது: 'அன்று நான் அந்த யோசனையை வில்வேலியிடம் கூறிய போது, பல்லவ நாட்டுக் கலைஞர்களின் ராஜ பக்தியையும் தேச பக்தியையும் அறியாமல் சொல்லப்படும் யோசனை இது என்று அவர் சொன்னது எவ்வளவு சரியாகி விட்டது! இல்லையானால், இவ்வோவியக் கலைஞன் இவ்வாறு செய்யத் துணிவானா? ஒளிந்து திரியும் பல்லவ மன்னனைக் கண்டு பிடிப்பதற்காகச் செய்யப்பட்ட இந்த முயற்சியை எத்தனை எளிதாக இவன் தகர்த்தெறிந்து விட்டான்! தன் நாட்டு மன்னனைக் காட்டிக் கொடுக்க முடியாதென்று வாய்ப்பேச்சில் அல்லாமல் செயலின் மூலமே தெளிவாகத் தெரிவித்து விட்டானே! இதனால் தன் உயிருக்கு ஆபத்து நேரும் என்பதை அறிந்திருந்தும் இப்படிச் செய்யத் துணிந்திருக்கிறானென்றால்,



இவனுடைய தேசபக்தியும் இராஜ பக்தியும் எத்தனை தீவிரம் வாய்ந்தவையாக இருக்க வேண்டும்! அத்துடன், தன்னையே ஓவியமாகத் தீட்டிக் காட்டும் அளவுக்குத் திறன் பெற்ற இவன், இந்தக் கலையிலே எத்தனை விரிந்த ஞானம் படைத்தவனாய் விளங்க வேண்டும்!'

அதிர்ச்சி நீங்கிய அவள் அவனை ஆச்சரியத்துடன் திரும்பிப் பார்த்தாள். உலகையெல்லாம் வென்று வந்த ஒரு மாபெரும் வீரனைப் பார்ப்பதுபோல், மகத்தான சத்தியம் ஒன்றைக் காக்கும் பொருட்டுத் தன் இன்னுயிரையே பலியிட்டுக் கொள்ள முன்வந்த ஒரு தீரமிக்க தியாகியைத் தரிசிப்பதுபோல் பார்த்தாள் அவள். இதற்குமுன் அவனைப் பற்றி அவளது மனத்தில் ஏதோ ஒரு புதுமை வாய்ந்த இனிய கவர்ச்சிதான் உருவாகியிருந்தது. ஆனால் இப்போதோ அந்த உணர்ச்சி மயமான கவர்ச்சித் தன்மை பல்வேறு வடிவங்களாகக் கிளை பிரிந்து அவை ஒவ்வொன்றும் அவள் உள்ளத்தின் அடியாழம் வரையில் வன்மையும் வனப்புமாக வேரூன்றிச் செல்வதை அவளே நன்கு உணரலானாள். அது மட்டுமின்றி, அந்தப் புனித வடிவங்கள் அனைத்தும் ஜன்ம ஜன்மாந்தரத்துக்கு முன்பிருந்தே தன்னுள் தோன்றித் தொடர்ந்து வருவதாகவும், அதனை இந்நாள்வரை அறியாமலிருந்து இன்று தான் திடீரெனத் தெரிந்து கொண்டது போலவுமான ஒரு திகைப்பில் ஆழ்ந்தாள் அவள். இவ்விந்தை நிலைக்கு உள்ளாகிய அவள் மனத்திலே, தான் ஒரு யுவராணி என்ற செருக்கோ ஒரு மாபெரும் சக்கரவர்த்தியின் தம்பி மகள் என்ற மமதையோ சிறிதுமில்லாமல் போனதன்றி, அவன் ஓர் அடிமை நாட்டுப் பிரஜை என்ற இழிவு எண்ணமும், ஆதரவற்ற ஓர் அநாதைக்கலைஞன் என்ற அலட்சிய நினைப்பும் கூட அற்றுப் போயின. இதனால் அவளையுமறியாமலே அவன் பார்வையில் ஒரு பக்தியும், பரிவும், வினயமும், கனிவும் பரிமளித்து வழிய, அவ



வது நெஞ்சப் பிராந்தியத்திலே ஒரு விதமான பெருமையும் பூரிப்பும் நிரம்பிச் சேர, நன்றாக நிமிர்ந்து அவனைப் பார்த்தாள் அவள்.

இப்படித் தன்னை மறந்து பார்த்துக் கொண்டிருந்த உத்தமசீலி, ஏனோ சட்டென்று திரும்பினாள். 'ஆமாம்; இப்போது வில்வேலி இங்கு வந்துவிட்டால் — இந்த ஓவியத்தை அவர் பார்த்து விட்டால் — இவனுடைய கதி என்னாகும்?'

அவன் அடையக் கூடிய அந்தப் பயங்கரக் கதிக்குத் தானே ஆட்பட்டு விட்ட மாதிரி நடுங்கித் துடித்த அவள், சிறிது நேர சிந்தனைக்குப் பின் ஏதோ ஒரு திடமான முடிவுக்கு வந்தவளாய்ச் சரேலெனப் பாய்ந்து போய், சட்டத்தில் பொருத்தியிருந்த அவ்வோவியச் சீலையை வெடுக்கென்று பிடுங்கி அதை வேகமாகச் சுற்றிக் கையில் வைத்துக் கொண்டு திகிலுடன் அங்குமிங்குமாய்த் திரும்பிப் பார்த்தாள். பிறகு ஒருவாறு அமைதியடைந்த அவள், மீண்டும் அவனை நோக்கித் தன் பார்வையைச் செலுத்தினாள்.

இன்னமும் அவன் அதே நிலையில் தான் களைத்துக் கண் மூடிச் சாய்ந்திருந்தான். கோடானு கோடி மானிட உருவங்களைப் படைத்துப் படைத்துச் சலித்துப் போன பிரமன், அந்தச் சலிப்பைப் போக்கிக் கொள்வதற்காக, தன் தந்தையின் வடிவத்தையே செதுக்கி யெடுத்துக் கொண்டு வந்து இந்தக் குடை மண்டபத்தில் சாய்த்து வைத்து விட்டுப் போயிருக்கிறானோ என்று சந்தேகிக்கும் விதமாக அத்தனை சுந்தரப் பொலிவோடு விளங்கினான் அவன்.

அவனைப் பார்க்கப் பார்க்க உத்தமசீலியின் உள்ளம், பூரண சந்திரனைக் கண்டு பொங்கி யெழும் கடலைப் போல் பூரித்து விம்மிப் புளகிதமடைந்தது. கந்தர்வ லோகத்தில் கடைந்தெடுத்த ஜீவப் பிரசாதத்தைத் தன் கண்களாலேயே உண்டு முடித்தவள் போன்ற இன்பக் கிறக்கத்தினால் தளர்ச்சியுற்றுத் துவண்டு நின்ற அவள், அசைந்தாடி நகரும் பொன் விளக்குப் போல் அந்த மண்டபத்தை நோக்கித் தயங்கித் தயங்கிச் சென்றாள்.

சலனமற்ற சயனத்தில் ஆழ்ந்திருப்பவன் போலத் தூணிலே சாய்ந்திருந்த அவனை, அருகில் நெருங்கி உற்றுப் பார்த்த அவளுக்கு, அவனுடைய விசாலமான நீண்ட நெற்றியை ஸ்பரிசிக்க வேண்டுமென்ற ஒரு விசித்திர ஆவல் எழவே, மெல்லக்

குனிந்து தன் பூங்கரத்தை நீட்டியவன் சட்டென்று பின்னால் நகர்ந்தான். அவள் முகம் வெட்கத்தால் குப்பென்று சிவந்தது. அத்துடன் ஒரு பயபக்தியான உணர்ச்சியும் தோன்றவே, அவனைத் தன் கரங்களால் தீண்ட அன்றி, தனது கூந்தலிலே சூடியிருந்த புத்தம் புதுப் பொன்னலரிப் பூவொன்றை எடுத்து அதன் மென்மையான இதழ்களால் அவனது வெண்ணீறணிந்த நெற்றியை இதமாக வருடினாள். அப்போதும் அவன் உணர்வு பெறாமல் கண்ணயர்ந்தே கிடந்தான்.

உத்தமசீலியின் செவ்வதரங்களில் ஒரு குறுநகை தவழ்ந்தது. தன் சிரத்திலிருந்து எடுத்த மலரை அவனுடைய பாதங்களில் வைத்து, மீண்டும் அதைச் சிரத்திலேயே சூட்டிக் கொண்டு அங்கிருந்து சற்றுத் தள்ளிப் போய் நின்ற அவள், ''ஓவியக் கலைஞரே! உறங்கியது போதும்; எழுந்திருக்கலாம்!'' என்றாள் இனிமை சேர்ந்த குறும்புக் குரலில்.

அவன் மெல்லக் கண் திறந்தான். தன்னைச் சுற்றி என்ன நிகழ்ந்திருக்கிறது என்பதை அறிய முயலும் பாவனையில் அமைதியாகப் பார்வையைப் படர விட்டவாறு எழுந்தான். தான் தீட்டி வைத்திருந்த தன் உருவ ஓவியம் சட்டத்திலிருந்து நீக்கப்பட்டிருப்பதையும், அந்த இளவரசி உத்தமசீலியின் கையிலே அது சுருண்டு இருப்பதையும் கவனித்த அவன் முகத்தில் ஓர் அழகிய புன்னகை மலர்ந்தது. ''மன்னிக்க வேண்டும்! எனக்கு இட்ட பணியைச் சரிவர நிறைவேற்றியிருக்கிறேனா என்ற சிந்தனையில் ஆழ்ந்திருந்ததால், இங்கு இளவரசியார் வந்ததை நான் கவனிக்கவில்லை.''

முகத்தில் பொய்யான மிடுக்கையும், கண்களில் போலியான செருக்கையும் தோற்றுவித்துக் கொண்டு நிமிர்ந்த உத்தமசீலி அவனை அலட்சியமாக ஏறிட்டு நோக்கினாள். ''அப்படியாயின் நாங்கள் இட்ட பணியைச் செவ்வனே செய்து முடித்திருப்பதாக எண்ணமோ ''

''ஆமாம்; உண்மையை உபாசித்து ஒழுங்காகவே என் காரியத்தை நிறைவேற்றியிருக்கிறேன்.''

அவள் அவனை வியப்புடன் உற்றுப் பார்த்தாள். பிறகு கலகலவெனச் சிரித்துக் கொண்டே, ''மெத்த மகிழ்ச்சி! நீங்கள் இங்கிருந்து போகலாம்!'' என்றாள் துடுக்கான குரலில்.

'' போக வேண்டுமா....? எங்கே போவது?'' என்று கேட்டான் அவன்.

"இருந்து வந்த இடத்துக்குத் திரும்பிப் போகலாம் என்கிறேன்."

"நான் ஆற்றிய பணிக்குப் பரிசு பெற வேண்டுமே!"

"என்ன பரிசை நீங்கள் எதிர் பார்க்கிறீர்கள்?"

"அதிகபட்சமாக ஒரு கழுமரம்! அல்லது குறைந்தபட்சமாக ஒரு காராக் கிருக வாசம்!"

அவன் மிகமிக அமைதியாகவே இவ்வாறு சொன்னான். ஆனால் உத்தமசீலியோ இதைக் கேட்டு நடுங்கித் துடித்து விட்டாள். "போங்கள்! இங்கிருந்து சீக்கிரம் போய் விடுங்கள்!" என்று கழுத்து நெரிபட்ட குயில் போல் திடீரெனக் கூவினாள் அவள்.

அத்தியந்தகாமன் அவளை ஆச்சரியத்தோடு புருவங்களை உயர்த்திப் பார்த்தான். "இது ஆந்திர இளவரசியாரின் கட்டளையா? அல்லது சளுக்கியத் தளபதி வில்வேலியின் உத்தரவா?"

"ஓர் அடிமையின் வேண்டுகோள் இது! இங்கிருந்து உடனே போய் விடுங்கள்!"

அவன் அவளை முதன் முறையாகத் தன் முழுப் பார்வையையும் செலுத்தி நோக்கினான். அந்தக் கம்பீரக் களை பொருந்திய குளிர்ந்த நோக்கை எதிரிட இயலாமல் சில்லிட்டுத் தலைகுனிந்தாள் உத்தமசீலி.

ஒரு நீண்ட பெருமூச்சுடன் நிமிர்ந்த அவன், மண்டபத்தை விட்டுக் கீழே இறங்கிச் செல்ல முற்பட்டான்.

"சற்று இருங்கள்! ரதத்துடன் ஆட்களை அனுப்பி வைக்கிறேன்; வந்தவாறே போய்ச் சேருங்கள்!" என்று படபடத்தாள் உத்தமசீலி.

பூவைப் பார்ப்பது போன்ற ஒரு புனிதப் பார்வையுடன் அவளை நோக்கித் திரும்பி, "நான் தனியே செல்ல விரும்புகிறேன்! இளவரசியாருக்கு அதில் தடையேதும் இல்லையே?" என்று அமைதியாக வினவினான் அத்தியந்தகாமன்.

மிரட்சியுற்ற அவள் மௌனமாக நின்றுகொண்டிருக்கவே, அவன் மேலே நடக்கலானான்.

மீண்டும் எதையோ நினைத்துக் கொண்டவள் போல் சடாரென்று தாவி அவன் முன்னே ஓடி நின்றாள் உத்தமசீலி. "ஒரு விஷயம்......" என்று தயங்கி இழுத்தாள். பிறகு சற்று செருக்குடன் தலைதூக்கி ஒயிலாக அவனைப் பார்த்தவாறு, "நீங்கள் இப்போது மரண தண்டனையிலிருந்துதான் தப்பிச் செல்கிறீர்களே தவிர, சிறைத் தண்டனையிலிருந்து தப்பவில்லை! இது உங்கள் நினைவில் எப்போதும் இருக்கட்டும்!" என்று வீணை முரல்வது போன்ற இனிய குரலில் கூறினாள்.



"சிறைவாசமா?.... எனக்கா?" என்று கடு மாற்றத்துடன் கேட்டான் அத்தியந்தகாமன்.

"ஆமாம்; இதோ, இந்தச் சிறையில்!" — அழகோவியமாய் நின்ற ஆந்திர இளவரசி உத்தமசீலி, தன் காந்தள் மலர் விரலால் தனது நெஞ்சகத்தையே அவனுக்குச் சுட்டிக்காட்டி விட்டு இலவந்திகைப்பள்ளி நோக்கி மானெனத் துள்ளி ஓடினாள்.

பன்னீர்ப் பொய்கையில் மூழ்கி எழுந்து பனிச்சாரலில் வெடவெடத்து நிற்பது போல் நின்று அவளையே பார்த்துக் கொண்டிருந்த பரமேசுவரவர்மன், மெய்யாகவே தன் உடலை ஏதோ ஒரு கனத்த இரும்புச் சங்கிலியால் பிணைத்துக் கட்டி விட்டாற் போன்ற பார உணர்ச்சியுடன் தலை குனிந்தவாறு அங்கிருந்து வெளியேறினான்.




அத்தியாயம் இருபத்தெட்டு

## இருளில் ஒரு வெளிச்சம்

இலவந்திகைப் பள்ளியின் மேன் மாடத்துக்கு வந்து சேர்ந்த இளவரசி உத்தமசீலி, அங்கு இருப்புக் கொள்ளவே இயலாமல் தவித்தாள். தான் எடுத்து வந்த ஓவியச் சீலையைப் பிரித்துப் பார்ப்பதும் சுருட்டி வைப்பதுமாகச் சிறு பொழுதைக் கழித்த அவள், சட்டென்று எழுந்து சாளரத்துக்கு அருகில் போய் நின்று தொலைதூரத்துக்கு அப்பால் தன் பார்வையை வீசினாள்.

மாலைப் போது மங்கி வரும் அந்த நேரத்தில், பல்லவபுரத்திலிருந்து ஆலம்பாக்கம் வழியே பெருவள நல்லூர் செல்லும் சாலையில், தன்னந் தனியாக அவ்வோவியக் கலைஞன் சென்று கொண்டிருப்பது கனவுக் காட்சிபோல் இலேசாகத் தெரிந்தது. அவனுக்குச் சற்றுப் பின்னால், பள்ளி மாளிகையின் பணிப் பெண்களுக்குரிய பகுதியிலிருந்து வெளியேறிய ஒரு கூடைக்காரி அந்தச் சாலையோரமாகச் சென்று கொண்டிருப்பதும் புலனாகியது.

ஏக்கப் பெருமூச்சுடன் சாளரத்து மேல் சாய்ந்தவாறு, தொலைவிலே செல்லும் அவ்வாலிபனையே பார்த்துக் கொண்டிருந்தாள் உத்தமசீலி. தன்னுடைய உயிரின் ஒரு பகுதியே அங்கு நடந்து போவது போல் இருந்தது அவளுக்கு.

'இப்படியே அவன் எவ்வளவு தூரம் நடந்து செல்வான்?' என்று

எண்ணிக் கவலையடைந்த அவள் மனத்திலே இன்னொரு பீதி மயமான கேள்வியும் எழுந்தது. 'அவன் ஏன் தனக்கு வாகனமோ, வேறு காவல் துணையோ வேண்டாமென்று சொன்னான்? சம்பிரதாய மரியாதைக்காக அவ்வாறு மறுத்துச் சொல்லியிருப்பானோ? நானும் அதை உண்மை என்று நினைத்துத் தனியாகச் செல்ல அனுமதித்து விட்டேனே! ஏதோ ஒரு காரணத்தால் வெளியே நடமாட முடியாத சங்கடம் அவனுக்கு ஏற்பட்டதால்தானே சேதியக் கலைஞரிடம் போய்ப் புகலடைந்திருக்கிறான்? அப்படிப்பட்ட பரிதாப நிலையில் இருப்பவன் தன்னந்தனியே இத்தனை நெடுந் தூரப் பயணத்தை மேற்கொள்ளலாமா? பெருவளநல்லூர் போய்ச் சேர்வதற்குள் இடைவழியிலே அவனுடைய சொந்த எதிரிகளால் அவனுக்கு ஏதேனும் ஆபத்து நேர்ந்து விட்டால் என்ன செய்வது? ஒருகால், கட்டவிழ்த்துவிட்டிருக்கும் சளுக்கிய வீரர்களேகூடக் கண்மூடித்தனமாக அவனுக்கு இன்னல்கள் விளைவித்து விடலாமே!'

பதறித் துடித்த அவள், என்ன செய்வதென்று தெரியாமல் அங்கும் இங்குமாக அலை மோதினாள். பளீரென்று அவளுக்கோர் எண்ணம் தோன்றியது. 'பல்லவபுரம் எல்லை வரையிலாவது அவனைப் பின்தொடர்ந்து போய், திரும்பி வந்தால் என்ன? அப்படிச் செய்தால்தான் என் மனமும் ஆறுதல் பெறும்; அவனுக்கும் அது ஒரு பாதுகாப்பாக அமையும்.'

அவள் அவசரமாகப் போய், கையிலிருந்த ஓவியச் சுருளைத் தன் ஆபரணப் பேழைக்குள் வைத்துப் பூட்டி அதன் தாழக்கோலை (சாவி) இடுப்பிலே செருகிக் கொண்டு, ஒரு பச்சை நிறப் போர்வையால் தன்னை நன்றாகப் போர்த்தியவாறு மேன்மாடத்தை விட்டு மளமளவெனக் கீழே இறங்கி வந்தாள். அங்கு நின்ற ஒரு பணிப் பெண்ணைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு பல்லவபுரம் சாலையை நோக்கிப் புறப்பட்டாள்.

பூஞ்சை இருள் பூசத் தொடங்கியிருந்த அந்த நேரத்தில், பல்லவபுரத்திலிருந்து ஆலம்பாக்கம் செல்லும் அந்தச் சிறிய சாலை வெறிச்சோடிக் காணப்பட்டது. பணிப் பெண் பின்தொடர விரைந்து வந்து சாலையில் ஏறிய உத்தமசீலி, தொலைதூரத்துக்கு அப்பால் தன் பார்வையை எறிந்து நோக்கினாள்.

அதோ, அந்த ஓவியன் நடந்து செல்வது நிழலாட்டம்போல் தெரிகிறது. அவனுக்குப் பின்னால் அந்தக்



"" நான் பத்திரிகைகளுக்குக் கதைகள் அனுப்பினேன். அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை !""

"" ஏற்றுக் கொள்ளும்படியா நீங்க அனுப்பணும்! நான் அப்படித்தான் அனுப்பினேன், ஏற்றுக் கொண்டார்கள்.""

"" நீங்க என்ன அனுப்பினீர் ?""

""ஒரு வருஷ சந்தா அனுப்பினேன்!""

கூடைக்காரியும் போய்க் கொண்டிருக்கிறாள். அவன் பக்கம் திரும்பி அவன் ஏதோ கேட்கிறான். பிறகு, மேலே நடக்கிறான்!....

உற்சாகமடைந்த உத்தமசீலி, தன் கண்ணின் பார்வையிலிருந்து அவன் கடந்து சென்றுவிடக் கூடாதே என்ற பரபரப்புடன் வெகுவேகமாக நடக்கலானாள். அந்த அமைதியான இனிய சூழலில் நடந்து செல்வது அவளுக்கு ஓர் இன்ப அநுபவமாக இருந்தது. அத்தியந்தகாமன் முன்னே செல்ல, அவனைத் தான் பின்தொடர்ந்து செல்கிறோம் என்ற எண்ணம் அவள் மனத்துக்குப் பெருமகிழ்ச்சியை அளித்தது: இனம் புரியாத ஒரு கவலை செறிந்த கிளுகிளுப்பையும் அது ஊட்டியது: இப்படியே அவனைப் பின்தொடர்ந்து காலமெல்லாம் போய்க் கொண்டிருக்க மாட்டோமா என்ற ஒரு விந்தையான ஏக்கமும் அவளது நெஞ்சத்திலே ஊறிப் படர்ந்தது.

அவனைவிட அவள் வேகமாக நடந்ததால், அவளுடைய பார்வையிலிருந்து அவன் மறைய முடியவில்லை. இருளின் ஆதிக்கம் மேலோங்கிச் சென்றாலும் அவளது தீட்சண்யமான கண்கள் அவன் உருவத்தை ஸ்பரிசித்துக் கொண்டேதான் இருந்தன.

அடேயப்பா, எவ்வளவு சீக்கிரம் அவன் எத்தனை தூரத்தைக் கடந்து வந்து விட்டிருக்கிறான்! அதோ, ஆலம்பாக்கம் என்னும் அந்தச் சிற்றூர் கூடக் கண்ணுக்குப் புலனாகிறது!...

'ஆமாம்; இந்நேரத்திலே, எல்லையும் இந்த ஓவியன் வரைந்து கொடுத்த

## யார் வரைந்தது ?

"சார், மணியார்டர்!"

தபால்காரர் புதியவர் அந்தப் பகுதிக்கு. எனவே, வாசலிலிருந்தே கூப்பிட்டு விட்டுத் தயங்கி நின்றார்.

வீட்டு எசமானர் ஹாலுக்கு வந்தார். தபால்காரரையும் உள்ளே வருமாறு அழைத்தார். ஹாலை விதம் விதமான படங்கள் அலங்கரித்திருந்தன. தபால்காரர் மணியார்டர் பாரத்தை அவர் கையெழுத்துக்காகக் கொடுத்து விட்டு ஹாலில் உள்ள படங்களைச் சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டிருந்தார். அதே சமயம் துறுதுறு வென்று ஒரு பாலகன் ஓடி வந்தான். வயது எட்டு இருக்கும். தபால்காரர் பணத்தை எண்ணிக் கொடுத்துக் கொண்டே, "உங்கள் பையனுக்குச் சித்திரத்தில் பற்றுதல் அதிகம் இருக்கும் போலிருக்கிறதே! நிறையப் படங்கள் போட்டிருக்கிறானே! இவன் ஆர்வத்தை வளருங்கள்! பிற்காலத்தில் இவன் நல்ல சித்திரக்காரனாக வரக் கூடும்!" என்றார்.

அவர் அப்படிச் சொன்னது யாரிடம் தெரியுமா? புகழ் பெற்ற சைத்திரிகரான பிகாசோவிடம்! எந்தப் படங்களைப் பார்த்து விட்டு? சொல்லவும் வேண்டுமா? பிகாசோவே வரைந்த படங்களைப் பார்த்துவிட்டுத்தான் !

ஒளியத்தையும் பார்ப்பதற்காகத் தளபதி வில்லவன் இலைத்துறைப் பள்ளிக்கு வந்திருப்பாரோ? இன்று மாலைக்குள் அவர் திரும்பி வருவதாகச் சொல்லி விட்டுப் போனாரே!'

இவ்வாறு ஓர் எண்ணம் தோன்றவே, உத்தமசீலி தன் நடை வேகத்தைக் குறைத்துக்கொண்டு தயங்கி நின்றாள். 'திரும்பி விடலாமா? இன்னும் கொஞ்ச தூரம் போகலாமா?.... வேண்டாம்; இது வரையில் அவனைப் பின்தொடர்ந்து வந்ததே போதும். இனித் திருப்தியுடன் திரும்பி விடுவது தான் நல்லது.'

அவள் மிரட்சியுற்று நிமிர்ந்தாள். எங்கே அந்த வாலிபன்? இதற்குள் அவன் எங்கு போய் மறைந்தான்? அவனுக்குப் பின்னால் சென்று கொண்டிருந்த அந்தக் கூடைக்காரியும் இப்போது காணோமே!

பரபரப்படைந்த உத்தமசீலி விரைந்து நடந்து கொண்டே சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தாள்.

'அதோ, அந்த ஒளியனின் உருவம் தெரிகிறது....! ஆனால்.... ஆனால்.... அவன் சாலையை விட்டு வலப்பக்க வாட்டில் திரும்பி நடக்கிறானே ?.... இதுவரை அவனுக்குப் பின்னால் வந்து கொண்டிருந்த கூடைககாரி இப்போது முன்னே சென்று அவனை அழைத்துப் போவது போல் தோன்றுகிறதே?...'

சட்டென்று நின்ற அவள் தன் கண்களை நிமிண்டி விட்டுக் கொண்டு மீண்டும் அவர்களைக் கவனித்தாள்.

அவ்விருவரும் அந்தச் சாலையோரத்திலிருந்த சிறிய இல்லம் ஒன்றை நோக்கிச் சென்றுகொண்டிருந்தனர்!

திகைப்பும் வியப்புமாகப் பிரமித்து நின்ற உத்தமசீலியின் நினைவிலே பளிச் சென்று ஒரு விஷயம் வந்து மோதியது: 'ஓ..... இது அந்த ஆடுகோபடு இளங்காரிக்குடையான் என்பவனின் இல்லம் அல்லவா? அன்றொரு நாள் பெருவளநல்லூரிலிருந்து பல்லவபுரத்துக்கு நான் பயணமாகி வந்தபோது இவ்விடத்தில் சிவிகையை நிறுத்தித் தானே அந்த இடையப் பெண்ணிடம் இளநீர் வாங்கிப் பருகினேன்? அது மட்டுமின்றி, அவளிடமிருந்து என் பட்டோலையைப் பெற்றுச் சென்ற நிகழ்ச்சியும் இங்குதானே நடந்தது?'

பயப்பிராந்தியுடன் தலையசைத்துக் கொண்ட அவள், இன்னொரு வினாவையும் தன்னுள்ளே எழுப்பினாள்: 'நேரே பெருவளநல்லூருக்குப் போக வேண்டிய அத்தியந்தகாமன், இந்த இல்லத்துக்கு ஏன் செல்கிறான்? அவனை அழைத்துச் செல்லும் அந்தக் கூடைக்காரி யார் ?' — இவ்விஷயத்தை எப்படியும் தெரிந்துகொண்டு தான் இங்கிருந்து போக வேண்டும் என்ற திடமான முடிவுடன், தனக்குத் துணையாக வந்த பணிப்பெண்ணைச் சற்றுத் தொலைவிலேயே நிற்கச் சொல்லிக் கட்டளையிட்டு விட்டு, இருளோடு இருளாக ஓசையின்றி நடந்து போய் அந்த இல்லத்துக்கு எதிரேயிருந்த பவழமல்லி மரமொன்றின் இருட்செறிவில் மறைந்து நின்று, தன் பார்வையைத் தீர்க்கமாகச் செலுத்திக் கவனித்த உத்தமசீலியின் உள்ளமும் உடலும் அதிர்ச்சியுற்றன.

ஆமாம்; அந்த இல்லத்தைச் சார்ந்த சித்திரத் திண்ணையிலே அவ்வொளியனை அழைத்துப் போய் அமரச் செய்த கூடைக்காரி சேதிராயக் கலைஞரின் சமையற் காரியான அருந்தமதி என்பவளேதான்!

அந்த மூதாட்டி பரபரப்புடன் உள்ளே சென்ற சிறிது நேரத்துக் கெல்லாம், இடையப் பெண் கோலத்திலிருந்த சோழ இளவரசி இளங்கோப்பிச்சி வியப்பும் மகிழ்ச்சியுமாக வெளியே வந்து, "பல்லவ மன்னர் பரமேசுவர வர்மருக்கு என் பணிவன்பான வணக்கம் உரித்தாகும் !" என்று கூறிக் கரம் குவித்தாள்.

கையிலொரு சிறு விளக்குடன் அவளைப் பின்தொடர்ந்து வந்த சோழிய ஆபத்துதவி வீரனை சம்புவராயனும் அவ்வாறே கூறி வணங்கி எழுந்தான். (தொடரும்)

'முகராசி'யோடு நீங்கள் காலையில் விழித்தெழ முன்னேற்பாடு!

# ரிச்சர்ட் ஹட்நட் த்ரீ ப்ளவர்ஸ்

## க்ளென்ஸிங் கோல்ட் க்ரீம்

முகப் பொலிவுக்கு மிகச் சிறந்த அழகுசாதனமான ரிச்சர்ட் ஹட்நட் த்ரீ ப்ளவர்ஸ் க்ளென்ஸிங் கோல்ட் க்ரீம் — எளிய முறையில் அற்புதமான பராமரிப்பு. தூங்கச் செல்லுமுன் முகத்தில் தேய்த்தால், இரவோடிரவாக உங்கள் சருமத்தை ஊடுருவிச் சுத்தம்செய்து, ஊட்டமளித்துப் புது மெருகு தருகிறது. மறுநாட் காலை 'அல்லி மலர்ந்ததுபோல்' மெல்லிய முகத் தெளிவுடன் விழித்தெழுவீர்கள்.




அழகுபடுத்த முன்னோட்டமாக த்ரீ ப்ளவர்ஸ் வேனிஷிங் க்ரீம் தடவிக் கொண்டீர்களானால், எழிலுக்கு அதுவே போதுமான ஆரம்பம். இன்றே துவங்குங்கள்; முகப் பொலிவுக்கு அன்றாடம் ரிச்சர்ட் ஹட்நட் த்ரீ ப்ளவர்ஸ் க்ரீம்களை உபயோகியுங்கள். உங்கள் வதனத்தின் வனப்பை வளரச் செய்கிறது த்ரீ ப்ளவர்ஸ்!

**வார்னர்-லாம்பர்ட் பார்மஸூட்டிகல் கம்பெனி**
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யூ.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது).



WL. 1373 TM



# குடும்பத்தின் பெருமை

மெட்ரிக் எடைகள் நன்கு பின்னப்பட்ட ஒரு குடும்பமாகும். அக்குடும்பத்தின் தலைவர் கிலோ. மெட்ரிக் குடும்ப நபர்களை வேறு குடும்பத்துடன் அதுவும் முக்கியமாக சேர், வீசை போன்ற இதர குடும்பத்துடன் ஒத்துப் பார்க்காதீர்கள். மெட்ரிக் குடும்பத்தின் உண்மையான மதிப்பை அறிந்துகொண்டு அவைகளுக்கு பங்கமேற்படாமல், அப்படியே உபயோகியுங்கள். இல்லாவிட்டால், கிலோ குடும்பத்திற்கு எரிச்சல் ஏற்பட்டு, ஒத்துழையாமை இயக்கத்தை ஆரம்பித்து, காரியத்தை தாமதப் படுத்தும், உண்மை. ஒவ்வொரு குடும்பத்திற்கும் தனித்தனி கௌரவம் உண்டல்லவா!

துரிதமான சேவைக்கும், நேர்மையான வர்த்தகத்திற்கும்

## முழு மெட்ரிக் யூனிட்டுகளில்

## பொருள்களை வாங்குங்கள்

# படித்துப்  பாருங்கள்

## Two Thousand years of Tamil Literature

சங்கத் தொகை நூல்கள், பாட்டு, அற நூல்கள், பிரபந்தங்கள் ஆகிய பல பிரிவுகளில் கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளாகத் தமிழ் இலக்கியம் வளர்ந்த முறையை ஆங்கிலத்தில் பாங்குறத் தெரிவித்திருக்கிறார் இந்த ஆசிரியர். சொற்களும், தொடர்களும் மிகப் பழைய இலக்கண வழக்குகளும் பொருந்திய சங்க நூல்களிலிருந்து பிற்கால நூல்களின் பகுதிகள் வரை தமிழ் மூலத்தோடு ஆங்கில உரையாக்கமும் தேவையான இடங்களில், அடிக் குறிப்பு விளக்கமும் பொருந்தி நூல் செவ்வனே அமைந்திருக்கிறது.

புறநானூற்றுப் பகுதிகள் சிலவும், பத்துப் பாட்டில் சில பிரிவுகளும், கலித்தொகையில் தேர்ந்தெடுத்த பகுதிகள் சிலவும், ஐங்குறு நூறு, சிலப்பதிகாரம், மணிமேகலை, அற நூல்கள், சித்தர்கள் பாட்டு, இலக்கியங்களிலிருந்து சில பகுதிகளும், தேவாரம், திவ்வியப் பிரபந்தம் முதலியவற்றில் குறிப்பிட்ட பகுதிகளும், தாயுமானவர், இராமலிங்க வள்ளலார் பாடற் பகுதிகளும், ஆங்கில உரையாக்கமும், குறிப்பு விளக்கங்களும், தமிழ் மூலமுமாக நன்கு அமைந்துள்ளன. சமயம், தத்துவம் ஆகிய தலைப்புக்களிலும் நல்ல நல்ல பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

**திறமான புலமை எனில்—அதைப்**
**பிற நாட்டார் வணக்கம் செய்திடல்வேண்டும்**

என்று பாரதியார் பாடியுள்ளது போன்று அரும் பெரும் பணியைச் செய்துள்ளார் இந் நூலாசிரியர் திரு ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளை அவர்கள். இரண்டாயிரம் ஆண்டுகளாகத் தமிழ் இலக்கியம் வளர்ந்துள்ள சிறப்பை ஆங்கிலம் அறிந்தவர்களும் விளங்கிக் கொள்ளும் சீரிய பணியைத் தேர்ந்தெடுத்துச் செய்திருக்கிறார். முந்நூற்றெழுபது பக்கங்களுக்கும் அதிகமாகவுள்ள இந்நூல் ஆங்கிலமறிந்த வெளிநாட்டினர் ஒருவர்க்கு இரண்டாயிரம் ஆண்டுகளாகத் தமிழ் வளர்ந்துள்ள வளப்பத்தை நன்கு எடுத்துக் காட்டும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. இரண்டாயிரம் ஆண்டுகளின் தமிழ் இலக்கிய வளர்ச்சியைச் சாராம்சமாக எடுத்துக் காட்டுவதாக அமைந்துள்ளது புத்தகம். பாராட்டத்தக்க பணி.

ஆசிரியர்: திரு ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளை, பி.ஏ., பி.எல்., அண்ணாமலைப் பல்கலைக் கழகம். விற்பனை உரிமை: தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை — 1. விலை ரூ. 8.25.

## வள்ளுவர் தனித்தன்மை

தமிழ் அற நூலாகிய திருக்குறளில் சில கருத்துக்கள் தனித் தன்மையோடு கூறப்பட்டுள்ள நிலையை இந் நூலாசிரியர் ஆறேழு கட்டுரைகளால் விளக்குகிறார். மற்ற நூலாசிரியர்களைக் காட்டிலும் திருவள்ளுவர் சிறந்து விளங்கும் இடங்களை மேற்கோள்களுடன் நல்ல முறையில் விளக்க முயன்றிருக்கிறார். இன்பத்துப் பாலைப் பற்றிய முதல் கட்டுரை மிக ஆழமான ஆராய்ச்சி. 'குற்றவாளிகளும் வள்ளுவரும்' — என்ற கட்டுரையிலும் கருத்தமைதி சிறப்பாக வாய்த்திருக்கிறது. உலகத்தின் சிறந்த பொருள் நூலாசிரியர்கள் எல்லாரும் இப்பகுதியில் ஒப்புநோக்கப்பட்டிருக்கிறார்கள். இது தொடர்பாக உள்ள மற்றக் கட்டுரைகளும் நன்கு வாய்த்துள்ளன; 'வள்ளுவர் நோக்கில் பெண்கள் நிலை' என்ற கட்டுரைப் பகுதிகளிலும் ஆராய்ச்சி நுணுக்கம் இருக்கிறது.

ஆசிரியர்: மு. அண்ணாமலை, எம். ஏ.; வெளியீடு: தொல்காப்பியர் நூலகம், 202, ஜானி ஜான் கான் தெரு, சென்னை — 14; விலை ரூ. 2.50; பரிசுப் பதிப்பு ரூ. 3.00.

## சித்தர்கள் கண்ட விஞ்ஞானம்-தத்துவம்

விஞ்ஞானம், மெய்ஞ்ஞானம், எளிமையான தத்துவங்கள் ஆகியவற்றைத் தமிழ் நாட்டுச் சித்தர்கள் மேற்கொண்டு கூறினாற் போல அத்துணைச் சிறப்பாக எவராலும் கூற முடியாதென்பதனை யாவரும் ஒப்புக் கொள்வர். சித்தர்களின் பெருமை யெல்லாம் தங்கள் மனத்தில் உள்ள கருத்துக்களைக் கூறுவதற்கு அவர்கள் மேற்கொண்ட எளிய நடை. சித்தர்களின் சிறப்பு, கொள்கை, விஞ்ஞான ஆராய்ச்சி போன்ற பொதுத் தலைப்புக்களுக்கு அப்பால் ஏறக்குறையப் பன்னிரண்டுக்கு மேற்பட்ட சித்தர்கள் தனித் தனித் தலைப்புக்களில் இந்நூலின்கண் விளக்கப் பட்டிருக்கிறார்கள். இறுதியாக ஔவைக் குறளும் இடம் பெற்றிருக்கிறது.

சாமி சிதம்பரனார் அவர்களின் தெளிந்த புலமையில் உருவான இந்த நூல் சித்தர்களின் மனக் கருத்துக்களையும், தத்துவங்களையும் நன்கு விளக்குகிறது.

ஆசிரியர்: சாமி சிதம்பரனார்; விற்பனை உரிமை: என். சி. பி. எச். (பிரைவேட்) லிமிடெட், 6, நல்ல தம்பி செட்டி தெரு, சென்னை — 2; விலை ரூ. 3.00.

## மணிவாசகர், மூலர் மணிமொழிகள்

தமிழ்ப் புத்தகாலயத்தின் அருள் நெறித் தொடர் வெளியீடுகளில் நான்காவதாகிய இந்த நூல் மணிவாசகர் — திருமூலர் மணிமொழிகளைப் பற்றியதாக அமைந்திருக்கிறது. முப்பது கட்டுரைகளில் நூல் முழுமையாக நிறைவுறுகிறது. திருவாசகத்தில் அங்கங்கே சிறந்ததொரு பாட்டை எடுத்துக் கொண்டு தலைப்புக் கொடுத்து விளக்கியுள்ள முறை மிக நயமாயிருக்கிறது. தமிழ் அற நூல், நீதி நூல் ஆசிரியர்களில் மிகச் சிறந்த தத்துவ ஞானியான திருமூலரின் பாடல்களும் இவ்வாறே தனித் தனித் தலைப்புக்களில் தேர்ந்தெடுக்கப்பட்டு விளக்கம் பெறுவன

நவை. 'உள்ளத்தின் உள்ளே உளபல தீர்த்தங்கள்' என்ற பாட்டுக்கும் 'தம் இடர் பட்டுத் தளிர் போல் தயங்கினும்' என்ற பாட்டுக்கும் விளக்கம் நன்றாக எழுதப்பட்டிருக்கிறது. ஆசிரியரின் எல்லாச் சிறந்த நூல்களையும் போல் இந்த நூலும் தமிழகத்துக்குப் பயன்படும் பெருமை வாய்ந்தது.

ஆசிரியர்: சாமி சிதம்பரனார். வெளியீடு: தமிழ்ப் புத்தகாலயம், 393, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை-14; விலை ரூ. 2.50.

## கீதா யோகம்

கீதாசாரியனை கண்ணனைப் பரிபூரண யோகியாகக் காண்கிறது உலகம். அவன் இயற்றிய கீதை பரம யோக நூல். பார்த்தனைப் போருக்குத் தூண்டிய நூல் மட்டும் அல்ல; பரமார்த்திகத்துக்கும் வழி வகுத்துத் தந்த நூலாகும். பரமாத்மாவைப் போலவே, எந்தக் காலத்துக்கும் எத்தகைய மக்களுக்கும் வழிகாட்டியாக விளங்கும் நூலாகும். மக்கள் தங்கள் தங்கள் அறிவுக்கும் ஆற்றலுக்கும் ஏற்ப அதனுள் உறைந்திருக்கும் பொருளைக் கண்டு மகிழலாம்; உய்யலாம். எனவேதான் எத்தனை எத்தனையோ உரைகள் கீதைக்கென்றும் இப்பெரு நூலுக்கு ஏற்பட்டுள்ளன; ஏற்பட்டு வருகின்றன. கவியோகி சுத்தானந்த பாரதியார் இந்த யோக நூலுக்குத் தெளிவான உரைதந்து கீதா யோகமாகச் சமைத்துள்ளார்.

கிடைக்குமிடம்: சுத்தானந்த நூலகம்; யோக சமாஜம், சென்னை-20; விலை: ரூ. 2.50.

---

# அவன் பிழைப்பு!

என்ன படித்து என்ன? வேலை கிடைப்பது குதிரைக் கொம்பாக அல்லவா இருக்கிறது? போர்க் காலமாயிருந்தாலும் கிடைப்பவர்களுக்குத்தான் வேலை கிடைக்கிறதே யொழிய எல்லாருக்குமா கிடைத்து விடுகிறது?

சன்னாசி நாலு கிளாஸ் படித்தவன் தான். அவனும் மானமாகப் பிழைக்க வேண்டும் என்று எத்தனையோ முயன்றான்! அவன் முயற்சி நிறைவேறவில்லை. வயிறு கேட்கிறதா? வயிற்றுப் பாட்டைக் கவனிப்பதற்காகக் கையில் அவன் திருவோட்டை ஏந்தும்படியாகி விட்டது. ஆம்! பிச்சை யெடுத்து வயிறு வளர்க்கும்படியாகி விட்டது.

இப்படியிருக்கும் பொழுதுதான், 'நாட்டில் பிச்சைக்காரர்கள் தொல்லை பெரும் தொல்லையாகி விட்டது. அதற்கு ஏதாவது தீர்வு காண வேண்டும். அரசாங்கம் முன் வந்து இதனை ஒழிக்க வழி வகை செய்ய வேண்டும்' என்ற பேச்சு அடிபடலாயிற்று.

சன்னாசி நாலெழுத்துப் படித்தவனு? பிச்சைக்காரர்களின் சார்பில், அவர்கள் நலனைக் கவனிக்க ஆவன செய்ய முயன்றான். தன் பேட்டையில் உள்ள பிச்சைக்காரர்கள் அனைவரையும் ஒன்றுகூட்டி ஒரு சங்கம் நிறுவி, அவர்கள் உரிமைகளையும் கடமைகளையும் நலனையும் நிலைநாட்ட முயன்றான்.

இப்படியாக அவன் பிச்சைக்காரர்கள் நலனுக்கென்று பாடுபட முயலவே, அச்சங்கத்தினர் ஒரு நல்ல முடிவுக்கு வந்தனர். அம் முடிவு இதுதான் 'சன்னாசித் தம்பி நமக்காக இரவும் பகலும் பாடுபடுகிறான். அதற்குச் சரியாகப் பிச்சை எடுக்கப் பொழுதிருப்பதில்லை. அரை வயிற்றுக்குக் கூட உணவு கிடைப்பது அரும் பாடாகி விட்டது. எனவே, நாமெல்லாரும் ஒன்று கூடி, அதற்கு வயிற்றும் பசி ஏற்படாமல் இருக்க வழி செய்ய வேண்டும். நம் நலனைக் காக்க முழு நேரமும் செலவிடும் தம்பிக்கு ஒரு வகை செய்ய வேண்டும். நாம் அனைவரும் நமக்குக் கிடைக்கும் பிச்சைப் பணத்திலிருந்து மாதம் தலா ஒரு ரூபாய் அதற்குக் கொடுத்துவிட வேண்டும்.' இந்த முறையைச் செயலாக்கவே, சன்னாசி கையேந்திப் பிச்சை பெறுவதை நிறுத்தினான். நல்ல வெள்ளை வேட்டி கட்டினான். வயிற்றுக் கவலை அவனை விட்டு அகன்றது. ஆயினும் அவனை யறியாமல் ஒரு மனக் கவலை மட்டும் அவனை அரித்தெடுத்தது. அது என்ன கவலை என்பதும் அவனுக்குச் சரிவர விளங்கவில்லை.

இப்படிச் சில மாதங்கள் ஓடியபின், அவனுடைய பால்ய நண்பன் ஒருவன் அவனைச் சந்தித்தான். "நீ பிச்சை யெடுத்து வயிறு வளர்க்கிறாய் என்பதைக் கேட்க எனக்கு மிகவும் மன வருத்தமாயிருந்தது. இப்பொழுது அதை விட்டொழித்து விட்டு நல்ல படியாகப் பிழைக்கிறாய்; பணம் உன்னைத் தேடி வருகிறது என்று கேட்டு மகிழ்ச்சியுற்றேன்! எப்படியானாலும் என்ன, நீ நன்றாக இருந்தால் சரி!" என்றான் அவன்.

சன்னாசி பெருமூச்சு விட்டான். அவன் உள்ளத்தை அரித்தெடுத்த கவலை மேலே மிதந்து வந்தது. "என்ன பிழைப்போ, போ! முன்பாவது நான் தர்மவான்களிடம் பிச்சை யெடுத்துப் பிழைத்தேன். இப்போதோ பிச்சை யெடுத்துப் பிழைக்கும் பிச்சைக்காரர்களிடமே பிச்சை தண்டிப் பிழைக்கிறேன். என் பெருமையை நீயும் நானும்தான் மெச்சிக்கொள்ள வேண்டும்!" என்றான், மிக நீண்ட பெருமூச்சு விட்டவாறு.



சன்னாசியின் இந்தப் பேச்சைக் கேட்ட பின், அடுத்த கேள்வியென அவன் நண்பன் நின்றிருந்தால், அதில் அதிசயப்படுவதற்கு என்ன இருக்கிறது?

—குறும்பன்

---

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.




சுத்தமே சுகமென்பார், குளிப்பதே குஷியென்பார்
லைப்பாய் தேய்த்து நீராடுவோர். புழுக்கம், சோர்வு—
அழுக்கிலுள்ள கிருமிகள்—அனைத்தையும் அறவே விரட்டிப்
புதுமலர்ச்சியூட்டுவதில் லைப்பாய்க்கு எதுவுமே ஈடாகாது.
நம் குடும்ப முழுமைக்கும் நல்வாழ்வு நல்குவது
லைப்பாய் நல்லுறவு...எல்லாம் இன்பமயம்!

**லைப்பாய்** இருக்குமிடம், அதுவே
ஆரோக்கியம் இருக்குமிடம்!

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

L.30-X52 TM

